# ஸ்ரீகனகதாஸரின்
# ராம தான்ய சரிதெ
## (தமிழில் அர்த்த விளக்கங்களுடன்)

தமிழில் உரை எழுதி வெளியிட்டவர் :

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
89044 58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com
dasa-sahitya.blogspot.com

# ஸ்ரீகனகதாஸரின்
# ராம தான்ய சரிதெ
# (தமிழில் அர்த்த விளக்கங்களுடன்)

**ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால், ஸ்ரீவேணுகோபால விட்டல தாஸரின் ஆராதனை நாளான, வைசாக சுத்த த்விதியை, ஏப்ரல் 22, 2023 அன்று இந்தப் புத்தகம் பகவந்தனின் பாதங்களில் சமர்ப்பிக்கப்பட்டது.**

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

**தமிழில் உரை எழுதி வெளியிட்டவர்:**
ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்
பெங்களூரு
Ph: 89044 58276
haridasa.vijayam@gmail.com

**இந்தப் புத்தகம் வெளிவருவதற்கு பொருளுதவி புரிந்த அனைத்து ஹரிபக்தர்களுக்கும் நன்றிகள்.**

## பொருளடக்கம்

## ஸ்ரீகனகதாஸர்

ஸ்ரீவ்யாஸராஜரால் துவக்கப்பட்டு இன்று வரை வந்திருக்கும் ஹரிதாச சாகித்ய பரம்பரையில், கனகதாசரின் பங்கு என்ன என்பதை, அவரது கிருதிகளை மற்றவர்களின் கிருதிகளுடன் ஒப்பிட்டு ஆராய்ச்சி செய்தால் தெரிய வரும். மற்ற ஹரிதாசர்களைப் போலவே இவரும் மாத்வ தத்வத்தை பரப்பி, பக்தி சாதனை செய்திருப்பதே இவரது பங்கு / சாதனை ஆகும். இப்படி மாத்வ மத தத்வங்களை பின்பற்றிய ஹரிதாசர்கள் ஸகுணபக்தர்கள் எனலாம்.

அவர்களின்படி ஸ்ரீஹரியே சர்வோத்தமன். ஸ்வதந்த்ரன். குணாதீதன். தோஷங்கள் அற்றவன். ஸர்வவியாப்தன். ஸர்வஷக்தன். ப்ராக்ருத தேகம் இல்லாதவன். இந்த ஜகத் ஸத்யம். பஞ்சபேதங்கள் உண்மை. ஸ்ரீஹரி பிம்பரூபி. ஜீவர்கள் பிரதிபிம்பர்கள். வாயுதேவர் பரமகுருகள். இப்படியாக அனேக தத்வங்கள், சித்தாந்தத்தின் முக்கிய கருத்துகளை அனைத்து ஹரிதாசர்களின் கிருதிகளிலும் பார்க்கலாம்.

கனகதாசர் முதலில் ஸ்ரீவைஷ்ணவ தத்வங்களை ஒப்புக்கொண்டு, பின்னர் ஸ்ரீவியாசதீர்த்தரின் சம்பந்தம் பெற்று, அவரின் சிஷ்யத்வத்தைப் பெற்று, அங்கித, தீக்ஷைகளைப் பெற்று, மாத்வ மத தத்வங்களை பின்பற்றத் தொடங்கி யிருக்கலாம். மாத்வ மதத்தின் குருகளான ஹனும பீம மத்வர்களைப் பற்றி கனகதாசர் பரமபதவீவ குருமுக்யபிராண, எஷ்டு பொகளலி நாம ஆகிய கிருதிகளில் பாடியிருப்பதைப் பார்க்கிறோம்.

தனு நின்னது ஜீவன நின்னது – என்று ஜீவர்களின் தத்த ஸ்வாதந்த்ர்யத்தைப் பற்றி சொல்கிறார். ஹரியின் சர்வோத்தம த்தைப் பற்றி அவரது பல்வேறு கிருதிகள் இருக்கின்றன.

ஸ்ரீஹரி சர்வவியாப்தன் என்பதை: எல்லிருவனோ ரங்க எம்ப சம்ஷய பேடா என்று பாடுகிறார்.

இப்படியே ஹரி நாம மகிமை, ஹரி ஸ்மரணை, ஹரிகீர்த்தனை, வந்தனை, ஆத்மசமர்ப்பணம் ஆகியவை ஸ்ரீகனகதாசரின் கீர்த்தனைகளில் அதிகமாக காணப்படுகின்றன. ஹரிதாஸ்யத்தின் மேல் அவருக்கு உள்ள விருப்பத்தை, அனைவரும் தினமும் பாராயணம் செய்யக்கூடிய 'ஈச நின்ன சரண பஜனெ' என்னும் கேசவ நாமத்தில் பார்க்கலாம். பஞ்சபாவங்கள் எனப்படும் தாஸ்ய, சக்ய, மதுர, வாத்ஸல்ய மற்றும் ஷாந்த பாவங்களில் கனகதாசர் பல்வேறு கிருதிகளை இயற்றியுள்ளார்.

மற்ற ஹரிதாசர்களைப் போலவே கனகதாசரும் தம் பக்தி சாதனைக்கு ராமாயணம், மஹாபாரதம், பாகவதங்களிலிருந்து கதைகளை எடுத்து விளக்கியிருந்தாலும், மக்கள் புகழுமாறு அவற்றிற்கு ஒரு புது அர்த்தத்தையே அவர் விளக்கினார் எனலாம். உதாரணத்திற்கு: பொம்பெயாடவனாடிதே மஹாபாரதத என்னும் கிருதி. இதிலிருந்து கனகதாசர் ஒரு சிறந்த கவி, தர்க்கம் செய்பவர் என்பதை அறியலாம். அனைத்து பிரச்னைகளுக்கும் ஸ்ரீகிருஷ்ணனையே அபராதி (குற்றவாளி) என்ற இடத்தில் நிறுத்தி அவன் மகிமைகளை பாடுகிறார். இதுவே நிந்தாஸ்துதி என்று சொல்லப்படுகிறது.

கனகதாசர் பல தீர்த்த க்ஷேத்திரங்களை தரிசித்து, அங்கு இருக்கும் க்ஷேத்திர மூர்த்திகளைப் பற்றி பாடியிருக்கிறார். ஹரிதாச சாகித்யத்தில் இந்த க்ஷேத்ர, க்ஷேத்ர மூர்த்திகளின் வர்ணனையை பாடுவது ஒரு சம்பிரதாயமாகவே ஆகியிருக்கிறது. திருப்பதி, பேலூர், மேலுகோடெ, ஸ்ரீரங்க பட்டண, உடுப்பி – இவையே கனகதாசர் தரிசித்த முக்கியமான க்ஷேத்திரங்களாகும்.

இவற்றில் உடுப்பி கனகதாசரின் பக்தி ஜீவனத்தில் முக்கிய இடத்தைப் பிடித்திருக்கிறது. கனகதாசர் தம் வாழ்க்கையில் பல்வேறு ஆண்டுகளை உடுப்பியில் கழித்திருக்கிறார். அங்கிருக்கும் ஸ்ரீகிருஷ்ணன் அவரின் பக்திக்கு மெச்சி, அவருக்கு அங்கு தரிசனம் அளித்தான் என்று சொல்லப்படுகிறது. அதுவே 'கனகன கிடிகி' என்று இன்றும் அனைவரும் தரிசனம் செய்யும் வழியாக இருக்கிறது.

கனகதாசர் மோஹனதரங்கிணி, ராமதான்ய சரிதெ, நளசரித்ரெ, ஹரிபக்திசார ஆகியவற்றை இயற்றி, அதன்மூலம் ஹரிதாசர்களின் பக்தி மார்க்கத்தை விளக்கியிருக்கிறார். மோஹன தரங்கிணியில் த்வாரகையின் வர்ணனை, கிருஷ்ண ருக்மிணிகளின் வர்ணனை ஆகியவற்றில் அவரது பக்தி பாவம் நன்கு வெளிப்படுகிறது. ராமதான்ய சரிதையில் கவியின் புரட்சிகர மனோபாவம் வெளிப்படுகிறது. மற்ற ஹரிதாசர்களில் அங்கங்கு வெளிப்படும் இந்த பாவம், கனகதாசரிடம் முழுமையாக தென்படுகிறது. நள தமயந்தியின் பரிசுத்தமான ப்ரேமத்தை இவரது நளசரித்ரெ சொல்கிறது. ஹரிபக்திசாரத்தில் பகவந்தனின் அவதாரங்கள், குண நலன்கள், காருண்யம் ஆகியவற்றை விளக்குகிறார்.

கீர்த்தனைகளில் கனகதாசரின் இந்த கவி மனோபாவம் அற்புதமாக வெளிப்பட்டிருக்கிறது. அவரது ஆத்ம அனுபவங்களை மிகவும் அழகாக பல்வேறு கிருதிகளில் விளக்கியிருக்கிறார். இதற்கு பல்வேறு உதாரணங்களை சொல்லலாம்.

கனகதாசர் பிராமணர் அல்லாதவர். சமூகத்தின் கீழ்மட்டத்தில் இருந்து, அவர்களுடன் நன்கு பழகியவராகையால், மற்ற ஹரிதாசர்களை ஒப்பிட்டால், இவரது சமூக, நீதி கருத்துகள் மிகவும் புரட்சிகரமானவையாக இருக்கின்றன. சமூக நீதி, சம நிலை, அவற்றின் முன்னேற்றம் ஆகியவற்றை அவரது கிருதிகளில் மிகவும் தெளிவாக எடுத்துரைத்திருக்கிறார். ஜாதி

மதங்களின் பேச்சு வந்தாலே, கனகதாசர் கோபம் கொண்டு வார்த்தைகளில் விளையாடுகிறார். ஆத்மா யாவ குல? ஜீவ யாவ குல? என்று கேட்கிறார். நீ மாயெயொளகோ நின்னொளு மாயையோ? மற்றும் பல பாடல்களின் மூலமாக, மக்களின் அஞ்ஞானத்தை கண்டித்து, அவர்களை பக்தி மார்க்கத்தில் திருப்ப முயல்கிறார்.

பொதுவாக ஹரிதாச சாகித்யத்தில், பக்திக்கு புரந்தரதாசர், ஞானத்திற்கு ஜகன்னாததாசர், வைராக்கியத்திற்கு கனகதாசர் என்று சொல்லும் வழக்கம் இருக்கிறது. ஆனால், கனகதாசரின் கிருதிகளில் பக்தி ஞான வைராக்கியங்கள் மூன்றும் அதிகமாகவே காணப்படுகின்றன.

தொரெது ஜீவஸபஹுதே ஹரி நின்ன சரணவ – ஆகிய கிருதிகள் அவரது பக்திக்கு சாட்சி. ஔகண்ணினிந்தலெ தேவர நோடண்ணா – ஆகியவை அவரது ஞானத்திற்கும் சாட்சியாக சொன்னால், அவரது வாழ்க்கையையே வைராக்கியத்திற்கு உதாரணமாக சொல்லலாம். அவருக்குக் கிடைத்த புதையலை கொப்பர தேவாலயத்திற்கு காணிக்கையாகக் கொடுத்தது, மனைவி, தாய் இவர்களின் மரணத்தால் வந்த வைராக்கியம், போர்க்களத்தில் பார்த்த ரத்தம், மரணங்களால் வந்த வைராக்கியம் என பல உதாரணங்களை சொல்லலாம்.

இப்படி ஞான, பக்தி, வைராக்கியங்களைக் கொண்டு பல்வேறு கீர்த்தனைகளை இயற்றி, காவியங்களை படைத்து, ஹரிதாச சாகித்யத்திற்கு மட்டுமல்ல. கன்னட சாகித்யத்திற்கே ஒரு கைவிளக்காக, வழிகாட்டியாக இருந்திருக்கிறார். அதுமட்டுமல்லாமல், தன்னுடைய ஆழமான கருத்துக்களை கவிதை வடிவில் இயற்றி, மனிதகுலத்திற்கே ஒரு ஆதர்ச நாயகனாக இருக்கிறார். புரட்சிக்காரராக இருக்கிறார்.

ஆகையாலேயே, வியாசராயர் போன்ற யதிகள், மடாதிபதிகள் அந்த காலத்தில் கனகதாசரை ஆதரித்தார். கௌரவித்தார்.

புரந்தரதாசர் 'இவகெ நாடெல்ல ஹூடுகிதரூ ஈடார காணே' என்று புகழ்த்து பாடினார். இப்படி ஒரு ஆளுமையாக தானும் வளர்ந்து, ஒரு பரம்பரையையே துவக்கி வளர்த்த கனகதாசர் தம் காவிய சக்தியினால் அதற்கு தேவையான சக்தியையும் கொடுத்திருக்கிறார்.

## ராமதான்ய சரிதெ

158 பாமினி ஷட்பதி பத்யங்களைக் கொண்ட ராமதான்ய சரிதெயை ஸ்ரீகனகதாஸர் இயற்றியுள்ளார். ராமாயணத்தில் வருவதாக ஒரு சிறு கற்பனை சம்பவத்தில், ஒரு அற்புதமான கருத்தை சொல்லும் வண்ணம், இந்த கிருதியை ஸ்ரீதாஸர் இயற்றியுள்ளார். இதற்கு முன்னர், இந்த கதை மகாபாரதத்தில் துவங்கி, பின் ராமாயணத்திற்குச் செல்கிறது என்பதை பார்க்கிறோம்.

சூதாட்டத்தில் அனைத்தையும் துரியோதனாதிகளிடம் இழந்த தர்மராஜன், தன் தம்பிகள், திரௌபதி ஆகியோருடன் வனவாசத்திற்கு வருகிறான். அவர்கள் அனைவரும் காம்யக வனத்திற்குச் சென்று தங்கியிருக்க அங்கு சாண்டில்ய முனிவர் வருகிறார். தங்களுக்கு சரியான அறிவுரைகளை வழங்குமாறு தர்மராஜன் கேட்க, முனிவர், சொன்ன சொல் தவறாமல் நேர்மையாக ஆட்சி புரிந்தவர்களில் ஒருவரான ஸ்ரீராமசந்திரனின் கதையை நான் சொல்கிறேன் என்று சொல்லி, இந்த ராமதான்ய சரிதையை துவக்குகிறார்.

ஸ்ரீராமசந்திரன், இலங்கையில் ராவணனுடன் யுத்தம் செய்து, அவனைக் கொன்று, வென்று, பின் சீதையை அழைத்துக் கொண்டு மறுபடி கடல் தாண்டி வருகிறார். அயோத்திக்குச் செல்லும் வழியில் அவர்கள் கௌதம ரிஷியின் ஆசிரமத்திற்கு வருகின்றனர். அங்கு அவர்கள் அனைவருக்கும் சுவையான உணவுகள் பரிமாறப்பட்ட, அப்போது ஹனுமந்தன் ஸ்ரீராமனிடம் 'தானியங்களில் எந்த தானியம் மிகச் சுவையானது?' என்று கேட்கிறார். அதற்கு ஸ்ரீராமன் கௌதம

ரிஷிகளிடம் கேட்க, அங்கிருந்த முனிவர்கள் ஆளுக்கொரு தானியங்களின் பெயர்களை சொல்கின்றனர்.

பின்னர், கௌதம ரிஷிகள், ராகியே சிறந்தது என்று சொல்ல, அரிசிக்கு அது பிடிக்கவில்லை. தன் தரப்பு வாதங்களை அரிசி எடுத்து வைக்க, அதற்கு எதிராக, ராகியும் தன்னுடைய தரப்பினையும், சிறப்பினையும் எடுத்துக் கூறுகிறது. இந்த இரு தானியங்களின் சண்டையையும் பார்த்த ஸ்ரீராமன், இவர்கள் இருவரையும் சிறையில் ஒரு ஆறு மாத காலத்திற்கு அடைத்து விடுங்கள். பின்னர் நான் தீர்ப்பு சொல்கிறேன் என்று சொல்லிவிடுகிறார்.

அதன்படியே, அந்த இரு தானியங்களையும் சிறையில் தள்ளிவிட, ஸ்ரீராமன் மற்றும் அனைவர்களும் அயோத்தியை நோக்கிய தங்களின் பயணத்தை தொடர்ந்தனர். பின்னர், ஏழு மாதங்கள் கழித்து, ஸ்ரீராமன் அயோத்தியில் இருந்தபோது, ஹனுமந்ததேவரை அனுப்பி, அந்த இரு தானியங்களையும் அழைத்து வருமாறு சொல்கிறார். அதன்படியே அவரும் அந்த தானியங்களை கொண்டுவர, அரிசியானது மிகவும் குன்றிப் போயிருக்க, ராகியோ அப்படியே இருந்திருக்கிறது.

இதைப் பார்த்த அங்கிருந்த இந்திரன், நாரதர், கபில முனிவர் ஆகியோர் ராகியே தானியங்களில் சிறந்தது என்று சொல்ல, ஸ்ரீராமனும் அதனை முன்மொழிந்து ராகியே சிறந்தது என்று தீர்ப்பு அளிக்கிறார். தன்னுடைய பெயராக 'ராகவ' என்பதையே ராகிக்குச் சூட்டுகிறார். பின்னர், இதைக் குறித்து கண்ணீர் விட்டு அழுத அரிசியை சமாதானம் செய்தவாறு, தமக்கு பாரபட்சம் என்பதே கிடையாது என்பதை வலியுறுத்தி, அந்த இருவருமே சமம். இருவருமே சமூகத்திற்குத் தேவை என்பதை விளக்குகிறார் ஸ்ரீராமசந்திரன்.

இவ்வாறாக ஸ்ரீராமசந்திரன் ஒரு நேர்மையான தீர்ப்பினை வழங்கியிருக்கிறார் என்று சாண்டில்ய முனிவர்,

தர்மராஜனுக்கு இந்த ராம தான்ய சரிதையை சொல்லி முடிப்பதாக, இந்த கிருதியினை முடித்து வைக்கிறார் ஸ்ரீகனகதாஸர்.

இந்த கிருதியில் பல கருத்துக்கள் மறைந்திருக்கின்றன என்பதையும் அறியலாம். அதாவது, ஒரு சமூக முன்னேற்றத்திற்கு அனைத்து வித மக்களும் தேவை. அவரவர்களின் பங்கினை அவர்கள் சரியாக செய்வதாலே ஒரு முழு சமூகமானது மேம்படுகிறது - என்று தாஸர் சொல்ல வருவதாக அறியலாம். ஸ்ரீகனகதாஸர் அப்படிப்பட்ட ஒரு தாழ்த்தப்பட்ட சமூகத்தை சேர்ந்தவராக இருப்பதாலும், அதனாலேயே அவர் பல்வேறு பிரச்னைகளை சந்திருப்பதாலும், அவர் தன்னையே 'ராகி' யாக குறியீடாக வைத்துக் கொண்டு இந்த கிருதியை இயற்றியிருக்கலாம் என்று நாம் கருதலாம். ஆனால், அதனை ஒரு அழகான ராமாயண கதையில் கொண்டு சேர்த்ததும், ஹரி ஸர்வோத்தமத்தவதை அவர் விளக்கியிருப்பதும், ஒரு காவியத்திற்குத் தேவையான வர்ணனைகளை இதில் கொடுத்திருப்பதும் - மிகவும் அழகு.

அனைவரும் இந்த ராம தான்ய சரிதையை கண்டிப்பாக ஒரு முறையாவது படித்து, ஸ்ரீகனகதாஸரின் கவித்திறனையும், அவர் மூலம் ஸ்ரீராமசந்திரனின் அபார குணங்களையும் சிந்தித்து, அவருடைய அருளைப் பெற முயல்வோமாக.

அர்த்த விளக்கங்களுடன் கூடியதாக இந்த கிருதி தமிழிலேயே முதல்முறையாக வந்திருக்கிறது. ஆகவே, இதில் ஏதாவது குறைகள் / பிழைகள் இருந்தால், அதனை தயவு செய்து எனக்குத் தெரியப்படுத்தவும். குர்வந்தர்கத பாரதிரமண முக்யப்ராணாந்தர்கத ஸ்ரீஜகன்னாத கேசவ ப்ரீயதாம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**
**15/03/2023**

# ராமதான்ய சரிதெ

## (தமிழில் அர்த்த விளக்கங்களுடன்)

**ஶரதி$^{4}$ஷயன முகுந்த$^{3}$ ஸசரா**
**சரப$^{4}$ரித நிர்கு$^{3}$ண நிராமய**
**ஸுர நரோரக$^{3}$ வந்த்$^{3}$ய வரபுரதா$^{3}$தி$^{3}$ கேஶவன**
**சரணத$^{3}$ங்கிதமாகி$^{3}$ பேளித$^{3}$**
**பரம தா$^{4}$ன்யத$^{3}$ சரிதெ ஸந்தத**
**த$^{4}$ரெயொளிந்தொப்பிஹுது$^{3}$ ஆசந்த்$^{3}$ரார்க்க பரியந்த |**

ஶரதிஷயன - பாற்கடலில் படுத்திருப்பவனே; முகுந்த - முகுந்தனே; ஸசராசரபரித - சராசரங்கள் அனைத்திலும் வியாபித்திருப்பவனே; நிர்குண - சத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு கட்டுப்படாதவன் / அவற்றிற்கு அப்பாற்பட்டவன்; நிராமய - குறைகள் அற்றவன்; ஸுர நரோரக வந்த்ய - ஸுரர்களின், நரர்களின் கஷ்டங்களை பரிகரிப்பவன்; வரபுரதாதி கேஶவன- சிறந்த க்ஷேத்திரத்தில் இருப்பவனான ஆதி கேசவனின்; சரணதங்கிதமாகி பேளித - பாதங்களில் சமர்ப்பிக்கப்பட்டு சொல்லிய; பரம தான்யத சரிதெ - இந்த சிறந்த தானியத்தின் சரித்திரமானது; ஸந்தத - எப்போதும்; தரெயொளிந்தொப்பிஹுது - இந்த பூமியில் நிலைத்திருந்து பரவட்டும்; ஆசந்த்ரார்க்க பரியந்த - சந்திரன், சூரியன் ஆகியவை இருக்கும்வரைக்கும்.

பாற்கடலில் படுத்திருப்பவனே, முகுந்தனே. சராசரங்கள் அனைத்திலும் வ்யாபித்திருப்பவனே. சத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு கட்டுப்படாதவன் / அவற்றிற்கு அப்பாற்பட்டவன்; குறைகள் அற்றவன்; ஸுரர்களின், நரர்களின் கஷ்டங்களை பரிகரிப்பவன்; சிறந்த க்ஷேத்திரத்தில் இருப்பவனான ஆதி கேசவனின் பாதங்களில் சமர்ப்பிக்கப்பட்டு சொல்லிய இந்த சிறந்த தானியத்தின் சரித்திரமானது எப்போதும் - சந்திரன், சூரியன் ஆகியவை இருக்கும்வரைக்கும்.- இந்த பூமியில் நிலைத்திருந்து பரவட்டும்.

**ஸ்ரீரமாபதி ஸிந்து4ஶயன மு**
**ராரி முனிகுல பூஜிதாங்க்4ரி ஸ**
**ரோருஹாக்ஷ ஸுத3ர்ஶனாங்கித தே3வ ப4வதூ3ர**
**மாரபித கௌஸலாதே3வி கு**
**மார ரகு4குல ராம ந்ருப வர**
**பௌர சென்னிக3ராய பாலிஸு ஸகல ஸஜ்ஜனர ||1**

ஸ்ரீரமாபதி - ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவன்; ஸிந்துஶயன - பாற்கடலில் படுத்திருப்பவன்; முராரி - முர என்னும் அசுரனைக் கொன்றவன்; முனிகுல பூஜிதாங்க்ரி - முனிவர்களால் / ஸஜ்ஜனர்களால் வணங்கப்படும் பாதங்களைக் கொண்டவன்; ஸரோருஹாக்ஷ - தாமரைக் கண்ணன்; ஸுதர்ஶனாங்கித - ஸுதர்ஶன சக்கரத்தை தரித்தவன்; தேவ - ஸ்வாமி; பவதூர - பிறப்பு இறப்பு இல்லாதவன்; மாரபித - மன்மதனின் தந்தை; கௌஸலாதேவி குமார - கௌஸல்யா தேவியின் குமாரன்; ரகுகுல ராம - ரகு குலத்தில் உதித்த ஸ்ரீராமன்; ந்ருப - அரசன்; வர பௌர - சிறந்த அரசன்; சென்னிகராய - சென்ன கேசவன்; பாலிஸு ஸகல ஸஜ்ஜனர - அனைத்து ஸஜ்ஜனர்களையும் அருள்வாயாக.

ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவன், பாற்கடலில் படுத்திருப்பவன், முர என்னும் அசுரனைக் கொன்றவன், முனிவர்களால் / ஸஜ்ஜனர்களால் வணங்கப்படும் பாதங்களைக் கொண்டவன், தாமரைக் கண்ணன், ஸுதர்ஶன சக்கரத்தை தரித்தவன், ஸ்வாமி, பிறப்பு இறப்பு இல்லாதவன், மன்மதனின் தந்தை, கௌஸல்யா தேவியின் குமாரன், ரகு குலத்தில் உதித்த ஸ்ரீராமன், அரசன், சிறந்த அரசன் சென்ன கேசவன், அனைத்து ஸஜ்ஜனர்களையும் அருள்வாயாக.

**கி3ரிஜெ யரஸன ப4ஜிஸி லக்ஷ்மி**
**வரன பாதாம்பு3ஜகெ வந்தி3ஸி**
**கரிமுக2ன ப3லகொ3ண்டு3 கீ3ர்வாணிகெ3 நமஸ்கரிஸி**
**கு3ருவினங்க்4ரி நமிஸி ஸத்கவி**
**வரர மனத3லி நெனெது3 வரபுர**
**த3ரஸனனு கொண்டா3டி3 பேளுவெனு ஈ மஹாகதெ2ய ||2**

கிரிஜெ யரஸன பஜிஸி - ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனை போற்றி; லக்ஷ்மிவரன பாதாம்புஜகெ வந்திஸி - அவனின் பாத

கமலங்களை வணங்கி; கரிமுகன பலகொண்டு - விக்னேஷ்வரனின் துணை கொண்டு; கீர்வாணிகெ நமஸ்கரிஸி - சரஸ்வதிதேவியை வணங்கி; குருவினங்க்ரி நமிஸி - குருகளை வணங்கியவாறு; ஸத்கவி வரர மனதலி நெனெது - கற்றறிந்த அறிஞர்களை மனதில் நினைத்துக்கொண்டு; வரபுரதரஸனனு கொண்டாடி - ஆதிகேசவனை நினைத்தவாறு; பேளுவெனு ஈ மஹாகதெய - இந்த மஹா கதையை நான் சொல்லத் துவங்குகிறேன்.

ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனை போற்றி, அவனின் பாத கமலங்களை வணங்கி, விக்னேஷ்வரனின் துணை கொண்டு, சரஸ்வதிதேவியை வணங்கி, குருகளை வணங்கியவாறு, கற்றறிந்த அறிஞர்களை மனதில் நினைத்துக்கொண்டு, ஆதிகேசவனை நினைத்தவாறு, இந்த மஹா கதையை நான் சொல்லத் துவங்குகிறேன்.

**ராமதா4ன்யத3 க்ருதியனு ஈ ஜன**
**தா3மவெல்லாத3ரிஸுவந்த3தி3**
**பூ4மிக3ச்சரியாகி3 பேளுவெனு ஈ மஹாகதெ2ய**
**ப்ரேமதி3ந்தா3த3ரிஸி கேள்த3 ஸ**
**நாமரிகெ3 ஸத்கருணத3லி ரகு4**
**ராம பாலிஸிகொடு3வ மனத3லி இஷ்டஸம்பத3வ ||3**

ராமதான்யத க்ருதியனு - ராமதான்யத்தைப் பற்றியதான இந்த கிருதியை; ஈ ஜனதாமவெல்லாதரிஸுவந்ததி - இந்த மக்கள் அனைவரும் படித்து போற்றும் வண்ணம்; பூமிகச்சரியாகி பேளுவெனு - அனைவருக்கும் மகிழ்ச்சி உண்டாகுமாறு நான் சொல்வேன்; ஈ மஹாகதெய - இந்த மஹா கதையை; ப்ரேமதிந்தாதரிஸி - மிகவும் பக்தி மரியாதையுடன்; கேள்த - கேட்கும்; ஸநாமரிகெ - பக்தர்களுக்கு; ஸத்கருணதலி - மிகவும் கருணையுடன்; ரகுராம - ஸ்ரீராமன்; பாலிஸிகொடுவ - அருள்வான்; மனதலி இஷ்டஸம்பதவ - அவர்கள் நினைத்த அனைத்து விஷயங்களையும் / செல்வங்களையும்.

ராமதான்யத்தைப் பற்றியதான இந்த கிருதியை, இந்த மக்கள் அனைவரும் படித்து போற்றும் வண்ணம், அனைவருக்கும் மகிழ்ச்சி உண்டாகுமாறு நான் சொல்வேன். இந்த மஹா கதையை, மிகவும் பக்தி மரியாதையுடன் கேட்கும்; பக்தர்களுக்கு, மிகவும் கருணையுடன் அவர்கள் நினைத்த

அனைத்து விஷயங்களையும் / செல்வங்களையும். ஶ்ரீராமன் அருள்வான்.

**த4ரெயனெல்லவ ஸோது ஜூஜலி**
**கு1ருபதிகெ3 கைத3ளிஸி தம்மந்**
**தி3ரு ஸஹித த4ர்மஜனு காம்யக வனதொ3ளிருதிரலு**
**பரம ரிஷி ஶாண்டி3ல்ய முனி ஸ**
**த்கருணத3லி நடெ3தந்த3னல்லிகெ3**
**வர தபோத4னரொட3னெ காணிஸி கொண்ட3னுசிதத3லி ||4**

ஜூஜலி - சூதாட்டத்தில்; தரெயனெல்லவ ஸோது - அனைத்தையும் (நிலங்களையும், தங்களையும்) தோற்று; குருபதிகெ கைதளிஸி - துரியோதனனுக்கு கை குவித்து வணங்கி (என்றால் அவரின் ஆணைப்படி); தம்மந்திரு ஸஹித - தன் தம்பிகளுடன்; தர்மஜனு - தர்மராஜன்; காம்யக வனதொளிருதிரலு - காம்யக வனத்திற்குச் சென்று அங்கு தங்கியிருக்க; பரம ரிஷி ஶாண்டில்ய முனி - மகரிஷியான ஶாண்டில்ய முனிவர்; ஸத்கருணதலி நடெதந்தனல்லிகெ - கருணையுடன் அங்கு வந்தார்; வர தபோதனரொடனெ - அத்தகைய முனிஸ்ரேஷ்டருடன்; காணிஸி கொண்டனுசிததலி - உடனடியாக சென்று (தர்மராஜன்) சந்தித்தார்.

அனைத்தையும் (நிலங்களையும், தங்களையும்) சூதாட்டத்தில் தோற்று, துரியோதனனுக்கு கை குவித்து வணங்கி, (என்றால் அவரின் ஆணைப்படி), தர்மராஜன், தன் தம்பிகளுடன், காம்யக வனத்திற்குச் சென்று அங்கு தங்கியிருக்க, மகரிஷியான ஶாண்டில்ய முனிவர், கருணையுடன் அங்கு வந்தார். அத்தகைய முனிஸ்ரேஷ்டரை உடனடியாக சென்று தர்மராஜன் சந்தித்தார்.

**த4ரணிபதி யமஸூனு தம்மந்**
**தி3ரு ஸஹிதலிதி3ரெத்3து3 முனிபன**
**சரணகானதனாகி3 கைமுகி3தி3ரலு த4ர்மஜன**
**கரெது3 லாலிஸி குள்ளிரிஸி ஸ**
**த்கருணத3லி முனி நுடி3த3னெலெ ந்ருப**
**ஸிரி த3ரித்3ரதெ நிலது3 பரிஹரவஹுது கேளெந்த3 ||5**

தரணிபதி - அரசனான; யமஸூனு - யமதர்ம ராஜனின் மகனான தர்மராஜன்; தம்மந்திரு ஸஹிதலிதிரெத்து - தம் தம்பிகளுடன் சேர்ந்து எழுந்து நின்று; முனிபன சரணகானதனாகி - அந்த

முனிவருக்கு வணங்கியவாறு; கைமுகிதிரலு - கை குவித்தவாறு நின்றிருக்க; தர்மஜன கரெது - அந்த முனிவரானவர், தர்மராஜரை அழைத்து; லாலிஸி குள்ளிரிஸி - அன்புடன் பாராட்டி அமரவைத்து; ஸத்கருணதலி - மிகவும் கருணையுடன்; முனி நுடிதனு - அந்த முனிவர் இவ்வாறு கூறினார்; ஹே ந்ருப - ஹே அரசனே; ஸிரி தரித்ரதெ நிலது - இந்த உங்களின் நிலையானது தற்காலிகமானதே; பரிஹரவஹுது - விரைவில் பரிகாரம் ஆகும்; கேளெந்த - நான் சொல்வதைக் கேள் என்றார்.

அரசனான, யமதர்ம ராஜனின் மகனான தர்மராஜன், தம் தம்பிகளுடன் சேர்ந்து எழுந்து நின்று, அந்த முனிவரை வணங்கியவாறு, கை குவித்தவாறு நின்றிருக்க, அந்த முனிவரானவர், தர்மராஜரை அழைத்து, அன்புடன் பாராட்டி அமரவைத்து, மிகவும் கருணையுடன், இவ்வாறு கூறினார். ஹே அரசனே, இந்த உங்களின் நிலையானது தற்காலிகமானதே. விரைவில் பரிகாரம் ஆகும். நான் சொல்வதைக் கேள் என்றார்.

**தே$^{3}$வரிஷிக$^{3}$ளு நிம்ம கருணா**
**பா$^{4}$வவெம்மல்லிரலு நமகி$^{3}$**
**ந்னாவ கஷ்டத$^{3}$ ப$^{3}$ளகெதோ$^{3}$ரது$^{3}$ நிம்ம த$^{3}$ருஶனதி$^{3}$**
**பாவனரு நாவாதெ$^{3}$வெமகி$^{3}$**
**ன்னாவ பு$^{3}$த்$^{3}$தி$^{4}$யனருஹுவிரியத$^{3}$**
**நீவு பேளெனெ நஸுநகு$^{3}$த முனிநாத$^{2}$னிந்தெந்த$^{3}$ ||6**

தேவரிஷிகளு - தேவ ரிஷிகள் இவ்வாறு கூற; நிம்ம கருணாபாவவெம்மல்லிரலு - தர்மராஜன் ஆனவர், உங்களின் கருணையானது எமக்கு நிறைந்திருக்க; நமகிந்னாவ கஷ்டத பளகெதோரது - வேறு எந்த கஷ்டத்தின் துக்கமும் எங்களை அண்டாது; நிம்ம தருஶனதி - உங்களின் தரிசனத்தினால்; பாவனரு நாவாதெவு - நாங்கள் பவித்ரர் ஆனோம்; இன்னாவ புத்தியனருஹுவிரி - எங்களுக்கு இன்னும் என்ன அறிவுரைகளை கூறுவீர்கள்; அத நீவு பேளெனெ - அதனை எங்களுக்கு சொல்லுங்கள் என்று கூற; நஸுநகுத முனிநாதனிந்தெந்த - முனிவரானவர் புன்னகையுடன் இவ்வாறு கூறத் துவங்கினார்.

தேவ ரிஷிகள் இவ்வாறு கூற, தர்மராஜன் ஆனவர், முனிவரே, உங்களின் கருணையானது எமக்கு நிறைந்திருக்க, வேறு எந்த கஷ்டத்தின் துக்கமும் எங்களை அண்டாது. உங்களின் தரிசனத்தினால், நாங்கள் பவித்ரர் ஆனோம். எங்களுக்கு

இன்னும் என்ன அறிவுரைகளை கூறுவீர்கள்? அதனை எங்களுக்கு சொல்லுங்கள் என்று கூற, முனிவரானவர் புன்னகையுடன் இவ்வாறு கூறத் துவங்கினார்.

**தா$^4$ருணியொளரஸுக$^3$ளு நால்வரு**
**பூ$^4$ரி ஸத்யவ்ரதரு நள ந்ருப**
**தீ$^4$ர ராம யுதி$^4$ஷ்டி$^2$ர ஹரிஶ்சந்த்ரரிவரெந்து$^3$**
**ஸாருதிதெ$^3$ ஜக$^3$வெல்ல நிம்மனு**
**தா$^3$ரனித$^3$ரொளு ரகு$^4$பதியு கு$^3$ண**
**ஹார த$^4$ர்மவ பாலிஸித$^3$ நரெத$^3$லெகெ வ்ரிஹியரிகெ$^3$ ||7**

தாருணியொளரஸுகளு - இந்த பூமியில்; பூரி ஸத்யவ்ரதரு - மிகச் சிறந்த, நேர்மையான அரசர்கள்; நால்வரு - நான்கு பேர்; நள ந்ருப - நளன்; தீர ராம - ஶ்ரீராமன்; யுதிஷ்டிர - யுதிஷ்டிரன்; ஹரிஶ்சந்த்ரரிவரெந்து - மற்றும் அரிச்சந்திரன்; ஸாருதிதெ ஜகவெல்ல நிம்மனு - என்று உலகமே உங்களை போற்றுகிறது; உதாரனு இதரொளு ரகுபதியு - இவர்களில் மிகவும் கருணைசாலியானவன் ஶ்ரீராமன்; குண ஹார தர்மவ பாலிஸித - நற்குணங்களின் தர்மங்களை காப்பாற்றினான்; நரெதலெகெ - ராகி; வ்ரிஹியரிகெ - மற்றும் அரிசிக்குக் கூட;

இந்த பூமியில், மிகச் சிறந்த, நேர்மையான (சொன்ன சொல் தவறாத) அரசர்கள் நான்கு பேர். அவர்கள் - நளன், ஶ்ரீராமன், யுதிஷ்டிரன், மற்றும் அரிச்சந்திரன் என்று உலகமே உங்களை போற்றுகிறது. இவர்களில் மிகவும் கருணைசாலியானவன் ஶ்ரீராமன். நற்குணங்களைக் கொண்டவன். தர்மங்களை காப்பாற்றினான்; ராகி மற்றும் அரிசிக்குக் கூட கருணையைக் காட்டினான் என்றார்.

**எனலு ராமசரித்ரெயனு நீ**
**வெனகெ$^3$ பேளித$^3$டா$^3$லிஸுவெனெனெ**
**மனதொ$^3$ளகெ$^3$ தா நஸுநகு$^3$த ஶாண்டி$^3$ல்யனு யுதி$^4$ஷ்$^2$டிரகெ$^3$**
**அனுநயதொ$^3$ளாத$^3$ரிஸி ரகு$^4$னந்**
**த$^3$னன சரிதெயனருஹி பூ$^4$பன**
**மனஸினல்லிருவந்தெ விஸ்தரிஸித$^3$ மஹாகதெ$^2$ய ||8**

எனலு - என்று கூற; ராமசரித்ரெயனு - அத்தகைய சிறந்ததான ஶ்ரீராமனின் சரித்திரத்தினை; நீவெனகெ பேளிதட - நீங்கள் எங்களுக்குக் கூறுங்கள்; ஆலிஸுவெனெனெ மனதொளகெ -

அதனை நான் கவனமுடன் கேட்பேன்; மனதொளகெ தா நஸுநகுத - என்று தர்மராஜன் கூற, தன் மனதில் சிரித்தவாறு; ஶாண்டில்யனு யுதிஷ்டிரகெ - முனிவரான ஶாண்டில்யர், யுதிஷ்டிரனுக்கு; அனுநயதொளாதரிஸி - மரியாதைகளை செய்து அமர வைத்து; ரகுனந்தனன சரிதெயனருஹி - ரகுநந்தனனின் சரித்திரத்தை சொல்லி; பூபன - அந்த கதையானது, யுதிஷ்டிரனின்; மனஸினல்லிருவந்தெ - மனதில் இருக்குமாறு; விஸ்தரிஸித மஹாகதெய - அந்த கதையை விஸ்தாரமாக கூறத் துவங்கினார்.

என்று கூற, அத்தகைய சிறந்ததான ஸ்ரீராமனின் சரித்திரத்தினை, நீங்கள் எங்களுக்குக் கூறுங்கள். அதனை நான் கவனமுடன் கேட்பேன், என்று தர்மராஜன் கூற, தன் மனதில் சிரித்தவாறு, முனிவரான ஶாண்டில்யர், யுதிஷ்டிரனுக்கு, மரியாதைகளை செய்து அமர வைத்து, ரகுநந்தனனின் சரித்திரத்தை சொல்லி, அந்த கதையானது, யுதிஷ்டிரனின் மனதில் இருக்குமாறு, விஸ்தாரமாக கூறத் துவங்கினார்.

**கேளு குந்தீதனய க$^{3}$ங்கா$^{3}$**
**கூலது$^{3}$த்தர பா$^{4}$க$^{3}$த$^{3}$லி வி**
**ஶால விப$^{4}$வதொ$^{3}$ளெஸெவ யோத்$^{4}$யா நக$^{3}$ரவா புரவ**
**பாலிஸுவ தி$^{3}$னகர குலான்வய**
**ஶீல த$^{3}$ஶரத$^{2}$னா மஹீலோ**
**லலோசனெ கௌஸல்யெ தே$^{3}$வி ஸுமித்ரெ கைகேயரு ||9**

கேளு குந்தீதனய - ஹே குந்தி தனயனே, தர்மராஜனே, கேட்பாயாக; கங்காகூலதுத்தர பாகதலி - கங்கை நதியின் வடக்குக் கரையில்; விஶால விபவதொளெஸெவ - மிகவும் செல்வச் செழிப்புடன், வைபவங்களுடன் இருப்பதான; அயோத்யா நகரவா புரவ - அயோத்யா நகரத்தினை; பாலிஸுவ - ஆள்பவனான; தினகர குலான்வய - சூரிய குலத்தில் வந்தவனான; ஶீல - நற்குணங்களைக் கொண்டவனான; தஶரதனா - தஶரதனின்; மஹீலோலலோசனெ - அழகான கண்களைக் கொண்டவர்களான; கௌஸல்யெ தேவி ஸுமித்ரெ கைகேயரு - கௌஸல்யாதேவி, ஸுமித்ரெ மற்றும் கைகேயி ஆகியோர்.

ஹே குந்தி தனயனே, தர்மராஜனே, கேட்பாயாக. கங்கை நதியின் வடக்குக் கரையில், மிகவும் செல்வச் செழிப்புடன், வைபவங்களுடன் இருப்பதான அயோத்யா நகரத்தினை

ஆள்பவனான, சூரிய குலத்தில் அவதரித்தவனான, நற்குணங்களைக் கொண்டவனான தஶரதனின், அழகான கண்களைக் கொண்டவர்களான கௌஸல்யாதேவி, ஸுமித்ரெ மற்றும் கைகேயி ஆகியோர் தாயார்.

**த3ஶரத2கெ3 கௌஸலெகெ3 ஜனிஸித3**
**ரஸிக கு3ணநிதி4 ராம ந்ருபனா**
**அஸுரெ தாடகியொரஸி மாரீசன ஸுபா3ஹுவனு**
**குஸுரித3ரிதா3 முனிமுக2வ ர**
**க்ஷிஸியஹல்யா ஶாபவனு க2ண்ட்3ரிஸி**
**அஸமனனுஜனு முனிப ஸஹிதா மிதி2ளெ கெ3ய்தி3த3னு ||10**

தஶரதகெ கௌஸலெகெ ஜனிஸித - இந்த தஶரதனுக்கும், கௌஸல்யா தேவிக்கும் பிறந்தவனான; ரஸிக - அழகானவனான; குணநிதி - நற்குணங்களின் நிதியான; ராம ந்ருபனா - அந்த ஸ்ரீராமசந்திரன்; அஸுரெ தாடகியொரஸி - அரக்கியான தாடகியைக் கொன்று; மாரீசன ஸுபாஹுவனு - மாரீசன் மற்றும் ஸுபாஹுவை; குஸுரிதரிதா - விரட்டியடித்து, அந்த; முனிமுகவ ரக்ஷிஸி - ஸ்ரீவிஸ்வாமித்ரரின் யாகத்தினை காத்து; அஹல்யா ஶாபவனு கண்ட்ரிஸி - அகலிகையின் சாபத்தினை போக்கி; அஸமனனுஜனு - யாருக்கும் சமம் இல்லாத தன் தம்பியான லட்சுமணனுடன்; முனிப ஸஹிதா - மற்றும் ஸ்ரீவிஸ்வாமித்திரருடன்; மிதிளெ கெய்திதனு - மிதிலாபுரிக்கு வந்து சேர்ந்தான்.

இந்த தஶரதனுக்கும், கௌஸல்யா தேவிக்கும் பிறந்தவனான, அழகானவனான, நற்குணங்களின் நிதியான. அந்த ஸ்ரீராமசந்திரன், அரக்கியான தாடகியைக் கொன்று, மாரீசன் மற்றும் ஸுபாஹுவை விரட்டியடித்து, ஸ்ரீவிஸ்வாமித்ரரின் யாகத்தினை காத்து, அகலிகையின் சாபத்தினை போக்கி, யாருக்கும் சமம் இல்லாத தன் தம்பியான லட்சுமணனுடன், மற்றும் ஸ்ரீவிஸ்வாமித்திரருடன், மிதிலாபுரிக்கு வந்து சேர்ந்தான்.

**ஹரன த4னுவேரிஸித3 ஸீதெய**
**வரமுஹூர்த்ததி3 வரிஸி தம்மந்**
**தி3ரு நிஜாங்க3னெ ஸஹித மிதி2ளாபுரவ ஹொரவண்ட**
**ப3ருவ மார்க்கா3ந்தரதி3 கண்ட3னு**
**பரஶுராமன கெ3லித3யோத்4யா**

**புரவ ஹொக்கனு ராஜதேஜதி$^{3}$ ஸுரரு நலிதாடெ$^{3}$ ||11**

ஹரன தனுவேரிஸித - ஶ்ரீராமன், ருத்ரர் அருளிய தனுஸ்ஸினை நாண் ஏற்றினான்; ஸீதெய வரமுஹூர்த்ததி வரிஸி - அதன் மூலம் போட்டியில் வென்று, ஶ்ரீஸீதா தேவியை ஒரு நல் முஹூர்த்தத்தில் திருமணம் செய்து; தம்மந்திரு நிஜாங்கனெ ஸஹித - பிறகு, தன் தம்பிகள் மற்றும் மனைவியான ஶ்ரீஸீதாதேவியுடன்; மிதிளாபுரவ ஹொரவண்ட - மிதிளாபுரத்திலிருந்து புறப்பட்டார்; பருவ மார்க்காந்தரதி கண்டனு - திரும்ப அயோத்திக்கு வரும் வழியில், பகவந்தனின் இன்னொரு அவதாரமான பரசுராமனை, ஶ்ரீராமன் கண்டார்; பரஶுராமன கெலித - அந்த பரசுராமனுடன் நடந்த போரில் ஶ்ரீராமன் வென்றான்; அயோத்யா புரவ ஹொக்கனு - பின், அனைவரும் அயோத்திக்கு வந்து சேர்ந்தார்கள்; ராஜதேஜதி ஸுரரு நலிதாடெ - ஶ்ரீராமனின் இத்தகைய அற்புத மகிமைகளைக் கண்டு தேவர்கள் மிகவும் மகிழ்ந்து கொண்டாடினர்.

ஶ்ரீராமன், ருத்ரர் அருளிய தனுஸ்ஸினை நாண் ஏற்றினான். அதன் மூலம் போட்டியில் வென்று, ஶ்ரீஸீதா தேவியை ஒரு நல் முஹூர்த்தத்தில் திருமணம் செய்து, பிறகு, தன் தம்பிகள் மற்றும் மனைவியான ஶ்ரீஸீதாதேவியுடன், மிதிளாபுரத்திலிருந்து புறப்பட்டார். திரும்ப அயோத்திக்கு வரும் வழியில், பகவந்தனின் இன்னொரு அவதாரமான பரசுராமனை, ஶ்ரீராமன் கண்டார். அந்த பரசுராமனுடன் நடந்த போரில் ஶ்ரீராமன் வென்றான். பின், அனைவரும் அயோத்திக்கு வந்து சேர்ந்தார்கள். ஶ்ரீராமனின் இத்தகைய அற்புத மகிமைகளைக் கண்டு தேவர்கள் மிகவும் மகிழ்ந்து கொண்டாடினர்.

**கேளு த$^{4}$ர்மஜ நிம்மவோல் விபி**
**நாலயத$^{3}$ ஸிரி ஸம்ப$^{4}$விஸெ ஜன**
**பால ராமனு பித்ருவசன பாலனெய நேமத$^{3}$லி**
**பா$^{3}$லகியனொடகொ$^{3}$ண்டு$^{3}$ ஸத்யவ**
**பாலிஸுத லக்ஷ்மணன கூடெ$^{3}$ நி**
**ஜாலயவ ஹொரவண்டு ஹொக்கனு கோ$^{4}$ர கானனவ ||12**

கேளு தர்மஜ - ஹே தர்மராஜனே, கேள்; நிம்மவோல் - உனக்கு நடந்ததைப் போலவே; விபிநாலயத ஸிரி ஸம்பவிஸெ - ஶ்ரீராமனுக்கும் காட்டிற்குச் செல்லும் சந்தர்ப்பம் வந்தது; ஜனபால ராமனு - மக்களை காப்பவனான ஶ்ரீராமன்; பித்ருவசன

பாலனெய நேமதலி - தந்தைக்குக் கொடுத்த வாக்கினை காப்பாற்றும் நோக்கில்; பாலகியனொடகொண்டு - தன் மனைவியான ஶ்ரீஸீதா தேவியுடன்; ஸத்யவ பாலிஸுத - தான் கொடுத்த வாக்கினை காத்தவாறு; லக்ஷ்மணன கூடெ - லட்சுமணனுடன் சேர்ந்து; நிஜாலயவ ஹொரவண்டு - தன்னுடைய அரண்மனையை விட்டு; ஹொக்கனு கோர கானனவ - கோரமான காட்டினை நோக்கி புறப்பட்டான்.

ஹே தர்மராஜனே, கேள். உனக்கு நடந்ததைப் போலவே, ஶ்ரீராமனுக்கும் காட்டிற்குச் செல்லும் சந்தர்ப்பம் வந்தது. மக்களை காப்பவனான ஶ்ரீராமன், தந்தைக்குக் கொடுத்த வாக்கினை காப்பாற்றும் நோக்கில், தன் மனைவியான ஶ்ரீஸீதா தேவியுடன், தான் கொடுத்த வாக்கினை காத்தவாறு, லட்சுமணனுடன் சேர்ந்து, தன்னுடைய அரண்மனையை விட்டு, கோரமான காட்டினை நோக்கி புறப்பட்டான்.

**ப4ரதனனு ஸந்தெயிஸி காகா**
**ஸுரன ப்ராணவ கொய்து3 தா3னவ**
**தருணி நாஸிகவரிது3 மாயாம்ருக3வ ஸம்ஹரிஸி**
**ஸரஸிஜாக்ஷியனக3லி மார்க்கா3ம்**
**தரதி3 கண்ட3 ஜடாயுவனு மன**
**மருகி3 வ்ருத்தாந்தவனு திளித3வனல்லி க3தகொ3ளிஸி ||13**

பரதனனு ஸந்தெயிஸி - தன்னைத் தேடி காட்டிற்குள் வந்த பரதனை சமாதானம் செய்து, திருப்பி அனுப்பி; காகாஸுரன ப்ராணவ கொய்து - ஶ்ரீஸீதா தேவியை துன்புறுத்திய காகாஸுரனைக் கொன்று; தானவ தருணி நாஸிகவரிது - ராவணனின் தங்கையான சூர்ப்பணகையின் மூக்கினை அறுத்து; மாயாம்ருகவ ஸம்ஹரிஸி - மாயமான் வேடத்தில் வந்த மாரீசனைக் கொன்று; ஸரஸிஜாக்ஷியனகலி - தாமரைக் கண்களைக் கொண்ட ஶ்ரீஸீதையை விட்டுப் பிரிந்து; மார்க்காம்தரதி கண்ட ஜடாயுவனு - அவளைத் தேடி செல்லும் வழியில் ஜடாயுவைக் கண்டான்; மனமருகி - மிகவும் வருத்தத்துடன்; வ்ருத்தாந்தவனு திளிதவனல்லி - அந்த ஜடாயு கூறிய தகவல்களை ஶ்ரீராமன் அறிந்தான்; கதகொளிஸி - (பிறகு அங்கேயே உயிர் விட்ட ஜடாயுவிற்கு) ஶ்ரீராமன் இறுதிக் காரியங்களை செய்தான்.

தன்னைத் தேடி காட்டிற்குள் வந்த பரதனை சமாதானம் செய்து, திருப்பி அனுப்பி, ஶ்ரீஸீதா தேவியை துன்புறுத்திய

காகாஸுரனைக் கொன்று, ராவணனின் தங்கையான சூர்ப்பணகையின் மூக்கினை அறுத்து, மாயமான் வேடத்தில் வந்த மாரீசனைக் கொன்று, தாமரைக் கண்களைக் கொண்ட ஸ்ரீஸீதையை விட்டுப் பிரிந்து, அவளைத் தேடி செல்லும் வழியில் ஜடாயுவைக் கண்டான். மிகவும் வருத்தத்துடன், அந்த ஜடாயு கூறிய தகவல்களை ஸ்ரீராமன் அறிந்தான். (பிறகு அங்கேயே உயிர் விட்ட ஜடாயுவிற்கு) ஸ்ரீராமன் இறுதிக் காரியங்களை செய்தான்.

**அல்லி ஶோகோத்3ரேகத3லி கர**
**பல்லவத3 கத3பினலி ஊர்மிளெ**
**வல்லப4னனொட3கொ3ண்டு3 கிஷ்கிந்தா4த்3ரிகெ3ய்தந்து3**
**அல்லி ஸம்பா4ஷிஸித3 ரவிஸுத**
**னல்லி வாலிய மடு3ஹி வானர**
**ரெல்லரனு கைகொண்டு3 நடெ3த3னு முந்தெ3 த3க்ஷிணகெ ||14**

அல்லி - அங்கு; ஷோகோத்ரேகதலி - மிகவும் சோகத்துடன்; கர பல்லவத கதபினலி - கன்னத்தில் வைத்து அமர்ந்திருந்த; ஊர்மிளெ வல்லபன ஒடகொண்டு - ஊர்மிளாவின் கணவனான லட்சுமணனுடன் சேர்ந்து கொண்டு; கிஷ்கிந்தாத்ரிகெய்தந்து - கிஷ்கிந்தா வனப்பகுதிக்கு வந்து ; அல்லி - அங்கு; ஸம்பாஷிஸித ரவிஸுதனல்லி - வந்து பேசிய ஸ்ரீஹனுமந்தனுடன்; வாலிய மடுஹி - வாலியைக் கொன்று; வானர ரெல்லரனு கைகொண்டு - வானரர்கள் அனைவரையும் (உதவிக்காக) அழைத்துக்கொண்டு; நடெதனு முந்தெ தக்ஷிணகெ - அடுத்து, தென் திசை நோக்கி புறப்பட்டான் ஸ்ரீராமன்.

அங்கு, மிகவும் சோகத்துடன் கன்னத்தில் வைத்து அமர்ந்திருந்த ஊர்மிளாவின் கணவனான லட்சுமணனுடன் சேர்ந்து கொண்டு, கிஷ்கிந்தா வனப்பகுதிக்கு வந்தபோது அங்கு வந்து தன்னுடன் பேசிய ஸ்ரீஹனுமந்தனுடன், வாலியைக் கொன்று, வானரர்கள் அனைவரையும் (உதவிக்காக) அழைத்துக்கொண்டு, அடுத்து, தென் திசை நோக்கி புறப்பட்டான் ஸ்ரீராமன்.

**வாருதி4ய ப3ந்தி4ஸித3 ஸேனா**
**பா4ரத3லி நடெ3தந்து3 லங்கெய**
**ஸேரி முக்திகெ3விடி3து3 ராவண கும்ப4கர்ணரனு**
**பூ4ரிபா3ணதொளொரஸி தா3னவ**
**வீரரனு பரிஹரிஸி ரகு4 ந்ருப**

**வாரணனு பட்டவனு கட்டித$^{3}$னா விபீஷ$^{2}$ணகெ$^{3}$ ||15**

வாருதிய பந்திஸித - கடல் மேல் அம்பு விடச் சென்று, சமுத்திரராஜனை வரவழைத்து; ஸேனா பாரதலி நடெதந்து - கபி சேனைகளின் உதவியுடன்; லங்கெய ஸேரி - இலங்கையை அடைந்து; முத்திகெவிடிது - இலங்கையை சூழ்ந்து கொண்டு; ராவண கும்பகர்ணரனு - ராவண கும்பகர்ணர்களை; பூரிபாணதொளொரஸி - ஏராளமான பாணங்களால் அவர்களை தாக்கி; தானவ வீரரனு பரிஹரிஸி - அரக்கர்கள் அனைவரையும் கொன்று; ரகு ந்ருப வாரணனு - மிகச் சிறந்தவனான, ஸர்வோத்தமனான ஶ்ரீராமன்; பட்டணவனு கட்டிதனு - லங்கா பட்டணத்தை கட்டுவித்தான்; ஆ விபீஷணகெ - அந்த விபீஷணனுக்காக.

கடல் மேல் அம்பு விடச் சென்று, சமுத்திரராஜனை வரவழைத்து, கபி சேனைகளின் உதவியுடன், இலங்கையை அடைந்து, இலங்கையை சூழ்ந்து கொண்டு, ராவண கும்பகர்ணர்களை, ஏராளமான பாணங்களால் அவர்களை தாக்கி, அரக்கர்கள் அனைவரையும் கொன்று, மிகச் சிறந்தவனான, ஸர்வோத்தமனான ஶ்ரீராமன், அந்த விபீஷணனுக்காக, லங்கா பட்டணத்தை மறுபடி கட்டுவித்தான்.

**த$^{4}$ரணிஸுதெயனு கரெஸி தே$^{3}$வா**
**ஸுரருலியலு விபீஷ$^{2}$ணகெ$^{3}$ வி**
**ஸ்தரிஸி பேளித$^{3}$ புரகெ பயணவ மாடு$^{3}$ நீனெனலு**
**கரெஸித$^{3}$னு நிஜமந்த்ரி ஹரி ரத$^{2}$**
**துரக$^{3}$ பாய்தளவாக்ஷணவெ**
**நெரெது$^{3}$த$^{3}$க$^{3}$ணித வீரதா$^{3}$னவ ஸேனெ நிமிஷ$^{2}$த$^{3}$லி ||16**

தரணிஸுதெயனு கரெஸி - ஸீதாதேவியை அழைத்துக் கொண்டு; தேவாஸுரருலியலு - தேவ அஸுரர்கள் அனைவரும் மகிழ்ந்திருக்க; விபீஷணகெ விஸ்தரிஸி பேளித - விபீஷணனிடம் இவ்வாறு கூறினான்; புரகெ பயணவ மாடு - நீயும் எங்களுடன் வா; நீனெனலு - நீயும், என்று சொல்ல; கரெஸிதனு நிஜமந்த்ரி - தன் மந்திரிகளை அழைத்துக்கொண்டு; கரி ரத துரக - யானை, ரத, குதிரைப் படைகளுடன்; பாய்துளவாக் ஷணவெ - உடனே புறப்படத் தயாராகின; நெரெதுதகணித வீரதானவ ஸேனெ - உடன், காலாட்படைகள், வீரர்கள் என அனைவரும் தயார் ஆயினர்; நிமிஷதலி - நொடிப்பொழுதில்.

ஸீதாதேவியை அழைத்துக் கொண்டு, தேவ அஸுரர்கள் அனைவரும் மகிழ்ந்திருக்க, ஸ்ரீராமன், விபீஷணனிடம் நீயும் எங்களுடன் வா என்று கூறினான். தன் மந்திரிகளை அழைத்துக்கொண்டு விபீஷணன் புறப்பட, உடன், யானை, ரத, குதிரைப் படைகளும் புறப்படத் தயாராகின. உடன், காலாட்படைகள், வீரர்கள் என அனைவரும் நொடிப்பொழுதில் தயார் ஆயினர்.

**ஹருஷ்$^{2}$த$^{3}$லி த$^{1}$ரிஸித$^{3}$ குபே$^{3}$ரன**
**வர ரத$^{2}$வ மேளயிஸி தே$^{3}$வர**
**ஸிரிபதா$^{3}$ம்பு$^{3}$ஜ க$^{1}$ர்ப்பிஸலு ஸ்ரீராம நஸு நகு$^{3}$த**
**கரெஸி லக்ஷ்மணதே$^{3}$வனனு நிஜ**
**தருணி ஸஹிதேரித$^{3}$ வரூத$^{2}$வ**
**தரணிஸுத ஹனுமந்த ஜாம்ப$^{3}$வரெயிதி$^{3}$தொக்$^{3}$கி$^{3}$னலி ||17**

ஹருஷதலி தரிஸித - மகிழ்ச்சியுடன் வரவழைத்தான்; குபேரன வர ரதவ - குபேரனின் சிறந்த ரதத்தினை; மேளயிஸி - தயார் செய்து; தேவர ஸிரி பதாம்புஜகர்ப்பிஸலு - ஸ்ரீராமனின், ஸ்ரீஸீதாதேவியின் பாதங்களுக்கு சமர்ப்பிக்க; ஸ்ரீராம நஸுநகுத - ஸ்ரீராமன், புன்னகைத்தவாறு; லக்ஷ்மணதேவனனு கரெஸி - லட்சுமணனை அழைத்துக் கொண்டு; நிஜ தருணி ஸஹித ஏரிதவ - தன்னுடைய நியத பத்னியான ஸ்ரீஸீதாதேவியுடன் ஏறினான்; ரூதவ - அந்த ரதத்தில்; தரணிஸுத - சூரியனின் புத்திரனான (அல்லது சூரியனின் அவதாரம்) சுக்ரீவன்; ஹனுமந்த - ஹனுமந்ததேவர்; ஜாம்பவரைதிதொக்கினலி - ஜாம்பவான் ஆகியோருடன்;

ஸ்ரீராமன், உடனடியாக, குபேரனின் சிறந்த ரதத்தினை மகிழ்ச்சியுடன் வரவழைத்தான். குபேரன், அதனை தயார் செய்து ஸ்ரீராமனின், ஸ்ரீஸீதாதேவியின் பாதங்களுக்கு சமர்ப்பிக்க, ஸ்ரீராமன், புன்னகைத்தவாறு, லட்சுமணனை அழைத்துக் கொண்டு, தன்னுடைய நியத பத்னியான ஸ்ரீஸீதாதேவியுடன் அந்த ரதத்தில் ஏறினான். அவனுடன், சூரியனின் புத்திரனான (அல்லது சூரியனின் அவதாரம்) சுக்ரீவன்; ஹனுமந்ததேவர்; ஜாம்பவான் ஆகியோரும் புறப்பட்டனர்.

**அங்க$^{3}$த$^{3}$னு நள நீல ஶதப$^{3}$லி**
**துங்க$^{3}$ விக்ரம ஸுஷே$^{2}$ணனா ப்ல**
**வங்க$^{3}$ க$^{3}$வய க$^{3}$வாக்ஷ மொத$^{3}$லாத$^{3}$கி$^{2}$ள வானரரு**

**ஸங்க3டி3ஸி நெரெது3து3 மஹாஸம**
**ரங்க3வீரரு மோஹிஸித3 ரகு4**
**புங்க3வன ரத2தொ3ட3னெ நடெ3து3து3 முந்தெ3 ஸந்த3ணிஸி ||18**

அங்கதனு நள நீல ஷதபலி - அங்கதன், நள, நீல, ஷதபலி (சுக்ரீவனின் படையில் இருந்த ஒரு கபிவீரர்); துங்க விக்ரம ஸுஷேணனு - வீரனான ஸுஷேணன்; ப்லவங்க கவனு கவாக்ஷ - கபி வீரர்களான கவய, கவாக்ஷ; மொதலாதகிள வானரரு - ஆகிய அனைத்து வானரர்களும்; ஸங்கடிஸி நெரெதரு - அங்கு வந்து சேர்ந்தனர்; மஹாஸமரங்க வீரரு - மிகச் சிறந்த வீரர்களான இவர்கள்; மோஹிஸித ரகுபுங்கவன ரததொடனெ - அவர்கள் மிகவும் விரும்பிய ஸ்ரீராமனின் ரதத்துடன்; நடெதுது முந்தெ ஸந்தணிஸி - அந்த ரதத்தின் முன்னால் நடந்து சென்று;

அங்கதன், நள, நீல, ஷதபலி (சுக்ரீவனின் படையில் இருந்த ஒரு கபிவீரர்), வீரனான ஸுஷேணன், கபி வீரர்களான கவய, கவாக்ஷ ஆகிய அனைத்து வானரர்களும் அங்கு வந்து சேர்ந்தனர். மிகச் சிறந்த வீரர்களான இவர்கள், அவர்கள் மிகவும் விரும்பிய ஸ்ரீராமனின் ரதத்துடன், அந்த ரதத்தின் முன்னால் நடந்து சென்றனர்.

**தா4ருணிபதி கேளு லங்கெய**
**வீரதா3னவ ப4ட1ரு புரஜன**
**பௌரஜன ஸஹிதா விபீ4ஷ2ணனொட3னெ மேளயிஸி**
**பூ4ரி ப3லவைதருதலிரெ ரண**
**பே4ரி த3ந்த4ணத4ணரெனலு மிகெ3**
**சேரித3வு கஹளெக3ளு தி3க்பாலகர பே3த3ரிஸிது ||19**

தாருணிபதி கேளு - ஹே தர்மராஜனே, கேள்; லங்கெய வீரதானவ படரு - இலங்கையின் வீரர்கள், வேலையாட்கள்; புரஜன பௌரஜன - நகர மக்கள், நாட்டு மக்கள்; ஸஹிதா - என அனைவருடனும்; விபீஷணனொடனெ மேளயிஸி - விபீஷணனுடன் சேர்ந்து; பூரிபலவைதருதலிரெ - தங்களின் வலிமைகளை காட்டியவாறு வந்து கொண்டிருக்க; ரண பேரி தந்தணதணரெனலு - பேரி (முரசுகள்) தணதண என்று சத்தம் செய்து கொண்டுவர; மிகெ சேரிதவு - அதனுடன் சேர்ந்தது; கஹளெகளு - தாரைகள்; திக்பாலகர பெதரிஸிது - இந்த சத்தங்கள் அங்கிருந்த திக்பாலகர்களை பயமுறுத்தியது.

ஹே தர்மராஜனே, கேள். இலங்கையின் வீரர்கள், வேலையாட்கள்; நகர மக்கள், நாட்டு மக்கள் என அனைவருடனும், விபீஷணனுடன் சேர்ந்து, தங்களின் வலிமைகளை காட்டியவாறு வந்து கொண்டிருக்க, பேரி (முரசுகள்) தணதண என்று சத்தம் செய்து கொண்டுவர, அதனுடன் சேர்ந்தது, தாரைகள். இந்த சத்தங்கள் அங்கிருந்த திக்பாலகர்களை பயமுறுத்தியது.

**தடெ³யதை³தந்து³ ப⁴யப³ல ஸங்**
**க³டி³ஸி ப³ருதிரெ முந்தெ³ ஸேதுவ**
**மட³தி³கெ³ல்லவ தோரிஸூத நெரெ கட³ல தா³ண்டித³ரு**
**நடெ³து³ ராமேஶ்வரத³ ப³ளியலி**
**ம்ருட³ன பூஜிஸி ப⁴க்திபா⁴வத³**
**ஸட³க³ரதி³ வால்மீகியாஸ்ரமகெ யெய்தி³த³னு ந்ருபதி ||20**

தடெயதைதந்துபயபல - யாராலும் தடுக்கப்படாமல்; ஸங்கடிஸி பருதிரெ - இப்படியாக இவர்கள் அனைவரையும் சேர்த்துக் கொண்டு ஶ்ரீராமன் வந்து கொண்டிருக்க; முந்தெ ஸேதுவ - அங்கிருந்த ஸேதுவை (பாலத்தை); மடதிகெல்லவ தோரிஸூத - தன் மனைவியான ஸீதைக்கு காட்டியவாறு; நெரெ கடல தாண்டிதனு நடெது - அந்த பெரிய கடலை நடந்து தாண்டினான்; ராமேஷ்வரத பளியலி - ராமேஸ்வரத்தின் அருகில் வந்து; ம்ருடன பூஜிஸி - சிவனை பூஜித்து; பக்திபாவத ஸடகரதி - மிகவும் பக்தி பாவத்துடன்; வால்மிகி ஆஸ்ரமகெ எய்திதனு ந்ருபதி - ஶ்ரீஸீதாதேவியின் தலைவனான ஶ்ரீராமன், வால்மிகியின் ஆசிரமத்திற்கு வந்தான்.

யாராலும் தடுக்கப்படாமல், இப்படியாக இவர்கள் அனைவரையும் சேர்த்துக் கொண்டு, ஶ்ரீராமன் வந்து கொண்டிருக்க, அங்கிருந்த ஸேதுவை (பாலத்தை), தன் மனைவியான ஸீதைக்கு காட்டியவாறு, அந்த பெரிய கடலை நடந்து தாண்டினான். ராமேஸ்வரத்தின் அருகில் வந்து, சிவனை பூஜித்து, மிகவும் பக்தி பாவத்துடன், ஶ்ரீஸீதாதேவியின் தலைவனான ஶ்ரீராமன், வால்மிகியின் ஆசிரமத்திற்கு வந்தான்.

**அல்லி நெரெத³ மஹாமுனீஷ்வர**
**ரெல்லரனு ஸத்கரிஸி ஜானகி**
**வல்லப⁴னு நடெதந்த³னா முசுகுந்த³னாஶ்ரமகெ**
**ஸடி³லது³ன்னத ப³லஸமேததி³**

**கட3ல கண்ட3னு பஞ்சநதி3யோள்**
**பி3ட3தெ3 பல்லயிஸிருவ ப2ல வஸ்துக3ள ஸம்ப்4ரமதி3 ||21**

அல்லி நெரெத - அந்த ஆசிரமத்தில் இருந்த; மஹாமுனீஷ்வரரெல்லரனு - மிகச் சிறந்த முனிவர்கள் அனைவரையும்; ஸத்கரிஸி - மரியாதைகளை செய்து; ஜானகி வல்லபனு - ஸ்ரீராமன்; நடெதந்தனா - பிறகு அங்கிருந்து புறப்பட்டு; முசுகுந்தனாஷ்ரமகெ - முசுகுந்தனின் ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தான்; ஸடிலதுன்னுத பலஸமேததி - தனித்தனியாக பாய்ந்தாலும், மிகவும் வலிமையாக, வேகமாக பாய்வதான; பஞ்ச நதியொள் - அந்த ஆசிரமத்தில் பாய்ந்த பல நதிகளில்; கடல கண்டனு - அவற்றை கடல் போல பெரியதாகக் கண்டான்; பல பிடதெ பல்லயிஸிருவ - இன்னும் கனியாமல் பூத்துக் குலுங்குவதான மரங்களைக் கொண்ட; ஸம்ப்ரமதி - மிகவும் அழகானதான;

அந்த ஆசிரமத்தில் இருந்த மிகச் சிறந்த முனிவர்கள் அனைவரையும் மரியாதைகளை செய்து, ஸ்ரீராமன், பிறகு அங்கிருந்து புறப்பட்டு, முசுகுந்தனின் ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தான். தனித்தனியாக பாய்ந்தாலும், மிகவும் வலிமையாக, வேகமாக பாய்வதான, அந்த ஆசிரமத்தில் பாய்ந்த பல நதிகளை கடல் போல பெரியதாகக் கண்டான். இன்னும் கனியாமல் பூத்துக் குலுங்குவதான மரங்களைக் கொண்ட மிகவும் அழகானதான வனமாக அது இருந்தது.

**ஆ மஹாவனதொ3ளகெ3 ஸுப4ட**
**ஸ்தோமவிளிது3து3 பாளெயத3 ஸங்க்3**
**ராமதி3தி3ரலி கு3டி3கு3டா3ரங்க3ளு விராஜிஸிது**
**ராமணீயக ரசனெயலி ஸு**
**த்ராமனோலக3த3ந்தெ ரகு4குல**
**ராமனைதி3ரெ ப3ந்து3 கண்ட3ரு ஸகல முனிவரரு ||22**

ஆ மஹாவனதொளகெ - அந்த மிகப்பெரிய வனத்தில்; ஸுபட ஸ்தோம விளிதுது - அந்த சேவகர்களின் (சைன்யங்களின்) கூட்டம் இறங்கி தங்கியது; பாளெயத ஸங்க்ராமதிதிரலி - பற்பல குடிசைகள் ஆகியவற்றுடன்; குடிகுடாரங்களு - கூடாரங்களும்; விராஜிஸிது - அங்கு இருந்தது; ராமணீயக ரசனெயலி - இத்தகைய அற்புதமான சூழ்நிலையில்; ஸுத்ராமனோலகதந்தெ - ஸ்ரீராமனின் சேவையை செய்வதற்காக; ரகுகுல ராமனெய்திரெ

- ரகுகுல திலகனான ஸ்ரீராமனின் எதிரில்; பந்து கண்டரு - வந்து அவனை தரிசனம் செய்தனர்; ஸகல முனிவரரு - அனைத்து முனிவர்களும்.

அந்த மிகப்பெரிய வனத்தில், அந்த சேவகர்களின் (சைன்யங்களின்) கூட்டம் இறங்கி தங்கியது. பற்பல குடிசைகள் ஆகியவற்றுடன், கூடாரங்களும்; அங்கு இருந்தன. இத்தகைய அற்புதமான சூழ்நிலையில், ஸ்ரீராமனின் சேவையை செய்வதற்காக, ரகுகுல திலகனான ஸ்ரீராமனின் எதிரில் வந்து அனைத்து முனிவர்களும், அவனை தரிசனம் செய்தனர்.

**கௌஷிகனு ஜமத3க்3னி ஜன்ஹு ப**
**ராஶரனு ஜாபா3லி ப்4ருகு3 தூ3**
**ர்வாஸ கௌ3தமனாதி3யாத3 ஸமஸ்த முனிவரரு**
**பா4ஸுரத3 தேஜத3லி தம்ம நி**
**வாஸவனு ஹொரவண்டு ப3ந்த3ரு**
**தா3ஶரதி2யனு கண்டு3 ஹரஸித3ரக்ஷதெய தளிது3 ||23**

கௌஷிகரு ஜமதக்னி ஜன்ஹு பராஷரனு ஜாபாலி ப்ருகு தூர்வாஸ கௌதமனு ஆதியாத - இந்த முனிவர்களுடன்; ஸமஸ்த முனிவரரு - அனைத்து முனிவர்களும்; பாஸுரத தேஜதலி - மிகவும் அற்புதமாக வேகத்தில்; தம்ம நிவாஸவனு ஹொரவண்டு - தங்களின் இருப்பிடங்களை விட்டு; பந்தரு - வந்தார்கள்; தாஷரதியனு கண்டு - தாஷரதியான ஸ்ரீராமனைக் கண்டு; ஹரஸிதரு அக்ஷதெய துளிது - அக்ஷதையை ஸ்ரீராமன் மேல் தூவி ஆசிர்வதித்தனர்.

கௌஷிகரு ஜமதக்னி ஜன்ஹு பராஷரனு ஜாபாலி ப்ருகு தூர்வாஸ கௌதமனு ஆதியாத - இந்த முனிவர்களுடன், அனைத்து முனிவர்களும், மிகவும் அற்புதமாக வேகத்தில், தங்களின் இருப்பிடங்களை விட்டு வந்தார்கள். தாஷரதியான ஸ்ரீராமனைக் கண்டு, அக்ஷதையை ஸ்ரீராமன் மேல் தூவி ஆசிர்வதித்தனர்.

**ராம த3ஶரத2 தனய ரகு4குல**
**ஸோம ஸந்ருத ஸனாமனாஹவ**
**பீ4ம ஸுஜன ப்ரேம ஜக3த்3பி4ராம நிஸ்ஸீம**
**தாமரஸத3ள நயன தே3வ**
**ப்ரேம ஸுரகுல மௌளிவந்தி3த**

**ப்ரேமதி$^3$ந்த$^3$லி பாலிஸென்னுதலவரு பொக$^3$ளித$^3$ரு ||24**

ராம - ஸ்ரீராமன்; தஷரத தனய - தசரதனின் மகன்; ரகுகுல ஸோம - ரகுகுலத்தில் உதித்த சந்திரன்; ஸந்ருத - வலிமையானவன்; ஸநாமனாஹவ - அற்புத பெயரை / சரித்திரத்தைக் கொண்டவன்; பீம - ஸர்வக்ஞன்; ஸுஜன ப்ரேம - ஸஜ்ஜனர்களின் / ஸஜ்ஜனர்களை விரும்புபவன்; ஜகதிபிராம - உலக நாயகன்; நிஸ்ஸீம - எல்லைகள் அற்றவன்; தாமரஸதள நயன தேவ - தாமரைக் கண்களைக் கொண்ட ஸ்வாமி. ப்ரேம - அன்பானவனே; ஸுரகுல மௌளிவந்தித - இவ்வாறாக அந்த ஸுர முனிவர்கள் அனைவரும்; ப்ரேமதிந்தலி - மிகவும் அன்புடன் வணங்கி; பாலிஸென்னுதலவரு - எங்களை அருள வேண்டும் என்று கூறியவாறு; பொகளிதரு - ஸ்ரீராமனை போற்றினர்.

ஸ்ரீராமன், தசரதனின் மகன். ரகுகுலத்தில் உதித்த சந்திரன். வலிமையானவன். அற்புத பெயரை / சரித்திரத்தைக் கொண்டவன். ஸர்வக்ஞன். ஸஜ்ஜனர்களின் / ஸஜ்ஜனர்களை விரும்புபவன். உலக நாயகன். எல்லைகள் அற்றவன். தாமரைக் கண்களைக் கொண்ட ஸ்வாமி. அன்பானவன். இவ்வாறாக, அந்த ஸுர முனிவர்கள் அனைவரும் மிகவும் அன்புடன் வணங்கி, எங்களை அருள வேண்டும் என்று கூறியவாறு, ஸ்ரீராமனை போற்றினர்.

**தே$^3$வி ஜானகி ஸஹித வனத$^3$லி**
**நீவு கஷ்$^2$டவ ப$^3$ளஸி ப$^4$க்தர**
**காவ ஹத$^3$னனு நெனெது$^3$ வானர ப$^3$லஸமேதத$^3$லி**
**ராவணன ஸம்ஹரிஸி லங்கெய**
**நா விபீ$^4$ஷ$^2$ணகி$^3$த்து நம்மனு**
**தே$^3$வ பாலிஸெ ப$^3$ந்த$^3$யெந்து$^3$பசரிஸித$^3$ரு ந்ருபன ||25**

தேவி ஜானகி ஸஹித - ஸ்ரீதேவியான ஸீதாதேவியுடன்; வனதலி - காட்டினில்; நீவு கஷ்டவ பளஸி - நீங்கள் மிகவும் கஷ்டப்பட்டவாறு; பக்தர காவ ஹதவனு நெனெது - பக்தர்களை காக்க வேண்டும் என்னும் நோக்கத்தில்; வானர பலஸமேததலி - வானரர்களின் உடன்; ராவணன ஸம்ஹரிஸி - ராவணாசுரனைக் கொன்று; லங்கெயனு ஆ - லங்கையை; விபீஷணகித்து - அந்த விபீஷணனுக்கு கொடுத்து; நம்மனு தேவ பாலிஸெ - அருளியவாறு இங்கு நம்மை அருள்வதற்காக வந்திருக்கும் ஸ்வாமியே; பந்தயெந்துபசரிஸிதரு - என்று சொல்லியவாறு

அங்கு வந்து ஸ்ரீராமனை உபசாரம் செய்தனர்; ந்ருபன - ஸ்ரீராமனை;

ஸ்ரீதேவியான ஸீதாதேவியுடன் காட்டினில் நீங்கள் மிகவும் கஷ்டப்பட்டவாறு, பக்தர்களை காக்க வேண்டும் என்னும் நோக்கத்தில், வானரர்களின் உடன், ராவணாசுரனைக் கொன்று, லங்கையை அந்த விபீஷணனுக்கு கொடுத்து, அருளியவாறு, இங்கு நம்மை அருள்வதற்காக வந்திருக்கும் ஸ்வாமியே, என்று சொல்லியவாறு அங்கு வந்து ஸ்ரீராமனை உபசாரம் செய்தனர், அந்த முனிவர்கள் அனைவரும்.

**ஸாரஹ்ருத$^{3}$யரு நீவு நமகு$^{3}$ப**
**சாரவேகி$^{1}$து$^{3}$ நிம்மடி$^{3}$ய கரு**
**ணாரஸவெ ஸலஹுவுது$^{3}$ நம்மனு ஸாகத$^{3}$ந்திரலி**
**ஆரிகு$^{3}$ண்டி$^{1}$து$^{3}$ நிம்ம த$^{3}$ருஷன**
**ஸேரிதெமகி$^{3}$ந்தி$^{3}$னலியெந்து$^{3}$ப**
**சாரதி$^{3}$ம் ஸத்கரிஸி குள்ளிரிஸித$^{3}$னு முனிவரர ||26**

ஸாரஹ்ருதயரு நீவு - கருணை உள்ளம் கொண்டவர்கள் நீங்கள்; நமகுபசாரவேகிது - நமக்கு ஏன் இந்த உபசாரங்களை செய்கிறீர்கள்?; நிம்மடிய கருணாரஸவெ - உங்களின் கருணை என்னும் ரஸமே; ஸலஹுவுது நம்மனு - எங்களை காக்கிறது; ஸாகதந்திரலி - இந்த உபசாரங்கள் போதும்; ஆரிகுண்டிது - இத்தகைய பாக்கியம் யாருக்கு கிடைக்கும்?; நிம்ம தருஷன ஸேரிது - உங்களின் தரிசனம் கிடைத்ததே; எமகிந்தனிலி எந்து - எமக்கு இன்று கிடைத்தது (பாக்கியம்) என்று சொல்லி; உபசாரதிம் ஸத்கரிஸி - மிகவும் மரியாதைகளை செய்து; முனிவரர - அந்த முனிவர்களை; குள்ளிரிஸிதனு - அமர்த்தினான்.

ஸ்ரீராமன் இவ்வாறு அந்த முனிவர்களிடம் கூறுகிறான். கருணை உள்ளம் கொண்டவர்கள் நீங்கள், நமக்கு ஏன் இந்த உபசாரங்களை செய்கிறீர்கள்? உங்களின் கருணை என்னும் ரஸமே, எங்களை காக்கிறது. இந்த உபசாரங்கள் போதும். இத்தகைய பாக்கியம் யாருக்கு கிடைக்கும்?. உங்களின் தரிசனம் கிடைத்ததே, எமக்கு இன்று கிடைத்தது (பாக்கியம்) என்று சொல்லி; மிகவும் மரியாதைகளை செய்து, ஸ்ரீராமன், அந்த முனிவர்களை அமர்த்தினான்.

**எட$^3$த$^3$ கடெ$^3$யலி கபிகுலேந்த்$^3$ரன**
**க$^3$ட$^3$ண ப$^3$லத$^3$லி ராவணானுஜ**
**ஸட$^3$க$^3$ரதி$^3$ முனி நிகரவிதி$^3$ரலி ஹிந்தெ$^3$ வானரரு**
**மட$^3$தி$^3$ லக்ஷ்மண தே$^3$வரிர்வரு**
**பி$^3$ட$^3$தெ$^3$ சிம்மலு சாமரங்க$^3$ள**
**பொட$^3$விபதி ஸ்ரீராம ஸிம்ஹாஸனதி$^3$ ரஞ்சிஸித$^3$ ||27**

எடத கடெயலி - ஸ்ரீராமனின் இடது புறத்தில்; கபிகுலேந்த்ரன - கபி குலேந்திரனான சுக்ரீவன்; கடண பலதலி - அபாரமான பலத்தினைக் கொண்ட; ராவணானுஜ - விபீஷணன்; ஸடகரதி முனி நிகரவிதிரலி - (அவர்களின் அருகில்) மகிழ்ச்சியுடன் முனிவர்கள்; ஹிந்தெ - பின்னால்; வானரரு - வானரர்கள் நின்றிருக்க; மடதி லக்ஷ்மண தேவரிர்வரு - ஸ்ரீஸீதாதேவி மற்றும் லட்சுமணன் என இந்த இருவரும்; பிடதெ - தொடர்ச்சியாக; சாமரங்கள சிம்மலு - சாமரங்களால் வீசிக் கொண்டிருக்க; பொடவிபதி - பூமண்டலாதிபதியான; ஸ்ரீராம - ஸ்ரீராமன்; ஸிம்ஹாஸனதி - தனது சிம்மாசனத்தில்; ரஞ்சிஸித - அமர்ந்தான்.

ஸ்ரீராமனின் இடது புறத்தில் கபி குலேந்திரனான சுக்ரீவன், அபாரமான பலத்தினைக் கொண்ட; விபீஷணன் இருக்க, அவர்களின் அருகில், மகிழ்ச்சியுடன் முனிவர்கள், பின்னால் வானரர்கள் நின்றிருக்க, ஸ்ரீஸீதாதேவி மற்றும் லட்சுமணன் என இந்த இருவரும் தொடர்ச்சியாக சாமரங்களால் வீசிக் கொண்டிருக்க, பூமண்டலாதிபதியான ஸ்ரீராமன், தனது சிம்மாசனத்தில் அமர்ந்தான்.

**அல்லி நெரெத$^3$ மஹாமுனீஸ்வர**
**ரெல்ல தரிஸித$^3$ரகி$^2$ள வஸ்துவ**
**பெ$^3$ல்ல ஸக்கரெ ஜேனுதுப்ப ரஸாயனங்க$^3$ளலி**
**பு$^4$ல்லவிஸி ரசிஸித$^3$ ஸூப$^4$க்ஷக$^3$**
**ளெல்லவனு தும்பி$^3$த$^3$ரு ஹெட$^3$கெ$^3$க$^3$**
**ளல்லி ஜோடி$^3$ஸி ஹோரிஸி தந்த$^3$ரு ராமனோலக$^3$கெ ||28**

அல்லி நெரெத - அங்கு வீற்றிருந்த; மஹாமுனீஷ்வரரெல்ல - மஹா முனிவர்கள் அனைவரும்; தரஸிதரு அகிள வஸ்துவ - அனைத்து பொருட்களையும் கொண்டு வந்தனர்; பெல்ல ஸக்கரெ ஜேனுதுப்ப - வெல்லம், சர்க்கரை, தேன்;

ரஸாயனங்களலி - பழச்சாறுகளில்; புல்லவிஸி ரசிஸித ஸூபக்ஷகளெல்லவனு - முக்கி செய்யப்பட்ட பக்ஷ்யங்களை; ஹெடகெகளலி தும்பிதரு - அந்த இடத்தில் அவற்றை வைத்து நிறைத்தனர்; ஜோடிஸி ஹோரிஸி தந்தரு - அவற்றை சேர்த்து, கட்டி கொண்டு வந்தனர்; ராமனொலகெ - ஸ்ரீராமனின் இடத்திற்கு (அவனுக்கு சமர்ப்பிப்பதற்காக).

அங்கு வீற்றிருந்த மஹா முனிவர்கள் அனைவரும், அனைத்து பொருட்களையும் கொண்டு வந்தனர். வெல்லம், சர்க்கரை, தேன், பழச்சாறுகளில் முக்கி செய்யப்பட்ட பக்ஷ்யங்களை, அந்த இடத்தில் அவற்றை வைத்து நிறைத்தனர். அவற்றை சேர்த்து, கட்டி கொண்டு ஸ்ரீராமனின் இடத்திற்கு அவனுக்கு சமர்ப்பிப்பதற்காக கொண்டு வந்து அவன் அருகில் வைத்தனர்.

**தந்து3 ஸிஷ்2யரு ப4க்ஷக3ள முத3**
**தி3ந்த3 ஸூரியலு நோடி3 நஸூநகெ3**
**யிந்த3 ரகு4குல ஸார்வபௌ4மனு கரஸி நிஜப3லகெ**
**அந்து3 கொடி3ஸலு நோடி3த3ரு ருசி**
**யிந்த3 ஸவித3ரு போ4ஜ்யக3ளனா**
**நந்த3த3லி கொண்டா3டி3த3ரு வானரரு முனிவரர ||29**

சிஷ்யரு தந்து - இவ்வாறாக சிஷ்யர்கள் (முனிவர்கள்); பக்ஷ்யகள முததிந்த ஸூரியலு - இத்தகைய பக்ஷ்யங்களை மிகவும் மகிழ்ச்சியுடன் சமர்ப்பிக்க; நோடி நஸூ நகெயிந்த - அவற்றை புன்னகையுடன் பார்த்தவாறு; ரகுகுல ஸார்வபௌமனு - ரகுகுல திலகனான ஸ்ரீராமன்; கரஸி நிஜபலகெ அந்து கொடிஸலு - தன் சேனையினரை (வானரர்களை) அழைத்து அவற்றை அவர்களுக்கு கொடுக்க; நோடிதரு - அவர்கள் அதனை பார்த்தனர்; ருசியிந்த ஸவிதரு - மிகவும் விரும்பி சுவைத்தனர்; போஜ்யகளன - அத்தகைய போஜ்யங்களை; ஆனந்ததலி கொண்டாடிதரு - மிகவும் மகிழ்ச்சியுடன் கொண்டாடினார்கள்; வானரரு முனிவரர - வாரனர்கள் அந்த முனிவர்களை கொண்டாடினார்கள்.

இவ்வாறாக சிஷ்யர்கள் (முனிவர்கள்) இத்தகைய பக்ஷ்யங்களை மிகவும் மகிழ்ச்சியுடன் சமர்ப்பிக்க. அவற்றை புன்னகையுடன் பார்த்தவாறு, ரகுகுல திலகனான ஸ்ரீராமன், தன் சேனையினரை (வானரர்களை) அழைத்து அவற்றை அவர்களுக்கு கொடுக்க, அவர்கள் அதனை பார்த்தனர். மிகவும் விரும்பி சுவைத்தனர். அத்தகைய போஜ்யங்களை, மிகவும்

மகிழ்ச்சியுடன் கொண்டாடினார்கள். வானரர்கள் அந்த முனிவர்களை கொண்டாடினார்கள்.

**அனிலஸுத பா$^{3}$ரெந்து$^{3}$ ரகு$^{4}$னந்**
**த$^{3}$னனு கருணதொ$^{3}$ளிவர ருசியிம்**
**தெ$^{3}$னலு கரக$^{3}$ள முகி$^{3}$து$^{3}$ பி$^{3}$ன்னயிஸித$^{3}$னு ரகு$^{4}$பதிகெ$^{3}$**
**இனகுலான் வயதிலக சித்தெயி**
**ஸெனகெ$^{3}$ ஸவியஹுதி$^{3}$ன்னு தா$^{4}$ன்யத$^{3}$**
**தனுவனீக்ஷிஸபே$^{3}$கு தே$^{3}$வரு த$^{1}$ரிஸி நீவெந்த$^{3}$ ||30**

அனிலஸுத - வாயுபுத்திரனான ஹனுமந்தனை; ரகுனந்தனனு பாரெந்து - ஶ்ரீராமன் அழைத்து; கருணதொளிவர ருசியெந்தெனலு - இவ்வாறு கேட்கிறார் - இதன் சுவை எப்படி என்று கேட்க; கரகள முகிது - ஹனுமந்தன், கைகளை குவித்து; பின்னயிஸிதனு - வேண்டி கொள்கிறார்; ரகுபதிகெ - ஶ்ரீராமனிடம்; இனகுலான்வயதிலக - சூர்ய குலத்தின் திலகனே; சித்தயிஸெனகெ - கருணையுடன்; ஸவியஹுதின்னு தான்யத தனுவனு - தானியங்களில் மிகவும் சுவையானதான தானியத்தை; ஈக்ஷிஸபேகு தேவரு - அருள வேண்டும், ஸ்வாமி; தரிஸி நீவெந்த - நீங்கள் அதனை வரச் செய்யுங்கள் - என்றார்.

வாயுபுத்திரனான ஹனுமந்தனை, ஶ்ரீராமன் அழைத்து இவ்வாறு கேட்கிறார். இதன் சுவை எப்படி இருக்கிறது?. இதற்கு, ஹனுமந்தன், கைகளை குவித்து இவ்வாறு வேண்டி கொள்கிறார். சூர்ய குலத்தின் திலகனே, கருணையுடன், தானியங்களில் மிகவும் சுவையானதான தானியத்தை அருள வேண்டும் ஸ்வாமி. நீங்கள் அதனை வரச் செய்யுங்கள் - என்றார்.

**எனலு ராம ந்ருபால கௌ$^{3}$தம**
**முனியனீக்ஷிஸி பே$^{3}$கு ஸலெ தரி**
**ஸெனலு தா$^{4}$ன்யவனொட$^{3}$னெ யாலோசிஸித$^{3}$ரீ ஹத$^{3}$ன**
**மனனலிது$^{3}$ தந்தம்ம ஸிஷ்யர**
**வினயதி$^{3}$ந்த$^{3}$லி கரெஸி தாரெந்**
**தெ$^{3}$னலு மெரெத$^{3}$ரு தளுவத$^{3}$வரனு தந்து$^{3}$ ஸபெ$^{4}$யொளகெ$^{3}$ ||31**

எனலு - என்று ஹனுமந்தன் கேட்க; ராம ந்ருபால - மக்களை காப்பவனான ஶ்ரீராமன்; கௌதம முனியனீக்ஷிஸி - கௌதம ரிஷிகளை அழைத்து; பேகு ஸலெ தரிஸெலனு - (ஹனுமந்தன்

கேட்டது) வேண்டும், உடனடியாக வரவழைக்கவும் என்று சொல்ல;
தான்யவனொடனெ ஆலோசிஸிதரு - (அந்த முனிவர்கள்) தானியங்களுடனேயே ஆலோசித்து; ஈ ஹதன மனனலிது - இவ்வாறாக கவனத்துடன், மனதில் கொண்டு; தந்தம்ம சிஷ்யர - அவரவர்களின் சிஷ்யர்களை; வினயதிந்தலி கரெஸி - மரியாதையுடன் அழைத்து; தாரெந்தெனலு - இவ்வாறாக கொண்டு வருமாறு கூற; தளுவதவரனு தந்து ஸபெயொளகெ - (அவர்களும்) அவ்வாறே கொண்டு வந்து சபைக்கு; மெரெதரு - வந்தனர்.

(சென்ற பத்யத்தில் பார்த்தவாறு), ஹனுமந்தன் கேட்க, மக்களை காப்பவனான ஸ்ரீராமன், கௌதம ரிஷிகளை அழைத்து, (ஹனுமந்தன் கேட்டது) வேண்டும், உடனடியாக வரவழைக்கவும் என்று சொல்ல, (அந்த முனிவர்கள்) தானியங்களுடனேயே ஆலோசித்து, இவ்வாறாக கவனத்துடன் மனதில் கொண்டு, அவரவர்களின் சிஷ்யர்களை மரியாதையுடன் அழைத்து, இவ்வாறாக கொண்டு வருமாறு கூற, (அவர்களும்) அவ்வாறே கொண்டு வந்து சபைக்கு வந்தனர்.

**நரெத[3]லெக[3]னிது[3] நெல்லு ஹாரக**
**ப[3]ரகு[3] ஜோளவு கம்பு[3] ஸாமெயு**
**உருதரத[3] நவணெயிது[3] நவதா[4]ன்யவெந்தெ[3]னலு**
**மெரெவ ராஶிய கண்டு[3] இத[3]ரொளு**
**பரமஸாரத[3] ஹ்ருத[3]யனாரெந்**
**த[3]ரஸி கேளித[3]னல்லிருதிஹ மஹாமுனீஸ்வரர ||32**

நரெதலெகனிது - ராகியை; நெல்லு - நெல்; ஹாரக பரகு - வரகு; ஜோளவு - சோளம்; கம்பு - கம்பு; ஸாமெயு - ஸாமை; உருதரத நவணெயிது - மிகவும் சிறந்ததான தானியங்கள் இவை; நவதான்யவெந்தெனலு - இவையே நவதானியங்கள் என்று சொல்ல; மெரெவ ராஷிய கண்டு - அங்கு வைத்திருந்த தானியங்களைக் கண்டு; இதரொளு - இவற்றில்; பரமஸாரத ஹ்ருதயனு - மிகவும் நல்ல இதயம் கொண்டது (சிறந்தது); யாரெந்தரஸி - யார் என்று; அல்லிருதிஹ - அங்கு இருந்த; மஹாமுனீஷ்வரர - மஹா முனீஷ்வரர்களை; கேளித - கேட்டான்.

ராகி, நெல், வரகு, சோளம், கம்பு, ஸாமை - மிகவும் சிறந்ததான தானியங்கள் இவை. இவையே நவதானியங்கள் என்று முனிவர்கள் சொல்ல, அங்கு வைத்திருந்த தானியங்களைக்

கண்டு, இவற்றில், மிகவும் நல்ல இதயம் கொண்டது (சிறந்தது), யார் என்று, அங்கு இருந்த மஹா முனீஷ்வரர்களை கேட்டான்.

**கெலரு கோ[3]தி[3]ய ஸாமெயனு கெல**
**கெலரு நவணெய கம்பு[3] ஜோளவ**
**கெலவு ஹாரகவெந்து[3] கெலவரு நெல்லனதிஶயவ**
**கெலரு நரெத[3]லெக[3]னனு பதிகரி**
**ஸலத[3] நோடி[3]த[3] ந்ருபதியத[3]ரொளு**
**ஹலவு மதவேகொந்த[3]னெ பேளெனலு கௌ[3]தமனு ||33**

கெலரு கோதிய - சிலர் கோதுமையை; ஸாமெயனு கெல - சிலர் ஸாமையை; கெலரு நவணெய கம்பு - சிலர் தானியமான கம்பினை; சோளவ - சோளத்தினை சிலர்; கெலவு ஹாரகவெந்து - சிலர் வரகினை; கெலவு நெல்லனதிஷயவ - சிலர் நெல்லினை; கெலரு நரெதலெகனனு - சிலர் ராகியினை; பரிகரிஸலு - பரிந்துரைக்க; அத நோடித ந்ருபதி - இதனை பார்த்த ஸ்ரீராமன் ஆனவன்; அதரொளு ஹலவு மதவேகே - இதில் ஏன் இவ்வளவு அபிப்பிராய பேதங்கள்?; ஒந்தனே பேளெனலு - ஒன்றையே சொல்லுங்கள் என்று கூற; கௌதமனு - அப்போது கௌதம ரிஷிகள்:

சிலர் கோதுமையை, சிலர் ஸாமையை, சிலர் தானியமான கம்பினை, சோளத்தினை சிலர், சிலர் வரகினை, சிலர் நெல்லினை, சிலர் ராகியினை, பரிந்துரைக்க, இதனை பார்த்த ஸ்ரீராமன், இதில் ஏன் இவ்வளவு அபிப்பிராய பேதங்கள்?. ஒன்றையே சொல்லுங்கள் என்று கூற, அப்போது கௌதம ரிஷிகள் இவ்வாறு கூறத் துவங்கினார்.

**தா[3]ஶரதி[2] சித்தயிஸு நம்மய**
**தே[3]ஶகதிஶய நரெத[3]லெக[3]னே**
**வாஸியுள்ளவனீத மிக்கின தா[4]ன்யவேகெ[1]னலு**
**லேஸனாடி[3]தெ[3] முனிப கௌ[3]தம**
**தோ[3]ஷ[2] ரஹிதனு பக்ஷபாதவ**
**நீஸு பரியலி மாடு[3]வரெ ஶிவயெந்த[3]னா வ்ரீஹிக[3] ||34**

தாஷரதி சித்தயிஸு - ஹே ஸ்ரீராமனே, கேள். நம்மய தேஷகெ அதிஷய - நம் நாட்டில் மிகச் சிறந்த (தானியம்); நரெதலெகனே - ராகியே; வாஸியுள்ளவனு - நமக்கு நன்மை தருபவன்; ஈத - இவனே (ராகியே); மிக்கின தான்யவேகெ - (அப்போது ஸ்ரீராமன்)

மற்ற தானியங்கள் ஏன் இருக்கின்றன என்று கேட்க; லேஸனாடிதெ முனிப கௌதம - முனிவரே கௌதமரே, நீங்கள் சரியாக கூறினீர்கள்; தோஷ ரஹிதனு - தோஷதூரனே; பக்ஷபாதவனு ஈஸு பரியலி - இந்த விஷயத்தில் பாரபட்சத்தினை; மாடுவரெ - காட்டலாமா; ஷிவயெந்தனா வ்ரிஹிக - அரிசி இவ்வாறு சரியாகப் பேசத் துவங்கியது.

ஹே ஸ்ரீராமனே, கேள். நம் நாட்டில் மிகச் சிறந்த தானியம் ராகியே. நமக்கு நன்மை தருபவன் இவனே (ராகியே) என்றார். அப்போது ஸ்ரீராமன், பின் மற்ற தானியங்கள் ஏன் இருக்கின்றன என்று கேட்க, அப்போது அரிசி இவ்வாறு சரியாகப் பேசத் துவங்கியது. முனிவரே கௌதமரே, நீங்கள் சரியாக கூறினீர்கள். தோஷதூரனே, ஸ்ரீராமனே. இந்த விஷயத்தில் பாரபட்சத்தினை; காட்டலாமா;?.

**எல்ல த4ர்மத3 ஸாரவனு நீவ்**
**ப3ல்லிரரியிரெ எல்லரனு நீ**
**வில்லி நுடி3வ உபேக்ஷியுண்டே1 ஸாகத3ந்தி1ரலி**
**நெல்லு நானிரெ கோ3தி3 மொத3லா**
**தெ3ல்ல தா4ன்யக3ளிரலு இத3ரலி**
**ப3ல்லித3னு நரெத3லெக3னெம்பு3தி3தா3வ மதவெந்த3 ||35**

எல்ல தர்மத ஸாரவனு - அனைத்து தர்மங்களின் ஸாரத்தையும்; நீவ் பல்லிரரியிரெ - நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்; எல்லரனு நீவில்லி - (இப்படியிருக்கையில்), அனைவரையும் நீங்கள் இவ்வாறு; நுடிவ உபேக்ஷெயிண்டெ - புறக்கணிக்கலாமா? (பாரபட்சம் காட்டலாமா?); ஸாகதந்திரலி - வேண்டாம். இது போதும்; நெல்லு நானிரே - நெல் (அரிசி) நான் இருக்கையில்; கோதி மொதலாதெல்ல - கோதுமை ஆகிய அனைத்து; தான்யகளிரலு - தானியங்கள் இருக்கையில்; இதரலி பல்லிதனு - இவற்றில் (எங்களில்) சிறந்தவன்; நரெதலெகனு - ராகியே (சிறந்தது); எம்புதிவாத மதவெந்த - என்பது எப்படி சரியாகும்?.

அரிசி பேசியது: அனைத்து தர்மங்களின் ஸாரத்தையும் நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். (இப்படியிருக்கையில்), அனைவரையும் நீங்கள் இவ்வாறு புறக்கணிக்கலாமா?. பாரபட்சம் காட்டலாமா? வேண்டாம். இது போதும். நெல் (அரிசி) நான் இருக்கையில், கோதுமை ஆகிய அனைத்து தானியங்கள் இருக்கையில், இவற்றில் எங்களில் சிறந்தவன் ராகியே (சிறந்தது) என்பது எப்படி சரியாகும்?.

**ஏனெலவு நரெத$^3$லெக$^3$ நீனு ஸ**
**மானனே எனகி$^3$ல்லி நம்மனு**
**தா$^3$னவாந்தகெ ப$^3$ல்லனிப்$^3$ப$^3$ர ஹெச்சு குந்து$^3$க$^3$ள**
**ஜானகி பதி ஸனிஹத$^3$லி குல**
**ஹீன நீனு ப்ரதிஷ்ட$^2$ ஸூடு$^3$ மதி**
**ஹீன நீனெந்தெ$^3$னுத க$^2$தியலி பெ$^3$ய்து$^3$ ப$^4$ங்கி$^3$ஸித$^3$ ||36**

நெல்லானது ராகியைப் பார்த்து இவ்வாறு சொல்கிறது.
ஏனெலவோ நரெதலெக - ஹே ராகியே; நீனு ஸமானனே எனகில்லி - நீ எனக்கு சமானனா? (இல்லை); நம்மனு - நம் இருவரையும்; தானவாந்தகெ பல்லனு - அசுரர்களை வெல்பவனான ஸ்ரீராமனே அறிவான்; இப்பர ஹெச்சு குந்துகள - நம் இருவரின் சிறப்பு / குறைகளை; ஜானகி பதி ஸனிஹதலி - ஜானகிபதியான ஸ்ரீராமனின் சன்னிதானத்தில்; குல ஹீன நீனு - குடும்பங்களை கெடுப்பவன் நீ; ப்ரதிஷ்ட ஸூடு மதி - குறைவான புத்தி கொண்டவன்; ஹீன நீனு - நீ குறைவானவன் (அதமன்); எந்தெனுத - என்று சொல்லியவாறு; கதியலி பெய்து - கோபத்துடன் திட்டி; பங்கிஸித - அவமானம் செய்தான் (அரிசி - ராகியைப் பற்றி சொன்னது இது).

நெல்லானது ராகியைப் பார்த்து இவ்வாறு சொல்கிறது. ஹே ராகியே; நீ எனக்கு சமானனா? (இல்லை). நம் இருவரையும், அசுரர்களை வெல்பவனான ஸ்ரீராமனே அறிவான். நம் இருவரின் சிறப்பு / குறைகளை, ஜானகிபதியான ஸ்ரீராமனின் சன்னிதானத்தில் சொல்வோம். குடும்பங்களை கெடுப்பவன் நீ. குறைவான புத்தி கொண்டவன். நீ குறைவானவன் (அதமன்) என்று சொல்லியவாறு கோபத்துடன் திட்டி, அவமானம் செய்தான் (அரிசி - ராகியைப் பற்றி சொன்னது இது).

**லோகத$^3$லதி$^4$க போ$^4$ஜனவிதெ$^3$ந்**
**தா$^3$கெவாளரு பு$^3$த$^4$ரு ஜரெது$^3$ நி**
**ராகரிஸி பி$^3$ட$^3$லந்து நீ ஸௌத்$^3$ரான்னவாதெ$^3$யல**
**நாகனிளயரு ஸாக்ஷி நின்ன வி**
**வேகிக$^3$ளு மெச்சுவரெ பா$^3$ஹிர**
**ஸாகு நடெ$^3$ நீனாவ மான்யனு கடெ$^3$கெ தொலகெ$^3$ந்த$^3$ ||37**

லோகதலதிக - உலகத்தில் அதிகமானவர்கள் உண்ணும்; போஜனவிதெந்து - உணவு இதுவே (அரிசியே) என்று; ஆகெவாளரு - அறிஞர்கள்; புதரு - கற்றறிந்தவர்கள்; ஜரெது

நிராகரிஸி - தள்ளி, நிராகரித்து; பிடலந்து - விட்டதால்; நீ - நீ (ராகி); ஷூத்ரான்னவாதெ - நீ நான்காம் வர்ணத்தவர்கள் உண்ணும் உணவு ஆனாய்; நாகனிளயரு ஸாக்ஷி - இதற்கு தேவலோகத்தில் வாழும் தேவர்களே சாட்சி; நின்ன விவேகிகளு மெச்சுவரெ - உன்னை அறிஞர்கள் போற்றுவார்களா?; ஸாகு பாஹிர நடெ - போதும், வெளியே போ; நீனாவ மான்யனு - நீ யாரால் போற்றப்படுகிறாய்? (யாராலும் இல்லை); கடெகெ தொலகெந்த - கண்காணாத இடத்திற்கு தொலைந்து போய்விடு என்றான் (அரிசி).

உலகத்தில் அதிகமானவர்கள் உண்ணும் உணவு இதுவே (அரிசியே) என்று அறிஞர்கள், கற்றறிந்தவர்கள் தள்ளி, நிராகரித்து விட்டதால், நீ (ராகி) நான்காம் வர்ணத்தவர்கள் உண்ணும் உணவு ஆனாய். இதற்கு தேவலோகத்தில் வாழும் தேவர்களே சாட்சி. உன்னை அறிஞர்கள் போற்றுவார்களா?. போதும், வெளியே போ. நீ யாரால் போற்றப்படுகிறாய்? (யாராலும் இல்லை). கண்காணாத இடத்திற்கு தொலைந்து போய்விடு என்றான் (அரிசி).

**க்ஷிதியமரரு பனயனத$^3$லி ஸு**
**வ்ரத ஸுபோ$^4$ஜன பரம மந்த்ரா**
**க்ஷதெக$^3$ளலி ஶுப$^4$ஶோப$^4$னதலாரதிகெ$^3$ ஹிரியரலி**
**க்ரதுக$^3$ளெடெ$^3$யொளக$^3$ரமனெயலி**
**ப்ரதிதி$^3$னவு ரஞ்சிஸுத தே$^3$வரி**
**க$^3$திஶயத நைவேத்$^3$ய தானஹெென்னெந்த$^3$னா வ்ரிஹிக$^3$ ||38**

க்ஷிதிய அமரரு - இந்த பூமியில் பிராமணர்கள்; உபனயனதலி - தாங்கள் செய்யும் உபநயனங்களில்; ஸுவ்ரத ஸுபோஜன - பல நல்ல விரதங்களில், போஜனங்களில்; பரம மந்த்ராக்ஷதெகளலி - மந்த்ராட்சதை பயன்படுத்தும்போது; ஷுப ஷூபனதலாரதிகெ - மங்களங்களை தரக்கூடியதான ஆரதியில்; க்ரடுகளெடெயொளகெ - பூஜைகளை செய்யும்போது; அரமனெயலி - அரண்மனைகளில் (வீடுகளில்); ப்ரதிதினவு ரஞ்சிஸுத - தினம்தோறும் வந்து வீற்றிருக்கும்; தேவரிகதிஷயத - ஸ்வாமிக்கு, அற்புதமான; நைவேத்ய - நைவேத்யங்களில்; தானஹென்னெந்தனா வ்ரிஹிக - அரிசியானவன், தானே பயன்படுத்தப்படுகிறேன் என்றான்.

இந்த பூமியில் பிராமணர்கள், தாங்கள் செய்யும் உபநயனங்களில், பல நல்ல விரதங்களில், போஜனங்களில்,

மந்த்ராட்சதை பயன்படுத்தும்போது, மங்களங்களை தரக்கூடியதான ஆரதியில், பூஜைகளை செய்யும்போது, அரண்மனைகளில் (வீடுகளில்), தினம்தோறும் வந்து வீற்றிருக்கும் ஸ்வாமிக்கு, அற்புதமான நைவேத்யங்களில், அரிசியானவன், தானே பயன்படுத்தப்படுகிறேன் என்றான்.

**ஜனபரிகெ$^3$ ஶிஶுக$^3$ளிகெ$^3$ பா$^3$ந்த$^4$வ**
**ஜனரெடெ$^3$கெ$^3$ ப்$^3$ரம்ஹர ஸமாரா**
**த$^4$னெகெ$^3$ வித்$^4$யாரம்ப$^4$ காலகெ ஸகல பூ$^4$ஸுரர**
**மனெக$^3$ளலி ஹரிதி$^3$வஸதௌ$^3$பா**
**ஸனெக$^3$ளலி தா யோக்$^3$யனஹுதெ$^3$ந்**
**தெ$^3$னிஸிகொம்பெ$^3$னு நீனயோக்$^3$யனு ப்$^4$ரஷ்ட தொலகெ$^3$ந்த$^3$ ||39**

ஜனபரிகெ - அரசர்களுக்கு; ஷிஷுகளிகெ - குழந்தைகளுக்கு; பாந்தவ ஜனரெடெகெ - உற்றார் உறவினர்களுக்கு; பிரம்மர ஸமாராதனெகெ - மூத்தவர்களின் (யதிகளின்) சமாராதனைகளில்; வித்யாரம்ப காலகெ - வித்யாரம்பம் செய்யும் நேரத்தில்; ஸகல பூஸுரர மனெகளலி - அனைத்து பிராமணர்களின் வீடுகளிலும்; ஹரிதிவஸத ஔபாஸனெகளலி - ஔபாஸனம் போன்ற செயல்களை செய்யும்போது; தா - நான் (அரிசி); யோக்யனஹுது எந்தெனிஸிகொம்பெனு - நானே தகுதியானவன் என்று நினைத்துக் கொள்கிறேன்; நீனயோக்யனு - நீ அந்த இடங்களில் தகுதி இல்லாதவன்; ப்ரஷ்ட - உன்னை அனைவரும் புறக்கணிப்பார்கள்; தொலகெந்த - இங்கிருந்து உடனே வெளியே போய்விடு என்றான், அரிசி.

அரசர்களுக்கு, குழந்தைகளுக்கு, உற்றார் உறவினர்களுக்கு, மூத்தவர்களின் (யதிகளின்) சமாராதனைகளில், வித்யாரம்பம் செய்யும் நேரத்தில், அனைத்து பிராமணர்களின் வீடுகளிலும், ஔபாஸனம் போன்ற செயல்களை செய்யும்போது, நான் (அரிசி) - நானே தகுதியானவன் என்று நினைத்துக் கொள்கிறேன். நீ அந்த இடங்களில் தகுதி இல்லாதவன். உன்னை அனைவரும் புறக்கணிப்பார்கள். இங்கிருந்து உடனே வெளியே போய்விடு என்றான், அரிசி.

**ஹொஸ மனெய புண்யார்ச்சனெகெ$^3$ மிகெ$^3$**
**யெஸெவ மது$^3$மக்களிகெ$^3$ ஸேஸெகெ$^3$**
**வஸுமதீஶர க$^3$ருடி$^3$யலி ஶஸ்த்ராஸ்த்ரத$^3$ர்ச்சனெகெ$^3$**
**எஸெவ விப்ரர பா$^2$லத$^3$லி ரஞ்**

**சிஸுவ க[3]ந்தா[4]க்ஷதெயஹெனு பா[4]**
**விஸலு லோகதொ[3]ளாரு ஸரியிந்தெந்த[3]னா வ்ரிஹிக[3] ||40**

ஹொஸ மனெய புண்யார்ச்சனெகெ - புதிய வீடு கட்டி அங்கு நடக்கும் புண்யாஹவாசனங்களில்; மிகெ எஸெவ மதுமக்களிகெ - வது / வரர்கள் மேல் தூவும் சந்தர்ப்பங்களில்; ஸேஸெகெ வஸுமதீஷர கருடியலி - நாட்டை ஆளும் அரசர்களிடம் இருக்கும்; ஷஸ்த்ராஸ்த்ரத அர்ச்சனெகெ - ஷஸ்திர அஸ்திரங்களை பூஜிக்கும்போது; எஸெவ விப்ரர பாலதலி ரஞ்சிஸுவ - அந்த சந்தர்ப்பங்களில் தூவும் பிராமணர்களிடம் இருப்பதான; கந்தாக்ஷதெயஹெனு - கந்தாக் ஷதையில் ; பாவிஸலு - இருப்பதற்கு; லோகதொளாரு ஸரி - இந்த உலகத்தில் யார் சரியானவர்கள்?; எந்தெந்தனா வ்ரிஹிக - என்று கூறினான் அரிசி.

புதிய வீடு கட்டி அங்கு நடக்கும் புண்யாஹவாசனங்களில், வது / வரர்கள் மேல் தூவும் சந்தர்ப்பங்களில், நாட்டை ஆளும் அரசர்களிடம் இருக்கும் ஷஸ்திர அஸ்திரங்களை பூஜிக்கும்போது, அந்த சந்தர்ப்பங்களில் தூவும் பிராமணர்களிடம் இருப்பதான கந்தாக்ஷதையில் இருப்பதற்கு இந்த உலகத்தில் யார் சரியானவர்கள்? (நான்தான்) என்று கூறினான் அரிசி.

**த[4]ரணியமரரு மந்த்ர தந்த்ரோ**
**ச்சரணெயலி ஹஸ்தாம்பு[4]ஜதி[3] மிகெ[3]**
**ஹரஸி கொட[3]லக்ஷதெய மண்டெ[3]யொளாந்த மஹிமரிகெ[3]**
**து[3]ரித து[3]க்க[2] வினாஶ மங்க[3]ள**
**கரவஹுது[3] தானீவெ ஸந்தத**
**ஸிரிய ஸம்பத்தாயுவனு கேளெந்த[3]னா வ்ரிஹிக ||41**

தரணியமரரு - பூமியில் இருக்கும் பிராமணர்கள்; மந்த்ர தந்த்ரோச்சரணெயலி - மந்திர தந்திரங்களை உச்சாரணம் செய்கையில்; ஹஸ்தாம்புஜதி - அவர்களின் கையில்; மிகெஹரஸி கொடலக்ஷதெய - அதிகமாக கொடுக்கத்தக்கதான அக்ஷதையின்; மண்டெயொளாந்த மஹிமரிகெ - தலை குனிந்து வணங்கும் மஹாத்மருக்கு; துரித துக்க வினாஷ - அனைத்து வித கஷ்ட, துக்கங்களும் விலகுகின்றன; மங்கள கரவஹுது - மங்களங்கள் வருகின்றன; தானீவெ ஸந்தத - இவற்றை நானே எப்போதும் அவர்களுக்குக்

கொடுக்கிறேன்; ஸிரிய ஸம்பத்தாயுவனு - ஸ்ரீலட்சுமிதேவியின் செல்வங்களையே நான் தருகிறேன்; கேளெந்தெனா வ்ரிஹிக - கேட்பாயாக என்றான் அரிசி.

பூமியில் இருக்கும் பிராமணர்கள், மந்திர தந்திரங்களை உச்சாரணம் செய்கையில், அவர்களின் கையில்; அதிகமாக கொடுக்கத்தக்கதான அக்ஷதையின் முன், தலை குனிந்து வணங்கும் மஹாத்மருக்கு, அனைத்து வித கஷ்ட, துக்கங்களும் விலகுகின்றன. மங்களங்கள் வருகின்றன. இவற்றை நானே எப்போதும் அவர்களுக்குக் கொடுக்கிறேன். ஸ்ரீலட்சுமிதேவியின் செல்வங்களையே நான் தருகிறேன், கேட்பாயாக என்றான் அரிசி.

**பரிமளத3 சந்த3னத3 தருவிகெ3**
**ஸரியெ ஒணகி3த3 காஷ்2ட2 கோ3வது3**
**கரெத3 ஹாலிகெ3 குரிய ஹாலந்தரவெ பா4விஸலு**
**பரம ஸாஹஸி வீர ஹனுமகெ3**
**மரத3 மேலண கபியு தானந்**
**தரவெ க4ட3 நீனெனகெ3 ஸரியே ப்4ரஷ்ட தொலகெ3ந்த3 ||42**

பரிமளத சந்தனத தருவிகெ - நறுமணம் மிக்க சந்தனத்தைத் தரும் கட்டைக்கு; ஒணகித காஷ்ட ஸரியெ - உலர்ந்த சாதாரண மரக்கட்டை சரியாகுமா? (ஆகாது); கோவது கரெத ஹாலிகெ - அனைத்து பகவத் ஸன்னிதானங்களையும் விசேஷமாக கொண்டிருக்கும் பசுவின் பாலுக்கு; குரிய ஹாலந்தரவே பாவிஸலு - ஒரு பன்றியின் (ஆட்டின்) பால் சமானம் ஆகும் என்று நினைக்கலாமா? (கூடாது); பரம ஸாஹஸி வீர ஹனுமகெ - மிகச் சிறந்த வீரரான ஹனுமந்தனுக்கு; மரத மேலண கபியு தானந்தரவெ கட - மரத்தின் மேல் அமர்ந்திருக்கும் ஒரு சாதாரண குரங்கு சமானம் ஆகுமா?; நீனெனகெ ஸரியே - அதைப் போல நீ எனக்கு சரியாகுமா?; ப்ரஷ்ட தொலகெந்த - ப்ரஷ்டனே, இங்கிருந்து ஓடிப் போய்விடு என்றான் (அரிசி).

நறுமணம் மிக்க சந்தனத்தைத் தரும் கட்டைக்கு, உலர்ந்த சாதாரண மரக்கட்டை சரியாகுமா? (ஆகாது). அனைத்து பகவத் ஸன்னிதானங்களையும் விசேஷமாக கொண்டிருக்கும் பசுவின் பாலுக்கு, ஒரு பன்றியின் (ஆட்டின்) பால் சமானம் ஆகும் என்று நினைக்கலாமா? (கூடாது). மிகச் சிறந்த வீரரான ஹனுமந்தனுக்கு, மரத்தின் மேல் அமர்ந்திருக்கும் ஒரு சாதாரண

குரங்கு சமானம் ஆகுமா?. அதைப் போல நீ எனக்கு சரியாகுமா?. ப்ரஷ்டனே, இங்கிருந்து ஓடிப் போய்விடு என்றான் (அரிசி).

**ஸூரநதி3கெ3 தா ஸரியெ காடோ3ளு**
**ஹரிவ கள்ளத3 நீரு தா க3ருட3ன**
**மரிகெ3 ஹத்3த3ந்தரவெ ஹம்ஸகெ3 ப3கனு ஹோலவுதெ3**
**ஸரஸ மரி கோகி3லெகெ3 வாயஸ**
**நணகி1ஸுவ தெரனாய்து ஸாகி**
**ந்னரெத3லெக3 நீனாவ மான்யனு கடெ3கெ3 தொலகெ3ந்த3 ||43**

ஸூர நதிகெ - ஸூர நதியான கங்கைக்கு; காடோளு ஹரிவ ஹள்ளத நீரு - காட்டில் ஒரு பள்ளத்தில் பாயும் நீரானது; தா ஸரியே - சமானம் ஆகுமா?; கருடன - கருடனுக்கு; மரிகெ ஹத்தந்தரவெ - ஒரு கழுகின் குட்டிக்கு சமானம் ஆகுமா?; (அல்லது ஒரு கருடனின் குட்டிக்கு ஒரு கழுகு சமானம் ஆகுமா?); ஹம்ஸகெ பகனு ஹோலவுதெ - ஒரு அன்னப்பறவைக்கு கொக்கு சமானம் ஆகுமா?; ஸரஸ மரி கோகிலெகெ - அழகாகப் பாடுவதான ஒரு குயிலுக்கு; வாயஸன - ஒரு காக்கையை; அணகிஸுவ தெரனாய்து - ஒப்பிடுவதைப் போல இருக்கிறது; ஸாகின்னு அரெதலெக - ஹே ராகியே, போதும்; நீனாவ மான்யனு - நீ யாரால் மதிக்கப்படுகிறாய்? (யாராலும் மதிக்கப்படுவதில்லை); கடெகெ தொலகெந்த- இங்கிருந்து ஓடிப்போய்விடு என்றான் (அரிசி).

ஸூர நதியான கங்கைக்கு, காட்டில் ஒரு பள்ளத்தில் பாயும் நீரானது, சமானம் ஆகுமா?. கருடனுக்கு, ஒரு கழுகின் குட்டி சமானம் ஆகுமா? (அல்லது ஒரு கருடனின் குட்டிக்கு ஒரு கழுகு சமானம் ஆகுமா?). ஒரு அன்னப்பறவைக்கு கொக்கு சமானம் ஆகுமா?. அழகாகப் பாடுவதான ஒரு குயிலுக்கு, ஒரு காக்கையை ஒப்பிடுவதைப் போல இருக்கிறது. ஹே ராகியே, போதும், நீ யாரால் மதிக்கப்படுகிறாய்?. (யாராலும் மதிக்கப்படுவதில்லை). இங்கிருந்து ஓடிப்போய்விடு என்றான் (அரிசி).

**நுடி3ய கேளுத கனலி கங்க3ளு**
**கிடி3மஸகி3 க2திகொ3ண்டு3 நுடி3த3னு**
**ஸிடி3ல க4ர்ஜனெயந்தெ ஸபெ4யலி ஜரெத3னா வ்ரிஹிய**
**நுடி3கெ3 ஹேஸத3 ப4ண்ட3 நின்னொளு**
**கொடு3வரே மாருத்தரவ கடு3**

**ஜட$^{3}$னலா நின்னொட$^{3}$னெ மாதேகெந்த$^{3}$ நரெத$^{3}$லெக$^{3}$ ||44**

நுடிய கேளுத - (இவ்வாறான அரிசியின்) பேச்சினைக் கேட்டவாறு; கனலி கங்களு கிடிமஸகி - சிவந்த கண்களுடன், ஆவேசத்துடன்; கதிகொண்டு - கோபம் கொண்டு; நுடிதனு - ராகி பேசத் துவங்கினான்; ஸிடில கர்ஜனெயந்தெ - ஒரு இடியின் சத்தத்தைப் போல; ஸபெயலி - அந்த ஸ்ரீராமனின் சபையில்; ஆ வ்ரிஹிய நுடிகெ - அந்த அரிசியின் பேச்சினை; ஜரெதனு - புறக்கணித்தான்; ஹேஸத பண்ட - புறக்கணிக்கத் தக்கதான, இழிவான; நின்னொளு - உன்னிடம்; மாருத்தரவ கொடுவரெ - யாராவது பதில் பேச்சு பேசுவார்களா?; கடு ஜடனலா நின்னொடனெ - கடுமையான ஜடமான உன்னுடன்; மாதேகெந்த நரெதலெக - எனக்கு என்ன பேச்சு வேண்டியிருக்கிறது என்றான் ராகி.

(இவ்வாறான அரிசியின்) பேச்சினைக் கேட்டவாறு, சிவந்த கண்களுடன், ஆவேசத்துடன், கோபம் கொண்டு, ராகி பேசத் துவங்கினான். ஒரு இடியின் சத்தத்தைப் போல. அந்த ஸ்ரீராமனின் சபையில், அந்த அரிசியின் பேச்சினை புறக்கணித்தான். புறக்கணிக்கத் தக்கதான, இழிவான உன்னிடம், யாராவது பதில் பேச்சு பேசுவார்களா?. கடுமையான ஜடமான உன்னுடன் எனக்கு என்ன பேச்சு வேண்டியிருக்கிறது என்றான் ராகி.

**ஸத்யஹீனனு ப$^{3}$ட$^{3}$வரனு க**
**ண்ணெத்தி நோடெ$^{3}$ த$^{4}$னாட்$^{4}$யரனு பெ$^{3}$**
**ம்ப$^{3}$த்தி நடெ$^{3}$வ அபேக்ஷெ நின்னது$^{3}$ ஹேளலேனத$^{3}$னு**
**ஹெத்த பா$^{3}$ணந்தியரு ரோகி$^{3}$கெ$^{3}$**
**பத்ய நீனஹெ ஹெணத$^{3}$ பா$^{3}$யிகெ$^{3}$**
**துத்து நீனஹெ நின்ன ஜன்ம நிரர்த்த$^{2}$கரவெந்த$^{3}$ ||45**

ஸத்யஹீனனு - உண்மையை பேசாதவன் நீ (பொய் பேசுபவவன்; படவரனு - ஏழைகளை; கண்ணெத்தி நோடெ - கண்ணெடுத்தும் பார்க்காமல்; தனாட்யரனு - செல்வந்தர்களை; பெம்பத்தி நடெவ - பின் தொடர்ந்து நடக்கும்; அபேக்ஷெ நின்னனு - விருப்பம் கொண்டவன் நீ; ஹேளலேனதனு - இன்னும் சொல்ல என்ன இருக்கிறது?; ஹெத்த பாணந்தியரு - குழந்தையைப் பெற்ற கர்ப்பிணிகள்; ரோகிகெ - நோயாளிகள்; பத்ய நீனஹெ - ஆகியோருக்கு பத்திய சாப்பாடு வேண்டுமென்றால், அதற்கு நீ சரிப்பட்டு வரமாட்டாய்; ஹெணத பாயிகெ - ஒரு இறந்து

கிடக்கும் பிணத்திற்கு; துத்து நீனஹெ - வாயில் போடுவதற்கே நீ சரி; நின்ன ஜன்ம நிரர்த்தகரவெந்த - உன் பிறவியே வீண் என்றான் (ராகி);

உண்மையை பேசாதவன் நீ (பொய் பேசுபவன்). ஏழைகளை, கண்ணெடுத்தும் பார்க்காமல் செல்வந்தர்களை பின் தொடர்ந்து நடக்கும் விருப்பம் கொண்டவன் நீ. இன்னும் சொல்ல என்ன இருக்கிறது?. குழந்தையைப் பெற்ற கர்ப்பிணிகள், நோயாளிகள், ஆகியோருக்கு பத்திய சாப்பாடு வேண்டுமென்றால், அதற்கு நீ சரிப்பட்டு வரமாட்டாய். ஒரு இறந்து கிடக்கும் பிணத்திற்கு வாயில் போடுவதற்கே நீ சரி. உன் பிறவியே வீண் என்றான் (ராகி).

**ஸத்ததி3னதா3ரப்4ய மனுஜரு**
**மத்தெ கர்மவ ஹொத்து பிண்ட3வ**
**நித்து தப்பதெ3 மத்தெ வாயஸகுலவ கரெகரெது3**
**துத்தனிடு3வரு எள்ளு த3ர்ப்பெ4கெ3**
**தித்திக3னு நீனாதெ3 கீர்த்திய**
**ஹொத்துகொண்டெ3 து3ராத்ம நின்னொளு மாததே3கெந்த3 ||46**

ஸத்ததினதாரப்ய - ஒருவர் இறந்த நாளிலிருந்து துவங்கி; மனுஜரு - மனிதர்கள்; மத்தெ கர்மவ ஹொத்து - தன்னுடைய செயலாக; பிண்டவனித்து - இறந்தவருக்கு பிண்டத்தைக் கொடுத்து; தப்பதெ மத்தெ - தவறாமல்; வாயஸகுலவ கரெகரெது - காக்கைக் குலத்தினை திரும்பத்திரும்ப அழைத்து; துத்தனிடுவரு - அந்த பிண்டத்தை அதற்குக் கொடுப்பார்கள்; எள்ளு தர்ப்பெகெ தெத்திகனு நீனாதெ - எள், தர்ப்பையை காப்பவன் நீ ஆனாய்; கீர்த்திய ஹொத்துகொண்டெ - இத்தகைய புகழையே நீ பெற்றிருக்கிறாய்; துராத்ம - துராத்மனே; நின்னொளு மாததேகெந்த - உன்னுடன் எனக்கு என்ன பேச்சு என்றான் ராகி.

ஒருவர் இறந்த நாளிலிருந்து துவங்கி மனிதர்கள் தன்னுடைய செயலாக இறந்தவருக்கு பிண்டத்தைக் கொடுத்து, தவறாமல் காக்கைக் குலத்தினை திரும்பத்திரும்ப அழைத்து, அந்த பிண்டத்தை அதற்குக் கொடுப்பார்கள். எள், தர்ப்பையை காப்பவன் நீ ஆனாய். இத்தகைய புகழையே நீ பெற்றிருக்கிறாய். துராத்மனே, உன்னுடன் எனக்கு என்ன பேச்சு என்றான் ராகி.

**மளெதெ$^{3}$கெ$^{3}$து$^{3}$ பெ$^{3}$ளெயட$^{3}$கி$^{3}$ க்ஷாமத$^{3}$**
**விலய கால தொ$^{3}$ளன்னவில்லதெ$^{3}$**
**அளிவ ப்ராணிக$^{3}$ளாத$^{3}$ரிஸி ஸலஹூவெனு ஜக$^{3}$வரியெ**
**எல்லவு நீனெல்லிஹெயோ நின்னய**
**ப$^{3}$ளக$^{3}$வது தானெல்லிஹூது ஈ**
**ஹலவு ஹூலு தா$^{4}$ன்யக$^{3}$ளெனகெ$^{3}$ ஸரிதொ$^{3}$ரெயெ கேளெந்த$^{3}$ ||47**

மளெதெகெது - மழை பெய்யாமல் நின்று விட்டு; பெளெயடகி - விளைச்சல் இல்லாமல் போய்; க்ஷாமத விலய காலதொளு - கடும் பஞ்சம் வந்த காலத்தில்; அன்னவில்லதெ - சாப்பிட அன்னம் கிடைக்காமல்; அளிவ பிராணிகளாதரிஸி - கஷ்டப்படும் பிராணிகளை ஆதரித்து; ஸலஹூவெனு - நானே அவர்களை காப்பாற்றுகிறேன்; ஜகவரியெ - இதனை உலகமே அறியும்; எலவோ நீனெல்லிஹெயோ - ஹே அரிசியே, அப்போது நீ எங்கு இருக்கிறாய்?; நின்னய பளகவது தானெல்லிஹூது - உன்னுடைய நட்பு (பார்வை)தான் எங்கு இருக்கிறது?; ஈ ஹலவு ஹூலு தான்யகளெனகெ - இப்படியான சின்னஞ்சிறிய தானியங்கள் எனக்கு; ஸரிதொரெயெ கேளெந்த - சரியாகுமா என்றான் (ராகி).

மழை பெய்யாமல் நின்று விட்டு, விளைச்சல் இல்லாமல் போய், கடும் பஞ்சம் வந்த காலத்தில், சாப்பிட அன்னம் கிடைக்காமல், கஷ்டப்படும் பிராணிகளை ஆதரித்து, நானே அவர்களை காப்பாற்றுகிறேன். இதனை உலகமே அறியும். ஹே அரிசியே, அப்போது நீ எங்கு இருக்கிறாய்?. உன்னுடைய நட்பு (பார்வை)தான் எங்கு இருக்கிறது?. இப்படியான சின்னஞ்சிறிய தானியங்கள் எனக்கு சரியாகுமா என்றான் (ராகி).

**ப$^{3}$ல்லிதரு ப$^{3}$ரெ ப$^{3}$ட$^{3}$வரலி நி**
**ன்னல்லியுண்டு உபேக்ஷெ நம்மலி**
**ஸல்லதீ$^{3}$ பரி பக்ஷபாதவதி$^{3}$ல்ல பா$^{4}$விஸலு**
**ப$^{3}$ல்லித$^{3}$ரு ப$^{3}$ட$^{3}$வருக$^{3}$ளென்னதெ$^{3}$**
**எல்லரனு ரக்ஷிஸூவெ நிர்த$^{3}$ய**
**நல்ல தா நின்னந்தெ எலெ குடிலாத்ம ஹோகெ$^{3}$ந்த$^{3}$ ||48**

பல்லிதரு பரெ - சிறந்தவருக்கு மட்டும் கவனம்; படவரலி உபேக்ஷெ - ஏழைகளிடம் உதாசீனம்; நின்னல்லியுண்டு - இவற்றை நீ காட்டுகிறாய்; நம்மலிஸல்லது ஈ பரி - என்னிடம் இந்த

மாதிரியான; பக்ஷபதவதில்ல - பாரபட்சம் என்பது இல்லை; பாவிஸலு - இப்படி சிந்திப்பதில்லை; பல்லிதரு படவருகளென்னதெ - இவர்கள் சிறந்தவர்கள், ஏழைகள் என்று சொல்லாமல்; எல்லரனு ரக்ஷிஸுவெ - அனைவரையும் நான் காக்கிறேன்; தா நின்னந்தெ - நான் உன்னைப் போல; நிர்தயனல்ல - கருணை இல்லாதவன் இல்லை; எலெ குடிலாத்ம ஹோகெந்த - ஹே நயவஞ்சகனே, இங்கிருந்து போய்விடு என்றான் (ராகி).

சிறந்தவருக்கு மட்டும் கவனம். ஏழைகளிடம் உதாசீனம். இவற்றை நீ காட்டுகிறாய். என்னிடம் இந்த மாதிரியான பாரபட்சம் என்பது இல்லை. நான் இப்படி சிந்திப்பதில்லை. இவர்கள் சிறந்தவர்கள், ஏழைகள் என்று சொல்லாமல், அனைவரையும் நான் காக்கிறேன். நான் உன்னைப் போல கருணை இல்லாதவன் இல்லை. ஹே நயவஞ்சகனே, இங்கிருந்து போய்விடு என்றான் (ராகி).

**நானெல்லை லோகத$^3$லி நிர்த$^3$யனு ப$^3$ளி**
**கேனல்லை ஸத்$^3$த$^4$ர்மத$^3$லி மது$^4$**
**பானவாதெ$^3$யலா து$^3$ராத்மக நின்ன ஸேவிஸித$^3$**
**தா$^3$னவரு மானவ கிராதரு**
**ஞானவளிது$^3$ விகாரத$^3$லி மதி**
**ஹீனராத$^3$ரு நின்ன கு$^3$ணவேனெந்த$^3$னா வ்ரிஹிக$^3$ ||49**

நானெலை லோகதலி நிர்தயனு - ஹே ராகியே, நானா இந்த உலகத்தில் கருணை இல்லாதவன்?; பளிகெ ஏனலை ஸத்தர்மதலி - பின், என்ன இந்த ஸத்தர்மத்தில் (உலகத்தில்); மதுபானவாதெயலா - மதுபானம் செய்துவிட்டாயா?; துராத்மக - ஹே துராத்மகனே; நின்ன ஸேவிஸித தானவரு - உன்னை வணங்கும் (உண்ணும்) தானவர்கள்; மானவ கிராதரு - மனிதர்கள், வேட்டைக்காரர்கள்; ஞானவளிது - அவர்களின் ஞானத்தை இழந்து; விகாரதலி மதி ஹீனராதரு - காலப்போக்கில் புத்தி கெட்டுப் போகிறார்கள்; நின்ன குணவேனெந்தனா வ்ரிஹிக - உன்னுடைய குணமே இதுதான் என்றான், அரிசி.

ஹே ராகியே, நானா இந்த உலகத்தில் கருணை இல்லாதவன்?. பின், என்ன இந்த ஸத்தர்மத்தில் (உலகத்தில்), மதுபானம் செய்துவிட்டாயா?. ஹே துராத்மகனே; உன்னை வணங்கும் (உண்ணும்) தானவர்கள், மனிதர்கள், வேட்டைக்காரர்கள், ஆகியோர் அவர்களின் ஞானத்தை இழந்து, காலப்போக்கில்

புத்தி கெட்டுப் போகிறார்கள். உன்னுடைய குணமே இதுதான் என்றான், அரிசி.

**ஆட³ப³ஹுத³தி¹ஷயவ நீ கொண்**
**டா³டி³ கொம்ப³ரெ ஸாகு ஸஜ்ஜன**
**ராடி³த³ரெ பதிகரிஸெ லஜ்ஜெகெ³ ஸிரவ பா³கு³வரு**
**நோடி³ர்யை ஸபெ⁴யவரு து³ர்மதி**
**கே³டி³ இவனாடு³வத³ நாவி**
**ந்னாடி³த³ரெ ஹுருளில்ல ஶிவஶிவயெந்த³ நரெத³லெக³ ||50**

ஆடபஹுததிஷயவ - எப்படி வேண்டுமானாலும் பேசலாம்; நீ கொண்டாடி கொம்பரெ - அப்படி பேசினால், உன்னை புகழ்வார்களா?; ஸாகு - போதும் நிறுத்து; ஸஜ்ஜனராடிதரெ - இவ்வாறு பேசினால், ஸஜ்ஜனர்கள்; பதிகரிஸெ - இதற்கு ஒப்புக் கொள்ள மாட்டார்கள்; லஜ்ஜெகெ ஸிரவ பாகுவரு - வெட்கம் கொண்டு தலை குனிவார்கள்; நோடிரை ஸபெயவரு - ஹே சபையோர்களே, பாருங்கள்; துர்மதி கேடி - கெட்ட புத்தி உடையவன், கெட்டவன்; இவனாடுவதன நாவு இன்னாடிதரெ - இவன் பேசுவதை நாம் பேசினால்; ஹுருளில்லா - இதில் எந்த அர்த்தமும் இல்லை (எவ்வித பலனும் இல்லை); ஷிவஷிவயெந்த நரெதலெக - சிவசிவ என்றான் ராகி.

எப்படி வேண்டுமானாலும் பேசலாம். அப்படி பேசினால், உன்னை புகழ்வார்களா?. போதும் நிறுத்து, இவ்வாறு பேசினால், ஸஜ்ஜனர்கள் இதற்கு ஒப்புக் கொள்ள மாட்டார்கள். வெட்கம் கொண்டு தலை குனிவார்கள். ஹே சபையோர்களே, பாருங்கள். கெட்ட புத்தி உடையவன், கெட்டவன். இவன் பேசுவதை நாம் பேசினால், இதில் எந்த அர்த்தமும் இல்லை (எவ்வித பலனும் இல்லை). சிவசிவ என்றான் ராகி.

**ஸத்தவர ப்ரதிபி³ம்ப³ரூபனு**
**பி³த்தரிஸி பித்ரு நாமக³ள நின**
**கி³த்து மூவர பெஸரினலி கரெகரெது³ த³ர்ப்பெ⁴யலி**
**நெத்தியனு ப³டி³ ப³டி³து³ கடெ³யலி**
**துத்தனிடு³வரு பஶுக³ளிகெ³ நீ**
**நெத்திதெ³யெலா தனுவ ஸுட³பே³கெந்த³ நரெத³லெக³ ||51**

ஸத்தவர பிரதிபிம்பரூபனு - இறந்தவனின் மகன் (வாரிசு); பித்ரு நாமகள பித்தரிஸி - தன்னுடைய பித்ரு நாமங்களை நன்றாக வாய் விட்டு சொல்லி; மூவர பெஸரினலி - அந்த மூன்று தலைமுறையினரின் பெயர்களை; கரெகரெது - அழைத்து; தர்ப்பெயலி நெத்தியனு படி படிது - தர்ப்பையால் நெற்றியில் தொட்டுக் கொண்டு; கடெயலி - கடைசியில்; துத்தனிடுவரு பஷுகளிகெ - (பிண்டத்தை) பசுக்களுக்கு வைப்பார்கள்; நீனு எத்திதெயெலா தனுவ - நீ எடுத்திருக்கும் இந்த தேகத்தினை (அரிசியினை); ஸுடபேகெந்த நரெதலெக - இவ்வாறு இருக்கும் உன் தேகத்தினை சுட வேண்டும் என்றான் ராகி.

இறந்தவனின் மகன் (வாரிசு), தன்னுடைய பித்ரு நாமங்களை நன்றாக வாய் விட்டு சொல்லி, அந்த மூன்று தலைமுறையினரின் பெயர்களை அழைத்து, தர்ப்பையால் நெற்றியில் தொட்டுக் கொண்டு, கடைசியில் (பிண்டத்தை) பசுக்களுக்கு வைப்பார்கள். நீ எடுத்திருக்கும் இந்த தேகத்தினை (அரிசியினை), இவ்வாறு இருக்கும் உன் தேகத்தினை சுட வேண்டும் என்றான் ராகி.

**ஏனிஹிரி ஹிரிகிரித3 நுடி3யதெ3**
**மௌன தீ3க்ஷிதராதி3ரல கண்**
**டே3னு முரிதா3டு3விரஸாத்4யவோ ஸாத்4யவோ நிமகெ3**
**ஈ நபும்ஸகனலி நிரந்தர**
**வேனு காரண வாத3விது3 நம**
**கே3னு பு3த்3தி4யனருஹுவிரி பேளெந்த3 நரெத3லெக3 ||52**

ஏனிஹிரி ஹிரிகிரித நுடியதெ - வளவளவென்று எதையாவது பேசாமல்; மௌன தீக்ஷிதராதிரல கண்டேனு - மௌனமாக நீங்கள் (அரசரே / சபையினரே) அமர்ந்திருப்பதை நான் பார்க்கிறேன்; முரிதாடுவிரஸாத்யவோ - இந்த அமைதியை விட உங்களால் சாத்தியமா? (எதையாவது பேசுங்கள்); ஸாத்யவோ நிமகெ - உங்களுக்கு சாத்தியமா?; ஈ நபும்ஸகனலி - இந்த (அரிசி என்னும்) நபும்சகனில்; நிரந்தரவேனு காரண - நிரந்தரமாக அமைதியாக இருக்க என்ன காரணம்?; வாதவிது - இந்த வாதத்தினால்; நமகேனு புத்தியனருஹுவிரி - நமக்கு என்ன புத்திமதியை சொல்கிறீர்கள்?; பேளெந்த நரெதலெக - என்று ராகி கூறினான்.

வளவளவென்று எதையாவது பேசாமல், மௌனமாக நீங்கள் (அரசரே / சபையினரே) அமர்ந்திருப்பதை நான் பார்க்கிறேன். இந்த அமைதியை விட உங்களால் சாத்தியமா?. (எதையாவது

பேசுங்கள்). உங்களுக்கு சாத்தியமா?. இந்த (அரிசி என்னும்) நபும்சகனில், நிரந்தரமாக அமைதியாக இருக்க என்ன காரணம்?. இந்த வாதத்தினால்; நமக்கு என்ன புத்திமதியை சொல்கிறீர்கள்? - என்று ராகி கூறினான்.

**மஸெது3தி3த்தண்ட3க்கெ மத்ஸர**
**பிஸுண ப3லரதி நிஷ்டு2ரரு வா**
**தி3ஸலு கண்ட3னு ந்ருபதி மனத3லி நோடி3 நஸு நகு3த**
**ஹிஸுணரிவதி3ர மத்ஸரவ மா**
**ணிஸுவ ஹத3னேனெனுத யோசிஸி**
**த3ஸுர முனிபர நோடெ3 கௌ3தம முனிபனிந்தெந்த3 ||53**

மஸெதுதித்தண்டக்கெ - இவ்வாறாக வீம்பாக அரங்கில்; மத்ஸர - வெறுப்பு; பிஸுண - பொறாமை; பலரதி நிஷ்டரரு வாதிஸலு - இவற்றை அதிகமாக கொண்டவர்கள் இவ்வாறாக வாதம் செய்ய; ந்ருபதி கண்டனு - அரசனான ஸ்ரீராமன் இவற்றை கண்டான்; மனதலி நோடி நஸுநகுத - இவற்றைக் கண்டு மனதில் சிரித்தவாறு; ஹிஸுணரிவர - இப்படிப்பட்ட கெட்ட புத்தி கொண்டவர்களின்; மத்ஸரவ மாணிஸுவ - பொறாமையை / வெறுப்பினை குறைக்கும் / அழிக்கும்; ஹதனேனெனுத - வழி என்ன என்று ; யோசிஸித - சிந்தித்தான்; ஸுர முனிபர நோடெ - அங்கிருந்த சிறந்த முனிவரைப் பார்க்க; கௌதம முனிபனிந்தெந்த - அந்த கௌதம முனிவர் இவ்வாறு கூறினார்.

இவ்வாறாக வீம்பாக அரங்கில், வெறுப்பு, பொறாமை, இவற்றை அதிகமாக கொண்டவர்கள், இவ்வாறாக வாதம் செய்ய, அரசனான ஸ்ரீராமன் இவற்றை கண்டான். இவற்றைக் கண்டு மனதில் சிரித்தவாறு, இப்படிப்பட்ட கெட்ட புத்தி கொண்டவர்களின்,
பொறாமையை / வெறுப்பினை குறைக்கும் / அழிக்கும் வழி என்ன என்று சிந்தித்தான். அங்கிருந்த சிறந்த முனிவரைப் பார்க்க, அந்த கௌதம முனிவர் இவ்வாறு கூறினார்.

**அரஸுக3ளு நாவெல்ல பூ4மி**
**ஸுரரு நெரதி3ஹ தா3னவரு வா**
**நரரு நமகீ3 ந்யாயவனு பரிஹரிஸலளவல்ல**
**கரஸுவெவு ஹரிஹரவிரஞ்சா**
**த்3யரனயோத்4யெகெ3 அவர கு3ணவா**

**த⁴ரிஸி பேள்வரு நயதொ³ளெந்த³னு ராம நஸு நகு³த ||54**

அரஸுகளு - அரசரே (ஶ்ரீராமனே); நாவெல்ல - நாங்கள்; பூமி ஸுரரு - முனிவர்கள் / பிராமணர்கள்; நெரதிஹ தானவரு வானரரு - இங்கிருக்கும் தானவர்கள் / வானரர்கள் ஆகிய எங்களுக்கு; ஈ ந்யாயவனு பரிஹரிஸலளவல்ல - இந்த நியாயத்தை பரிகரிக்க முடியாது; கரஸுவெவு - வேண்டிக் கொள்வோம்; ஹரிஹர விரஞ்சாத்யரன - பிரம்ம ருத்ரர்களால் வணங்கப்படுபவனான; அயோத்யெகெ - ஶ்ரீராமன் இருக்கும் அயோத்திக்கு; அவர குணவாதரிஸி - அவரவர்களின் குணங்களுக்கேற்ப; நயதொளு - மிகவும் அற்புதமாக; பேள்வரு - சொல்வார்; எந்தனு - என்றார் (கௌதம ரிஷிகள்); ராம - ஶ்ரீராமன்; நஸுநகுத - புன்னகைத்தவாறு.

அரசரே (ஶ்ரீராமனே), நாங்கள் முனிவர்கள் / பிராமணர்கள், இங்கிருக்கும் தானவர்கள் / வானரர்கள் ஆகிய எங்களுக்கு, இந்த நியாயத்தை பரிகரிக்க முடியாது. ஆகவே, இவ்வாறு வேண்டிக் கொள்வோம். பிரம்ம ருத்ரர்களால் வணங்கப்படுபவனான ஶ்ரீராமனையே வேண்டுகிறோம். அவரவர்களின் குணங்களுக்கேற்ப மிகவும் அற்புதமாக தீர்ப்பினை ஶ்ரீராமனே சொல்ல வேண்டும் என்றார் கௌதம ரிஷிகள். ஶ்ரீராமன் புன்னகைத்தவாறு இவ்வாறு கூறினான்.

**பரம தா⁴ன்யதொ³ளிப்பரே இவரிரலி**
**ஸெரெயொளகா³ரு திங்க³ளு**
**ஹிரிது³ கிரிதெ³ம்பி³வர பௌருஷ²வரியப³ஹுதி³ன்னு**
**புரகெ க³மனிஸி நாவு நிம்மனு**
**கரெஸுவெவு கேளெனுதயோத்⁴யா**
**புரிகெ³ பயணவ மாட³ஹேளித³னா விபீ⁴ஷணகெ³ ||55**

பரம தான்யதொளிப்பரே - பரம தான்யங்களான இந்த இருவரும்; இவரிரலி ஸெரெயொளகெ - இவர்கள் சிறையில் இருக்கட்டும்; ஆரு திங்களு - ஆறு மாத காலங்கள்; ஹிரிது கிரிதெம்ப - மிகச் சிறந்த, அற்புதமான; இவர பௌருஷவு அரியபஹுது - பௌருஷங்கள் (சிறப்புகளை) நாம் அறிய முடியும்; இன்னு புரகெ கமனிஸி - பிறகு நாம் நகருக்குச் சென்று; நாவு நிம்மனு கரெஸுவெவு - நாம் உங்களை அழைக்கிறோம்; கேளெனுத - கேளுங்கள் என்றவாறு; அயோத்யா புரிகெ - அயோத்யைக்கு; பயணவ மாடஹேளிதனு ஆ விபீஷணகெ -

அயோத்திக்கு செல்வோம் என்று விபீஷணனிடம் ஸ்ரீராமன் கூறினான்.

பரம தான்யங்களான இந்த இருவரும் ஆறு மாத காலங்கள் வரை சிறையில் இருக்கட்டும். அப்போதே மிகச் சிறந்த, இவர்களது அற்புதமான, பௌருஷங்கள் (சிறப்புகளை) நாம் அறிய முடியும். பிறகு நாம் நகருக்குச் சென்று, உங்களை அழைக்கிறோம். கேளுங்கள் என்றவாறு, அயோத்திக்கு செல்வோம் என்று விபீஷணனிடம் ஸ்ரீராமன் கூறினான்.

**ஸெரெகெ$^3$ நம்மனு நூகி தே$^3$வரு**
**ஸிரிய மத$^3$த$^3$லி களெத$^3$ரெம்மனு**
**மரது$^3$ ஸலஹுவராரு நிம்மய கருண ஹொரதாகி$^3$**
**த$^4$ரெயொளின்னபகீர்த்தி நாரிய**
**ஸெரக$^3$ ஹிடி$^3$வுதெ$^3$ லேஸெனுத தவெ**
**கரமுகி$^3$து$^3$ தலெகு$^3$த்தி பேளித$^3$னாக$^3$ நரெத$^3$லெக$^3$ ||56**

நம்மனு ஸெரெகெ நூகி - நம்மை சிறையில் தள்ளி; தேவரு - ஸ்ரீராமன்; ஸிரிய மததலி களெதரு- எங்களிடம் இருந்த கர்வத்தினை போக்கினார்; நிம்மய கருண ஹொரதாகி - உங்களின் கருணையைத் தவிர; எம்மனு மரது ஸலஹுவராரு - எங்களை இனிமேல் காப்பவர்கள் யார்?; தரெயொளு இன்னு அபகீர்த்தி - இந்த பூமியில் இனி எங்களுக்கு அபகீர்த்தியே வரும்; நாரிய ஸெரக ஹிடிவுதே - இப்படிப்பட்ட வெட்கத்தில், பெண்ணின் புடவைத் தலைப்பில் மறைவதே; லேஸு - சரியாகும்; எனுத தவெ கரமுகிது - என்றவாறு தன் கைகளைக் குவித்து; தலெகுத்தி - தலை குனிந்து; பேளிதனாக நரெதலெக - கூறினான் ராகி.

நம்மை சிறையில் தள்ளி, ஸ்ரீராமன், எங்களிடம் இருந்த கர்வத்தினை போக்கினார். உங்களின் கருணையைத் தவிர, எங்களை இனிமேல் காப்பவர்கள் யார்?. இந்த பூமியில் இனி எங்களுக்கு அபகீர்த்தியே வரும். அதைவிட வெட்கத்தில், பெண்ணின் புடவைத் தலைப்பில் மறைவதே சரியாகும் என்றவாறு, தன் கைகளைக் குவித்து, தலை குனிந்து கூறினான் ராகி.

**ஆக$^3$லத$^3$கேனெந்து$^3$ கருணா**
**ஸாக$^3$ரனு பீ$^3$ள்கொட்டனவரனு**

**யோகி3க3ள வஶமாடி3 கௌ3தம முனியனுபசரிஸி**
**ராக3 மிகெ3 முனிவரரனல்லி ஸ**
**ராக3தி3ந்த3லெ களுஹி ப3ளிகா**
**யாக3 ஸம்ரக்ஷகனு வீளெயவித்தனனிப3ரிகெ3 ||57**

ஆகலி அதகேனெந்து - ஆகட்டும் (நானே உங்களை அருள்கிறேன்) என்று சொல்லி; கருணா ஸாகரனு - கருணைக்கடலான ஸ்ரீராமன்; பீள்கொட்டனு - அவர்களை வழியனுப்பினான்; அவரனு யோகிகள வஷமாடி - அவர்களை யோகிகளிடம் ஒப்படைத்து; கௌதம முனியனு உபசரிஸி - கௌதம முனிவரை உபசரித்து; ராக மிகெ முனிவரரனல்லி - வைராக்கியம் அதிகமாகக் கொண்ட அந்த முனிவரிடம்; ஸராகதிந்தலெ களுஹி - அன்புடனே அனுப்பி; பளிக - பிறகு; ஆ யாக ஸம்ரக்ஷகனு - முன்பு ஒரு யாகத்தை காத்தவன்; நிபரிகெ - அந்த இருவரையும்; வீளெயவித்தனு - வழியனுப்பினான்.

ஆகட்டும் (நானே உங்களை அருள்கிறேன்) என்று சொல்லி, கருணைக்கடலான ஸ்ரீராமன், அவர்களை வழியனுப்பினான். அவர்களை யோகிகளிடம் ஒப்படைத்து, கௌதம முனிவரை உபசரித்து, வைராக்கியம் அதிகமாகக் கொண்ட அந்த முனிவரிடம், அன்புடனே அனுப்பி, பிறகு, முன்பு ஒரு யாகத்தை காத்தவனான ஸ்ரீராமன், அந்த இருவரையும் வழியனுப்பினான்.

**ஹரது3தா3க்ஷணத3ல்லி வ்யோமதி3**
**ஸுரரு மிகெ3 கொண்டா3டெ3 பூ4ஸுர**
**வரரு களுஹிஸிகொண்டு3 ஹொக்கரு தம்ம மந்தி3ரவ**
**ஹருஷ2 தக்3கி3து தாவரெகெ3 முக2**
**வரளித3வு நைதி3லெகெ3 தாரகெ**
**நெரெது3வாகாஶத3லி அஸ்தாம்பு3தி4கெ3 இனனிளித3 ||58**

வ்யோமதி - ஆகாயத்தில்; ஆக்ஷணதல்லி - அந்த நொடியில்; ஸுரரு - தேவர்கள்; ஹரது - வந்து சேர்ந்து; மிகெ கொண்டாடெ - கானம் பாடி ஸ்ரீராமனை கொண்டாட; பூஸுர வரரு - பூமியில் ரிஷி முனி பிராமணர்கள்; களுஹிஸிகொண்டு - ஸ்ரீராமனிடம் விடை பெற்றுக் கொண்டு; தம்ம மந்திரவ ஹொக்கரு - தத்தம் இருப்பிடங்களுக்கு திரும்பினர்; தாவரெகெ - தாமரைக்கு; ஹருஷ தக்கிது - மிகவும் மகிழ்ச்சி உண்டானது; நைதிலெகெ - குவளைப் பூவிற்கு; முக வரளிதவு - முகம் மலர்ந்தது; நெரெது

ஆகாஷதலி - ஆகாயத்தில் பயணம் செய்து; இனவிளித - சூரியன்; அஸ்தாம்புதிகெ - கடலில் சென்று மறைந்தான்.

ஆகாயத்தில், அந்த நொடியில், தேவர்கள் வந்து சேர்ந்து கானம் பாடி ஶ்ரீராமனை கொண்டாட, பூமியில் ரிஷி முனி பிராமணர்கள், ஶ்ரீராமனிடம் விடை பெற்றுக் கொண்டு, தத்தம் இருப்பிடங்களுக்கு திரும்பினர். தாமரைக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டானது. குவளைப் பூவிற்கு முகம் மலர்ந்தது. ஆகாயத்தில் பயணம் செய்து, சூரியன், கடலில் சென்று மறைந்தான்.

**நெக$^3$ளித$^3$வு பொ$^3$ம்பா$^3$ளதீ$^3$விகெ$^3$**
**ஜக$^3$ஜகி$^3$ப நவரத்னதொ$^3$டு$^3$கெ$^3$ய**
**ஹொாக$^3$ரொாகு$^3$வ கைது$^3$க$^3$ள ஸுப$^4$டரு முந்தெ$^3$ ஸந்த$^3$ணிஸெ**
**நெக$^3$ஹி கரக$^3$ள பாட$^2$கரு பி$^3$ரு**
**து$^3$க$^3$ள ஹொாக$^3$ளலு சேரித$^3$வு கஹ**
**ளெக$^3$ளு ரப$^4$ஸதி$^3$ ப$^3$ந்து$^3$ ஹொாக்கனு ந்ருபதியரமனெய ||59**

பொம்பாள - பளிச்சென்று; தீவிகெ நெகளிதவு - விளக்குகள் ஏற்றப்பட்டன; ஜகஜகிப - ஒளிர்வதான; நவரத்னதொடுகெய - நவரத்னங்களால் வேயப்பட்ட ஆடைகளை அணிந்த; ஹொாகரொாகுவ - அங்கும் இங்கும் செல்வதான; கைதுகள ஸுபடரு - ஆயுதங்களை ஏந்திய சேவகர்கள்; முந்தெ ஸந்தணிஸெ - முன்னர் பாதுகாப்பாக செல்ல; பாடகரு கரகள நெகஹி - பாடகர்கள் கைகளை குவித்தவாறு; பிருதுகள ஹொாகளலு - ஶ்ரீராமனை போற்றியவாறு பாடல்களை பாட; கஹளெகளு சேரிதவு - தாரைகள் முழங்க; ந்ருபதி அரமனெய - ஶ்ரீராமன், அரண்மனைக்கு; பந்து ஹொாக்கனு - வந்து சேர்ந்தான்.

பளிச்சென்று விளக்குகள் ஏற்றப்பட்டன. ஒளிர்வதான, நவரத்னங்களால் வேயப்பட்ட ஆடைகளை அணிந்த; அங்கும் இங்கும் செல்வதான, ஆயுதங்களை ஏந்திய சேவகர்கள், முன்னர் பாதுகாப்பாக செல்ல, பாடகர்கள் கைகளை குவித்தவாறு, ஶ்ரீராமனை போற்றியவாறு பாடல்களை பாட, தாரைகள் முழங்க, ஶ்ரீராமன், அரண்மனைக்கு வந்து சேர்ந்தான்.

**க$^3$க$^3$னமணி தி$^3$கு$^3$தடவ ஸாரலு**
**ஹொாக$^3$ரோகு$^3$வ ப$^3$லு காவளவு ஸலெ**
**ஜக$^3$வ முஸுகலு ஜனரு நித்$^3$ராங்க$^3$னெய கேளியலி**
**த்$^3$ருகு$^3$யுக$^3$ளனெவெ பி$^3$கி$^3$தி$^3$ரலு மன**

**விக$^3$திவடெ$^3$தி$^3$ரெ த$^4$ரெகெ$^3$ தி$^3$னமணி**
**மொக$^3$வ தோருவெனெனுத பூர்வாசலகெ நடெதந்த$^3$ ||60**

ககனமணி - சந்திரன்; திகுதடவ ஸாரலு - மலையடிவாரத்தை அடைய; ஹொரரோகுவ பலு காவளவு - வெளியே பரவியிந்த அதிகமான பனியானது; ஸலெ ஜகவ முஸுகலு - அனைத்து இடங்களிலும் பரவி மூடியிருக்க; ஜனரு - மக்கள்; நித்ராங்கனெய கேளியலி - தூக்கம் என்னும் விளையாட்டு அரங்கத்தில்; த்ருகுயுகளெனேவெ - இரு கண்களையே ; பிகிதிரலு - கெட்டியாக கட்டியிருக்க; மன விகதிவடெதிரெ - மனதினை இழந்திருக்க (தூங்கிக் கொண்டிருக்க); தரெகெ - இந்த பூமிக்கு; தினமணி மொகவ தோருவெனெனுத - சூரியனானவன் தன் முகத்தை காட்டுவேன் என்றவாறு; பூர்வாசலகெ - கிழக்கு திசை நோக்கி; நடெதந்த - நகர்ந்தான்.

சந்திரன், மலையடிவாரத்தை அடைய, வெளியே பரவியிந்த அதிகமான பனியானது, அனைத்து இடங்களிலும் பரவி மூடியிருக்க, மக்கள் தூக்கம் என்னும் விளையாட்டு அரங்கத்தில், இரு கண்களை கெட்டியாக கட்டியிருக்க, மனதினை இழந்திருக்க (தூங்கிக் கொண்டிருக்க), சூரியனானவன், இந்த பூமிக்கு தன் முகத்தை காட்டுவேன் என்றவாறு, கிழக்கு திசை நோக்கி; நகர்ந்தான்.

**அரஸுனுப்பவடி$^3$ஸித$^3$ பூர்வத$^3$**
**தரணிக$^3$ர்க்$^4$யவ கொட்டு பூ$^4$ஸுர**
**வரர மந்த்ராக்ஷதெய கைகொண்ட$^3$னுஜனொட$^3$கூ$^3$டி$^3$**
**ஹருஷ$^2$ மிகெ$^3$ பாட$^2$கர ஸந்த$^3$ணி**
**நெரெயெ முனிகுலதொ$^3$ட$^3$னெ நிஜமந்**
**தி$^3$ரவ ஹொரவண்ட நிபதியொலக$^3$கெ நடெ$^3$தந்த$^3$ ||61**

அரஸுனுப்பவடிஸித - அரசனான ஸ்ரீராமன், உதித்த; பூர்வத தரணிகெ அர்க்யவ கொட்டு - கிழக்கில் உதித்த சூரியனுக்கு அர்க்யத்தைக் கொடுத்து; பூஸுர வரர - சிறந்த பிராமணர்களின் / முனிவர்களின்; மந்த்ராக்ஷதெய கைகொண்டு - மந்திராட்சதையை பெற்றுக் கொண்டு; அனுஜனொடகூடி - தன் தம்பியான லட்சுமணனுடன் சேர்ந்து; ஹருஷ மிகெ - மிக மகிழ்ச்சியுடன்; பாடகர ஸந்தணி நெரெயெ - பாடகர்களின் குழுவானது சேர்ந்து கொண்டு; முனிகுலதொடனெ - முனிவர்களுடன்; நிஜ மந்திரவ ஹொரவண்ட - தன்

அரண்மனையை விட்டுப் புறப்பட்டு; அவனிபதிய ஒலகமெ நடெதந்த - தன்னுடைய அரசவைக்கு வந்தான்.

அரசனான ஸ்ரீராமன், கிழக்கில் உதித்த சூரியனுக்கு அர்க்யத்தைக் கொடுத்து, சிறந்த பிராமணர்களின் / முனிவர்களின், மந்திராட்சதையை பெற்றுக் கொண்டு, தன் தம்பியான லட்சுமணனுடன் சேர்ந்து, மிக மகிழ்ச்சியுடன், பாடகர்களின் குழுவானது சேர்ந்து பாடிக் கொண்டு வர, முனிவர்களுடன், தன் அரண்மனையை விட்டுப் புறப்பட்டு, தன்னுடைய அரசவைக்கு வந்தான்.

**கரெஸித$^{3}$னு ராவணன தம்மன**
**தரணிஸுத நள நீல ஜாம்ப$^{3}$வ**
**ஶரப$^{4}$ ஶதப$^{3}$லியாதி$^{3}$ முக்$^{2}$ய ஸமஸ்த வானரர**
**ஹருஷ$^{2}$ மிகெ$^{3}$ ஸத்கரிஸி முந்தகெ$^{3}$**
**தெரளபே$^{3}$கெனெ வீரஸுப$^{4}$ட$^{1}$ரு**
**நெரெது$^{3}$ருபி$^{3}$ கைது$^{3}$க$^{3}$ள ஜடி$^{3}$த$^{3}$க்$^{3}$க$^{3}$ளெயரைதி$^{3}$த$^{3}$ரு ||62**

ராவணன தம்மன - ராவணனின் தம்பியான விபீஷணனை; கரெஸிதனு - அழைத்தான்; தரணிஸுத - சுக்ரீவனை; நள நீல ஜாம்பவ - நள, நீலன், ஜாம்பவந்தன், ஷரப, ஷதபலியாதி - ஷரப மற்றும் ஷதபலி முதலான; முக்ய ஸமஸ்த வானரர - ஆகிய அனைத்து முக்கிய வானரர்களும்; ஹருஷ மிகெ - மிக்க மகிழ்ச்சியுடன்; ஸத்கரிஸி - அவர்களை வரவேற்று; முந்தகெ தெரளபேகெனெ - முன்னே நடக்குமாறு சொல்ல; வீர ஸுபடரு நெரெதுருபி - வீரர்கள் வேகமாக சென்று; கைதுகள - தங்களின் ஆயுதங்களுடன்; ஜடிதக்களெயரைதிதரு - அனைவரும் ஒரே மாதிரியாக நடக்கத் துவங்கினர்.

ராவணனின் தம்பியான விபீஷணனை, ஸ்ரீராமன் அழைத்தான். சுக்ரீவனை, நள, நீலன், ஜாம்பவந்தன், ஷரப மற்றும் ஷதபலி முதலான அனைத்து முக்கிய வானரர்களும், மிக்க மகிழ்ச்சியுடன், அவர்களை வரவேற்று வந்தனர். அவர்களை முன்னே நடக்குமாறு சொல்ல, வீரர்கள் வேகமாக சென்று; தங்களின் ஆயுதங்களுடன், அனைவரும் ஒரே மாதிரியாக நடக்கத் துவங்கினர்.

**ஹொறடெ$^{3}$வ தம்மடெ பே$^{4}$ரி ட$^{3}$மருக$^{3}$**
**கி$^{3}$டி$^{3}$கி$^{3}$டி$^{3}$ டெள$^{3}$டெ$^{3}$ டி$^{3}$ண்டி$^{3}$ம ட$^{4}$க்கெ**

**நுடி3வ ஶங்க2 ம்ருத3ங்க3 க4னனிஸ்ஸாள மொத3லாத3**
**ப3டி3வ நானா வாத்3யரவ போ4**
**ரிட3லு ஜயரவதொ3ட3னெ ரகு4 ந்ருப**
**மட3தி3 ஸஹிதேரித3னு த4னபன தி3வ்ய மணிரத2வ ||63**

ஹொடெவ தம்மடெ பேரி - அடிக்கும் தப்பட்டை, பேரி; டமருக - டமரு; கிடிகிடி - தோல் வாத்தியத்தின் ஒரு வகை; டௌடெ - சிறிய மத்தளம்; டிண்டிம - சிறிய முரசு; டக்கெ - பெரிய முரசு; நுடிவ ஷங்க ம்ருதங்க - ஒலிக்கும் சங்கு, மிருதங்கம்; கன நிஸ்ஸாள முதலாத - பெரிய தோல் வாத்தியம் முதலான; படிவ நானா வாத்யரவ - ஒலிக்கும் பற்பல வாத்தியங்களின்; போரிடலு - சத்தத்துடன்; ஜயரவதொடனெ - தன்னுடைய பரிவாரங்களுடன்; ரகு ந்ருப மடதி ஸஹித - ஸ்ரீராமன், தன்னுடைய மனைவியுடன்; ஏரிதனு தனபன திவ்ய மணிரதவ - குபேரன் அளித்த ரதத்தில் ஏறினான்.

அடிக்கும் தப்பட்டை, பேரி, டமரு, தோல் வாத்தியத்தின் ஒரு வகை, சிறிய மத்தளம், சிறிய முரசு, பெரிய முரசு, ஒலிக்கும் சங்கு, மிருதங்கம், பெரிய தோல் வாத்தியம் முதலான ஒலிக்கும் பற்பல வாத்தியங்களின் சத்தத்துடன், தன்னுடைய பரிவாரங்களுடன், ஸ்ரீராமன், தன்னுடைய மனைவியுடன், குபேரன் அளித்த ரதத்தில் ஏறினான்.

**ஒட3னெ ஏரித3னோர்மிளாபதி**
**பிட3தெ3 சிம்மவ சாமரவ ஸா**
**லிடு3த நடெ3து3து3 ஸகலத3ள ஸுக்3ரீவனாக்3ஞெயலி**
**கடு3மனத3 ரக்கஸரு ஏரித3**
**ரொட3னெ கரி ரத2 துரக3வனு படெ3**
**கட3ல ஜல மொரெவந்தெ மொரெது3து3 ந்ருபன ஜலஜலதி4 ||64**

ஒடனே - ஸ்ரீராமனைத் தொடர்ந்து; ஏரிதனு ஊர்மிளாபதி - ஊர்மிளாவின் பதியான லட்சுமணனும் ரதத்தில் ஏறினான்; பிடதெ செம்முவ சாமரவ ஸாலிடுத - விடாமல் வீசிக் கொண்டிருக்கும் சாமரங்களை பிடித்தவாறு; நடெதுது ஸகலதள - அனைத்து படையினரும் நடந்தனர்; ஸுக்ரீவனாக்ஞெயலி - சுக்ரீவனின் ஆணைப்படி; கடுமனத ரக்கஸரு - கொடுமையான மனம் கொண்ட அசுரர்கள்; கரி ரத துரகவனு - யானை, ரதம், குதிரைகளை; ஏறிதரொடனெ - உடனே ஏறினர்; படெ கடல ஜல மொரெவந்தெ - இத்தகைய படைகளானது, கடல் அலைகள்

தொடந்து வருவதைப் போல; மொரெதுது - தொடர்ச்சியாக வந்து கொண்டிருந்தது; ந்ருபன பலஜலதி - ஸ்ரீராமனின் வலிமை என்னும் கடலிலிருந்து அலைகளைப் போல இவர்கள் வந்தனர்.

ஸ்ரீராமனைத் தொடர்ந்து, ஊர்மிளாவின் பதியான லட்சுமணனும் ரதத்தில் ஏறினான். விடாமல் வீசிக் கொண்டிருக்கும் சாமரங்களை பிடித்தவாறு, அனைத்து படையினரும் நடந்தனர். சுக்ரீவனின் ஆணைப்படி, கொடுமையான மனம் கொண்ட அசுரர்கள், யானை, ரதம், குதிரைகளில் உடனே ஏறினர். இத்தகைய படைகளானது, கடல் அலைகள் தொடந்து வருவதைப் போல, தொடர்ச்சியாக வந்து கொண்டிருந்தது. ஸ்ரீராமனின் வலிமை என்னும் கடலிலிருந்து அலைகளைப் போல இவர்கள் வந்தனர்.

**களெது$^{3}$ ப$^{3}$ந்த$^{3}$ரு பஞ்சனந்தி$^{3}$ய**
**பளியலொப்புவ பஞ்ச நதி$^{3}$க$^{3}$ள**
**ஹொளெய தா$^{3}$ண்டு$^{1}$த கண்டு$^{3}$ கிஷ்$^{2}$கிந்தா$^{4}$த்$^{3}$ரிகெ$^{3}$ய்தந்து$^{3}$**
**லலனெ ஸீதாதே$^{3}$வி ரவிஜன**
**லலனெயர தா கரஸி தன்னொட$^{3}$**
**நொலிது$^{3}$ ப$^{3}$ரபே$^{3}$கெனலு ப$^{3}$ந்த$^{3}$ரு தே$^{3}$வியரனெய்தி$^{3}$ ||65**

களெது பந்தரு - இவர்கள் தொடர்ந்து வந்தனர்; பஞ்சநந்திய பளியலொப்புவ - ஐந்து நந்திகளைக் கொண்ட க்ஷேத்திரத்தின் அருகில் இருக்கும்; பஞ்சநதிகள - பஞ்ச நதிகளின்; ஹொளெய தாண்டுத - சங்கமத்தினை தாண்டியவாறு; கண்டு - பார்த்தனர்; கிஷ்கிந்தாத்ரிகெய்தந்து - கிஷ்கிந்தாவிற்கு வந்தனர்; லலனெ ஸீதாதேவி - கருணை உள்ளம் கொண்டவளான ஸீதாதேவி; ரவிஜன லலனெயர - சூரிய புத்திரனான சுக்ரீவனின் மனைவியரை; தா கரெஸி - தான் அழைத்து; தன்னொடனெ - - தன்னுடன்; ஒலிது பரபேகெனலு - தன்னுடன் வரவேண்டும் என்று சொல்ல; பந்தரு தேவியரனெய்தி - அந்த தேவியரும் ஸீதையுடனெ வந்தனர்.

இவர்கள் தொடர்ந்து நடந்து வந்தனர். ஐந்து நந்திகளைக் கொண்ட க்ஷேத்திரத்தின் அருகில் இருக்கும், பஞ்ச நதிகளின் சங்கமத்தினை தாண்டியவாறு பார்த்தனர். பின் கிஷ்கிந்தாவிற்கு வந்தனர். கருணை உள்ளம் கொண்டவளான ஸீதாதேவி, சூரிய புத்திரனான சுக்ரீவனின் மனைவியரை தான் அழைத்து, தன்னுடன் வரவேண்டும் என்று சொல்ல, அந்த தேவியரும் ஸீதையுடனெ வந்தனர்.

**ஹொலபு3த3ப்பதெ3 ஸகல நாயக**
**த3ளஸஹித மும்ப3ட்டெயலி முனி**
**குலத3 த3ருஶனவாக3லாஶீர்வாத3வனு கொண்டு3**
**ப3ளிவிடி3து3 ப3ரெ ஜனர பாபவ**
**களெது3 ஸலஹுவ துங்க3ப4த்3ரெய**
**களெது3ப3ந்த3ரு முந்தெ3 பா4ரத்3வாஜநாஷ்ரமக்கெ ||66**

ஸகல நாயக தளஸஹித - அனைத்து வித படைகளுடன் சேர்ந்து கொண்டு; ஹொலபுதப்பதெ - ஒரே மாதிரியாக (வரிசையாக) வந்து கொண்டிருக்க; மும்பட்டெயலி - முன்னர் (சிறிது தூரத்தில்); முனி குலத தருஷனவாகலு - முனிவர்களின் கூட்டத்தின் தரிசனம் கிடைத்தது; ஆசீர்வாதவனு கொண்டு - அவர்களிடமிருந்து ஆசிர்வாதத்தினை பெற்று; பளிவிடிது - தொடர்ந்து முன்னே செல்ல; பரெ ஜனர - சாதாரண மக்களின்; பாபவ களெது ஸலஹுவ - பாவங்களை போக்கி அருளும்; துங்கபத்ரெய களெதுபந்தரு - துங்கபத்ரா நதியை கடந்து வந்தனர்; பாரத்வாஜனாஷ்ரமக்கெ - பாரத்வாஜ முனிவரின் ஆசிரமத்திற்கு வந்தனர்.

அனைத்து வித படைகளுடன் சேர்ந்து கொண்டு, அனைவரும் ஒரே மாதிரியாக (வரிசையாக) வந்து கொண்டிருக்க, முன்னர் (சிறிது தூரத்தில்), முனிவர்களின் கூட்டத்தின் தரிசனம் கிடைத்தது. அவர்களிடமிருந்து ஆசிர்வாதத்தினை பெற்று, தொடர்ந்து முன்னே செல்ல, சாதாரண மக்களின் பாவங்களை போக்கி அருளும் துங்கபத்ரா நதியை கடந்து வந்தனர். பின்னர், பாரத்வாஜ முனிவரின் ஆசிரமத்திற்கு வந்தனர்.

**இளிது3தா3 ப3னதொ3ளகெ3 பா1ளய**
**ப3ளஸிபி3ட்டுது3 மூரு யோஜன**
**த3ளதெயலி கபிஸேனெயா மத்4யத3லி ந்ருபப4வன**
**ஹளதி3 கெம்பின நீலவர்ணத3**
**சளெயபட்டெய கு3டி3 கு3டா3ரதி3**
**ஹொளெவ ரத்னக3ளிந்த3 கலஶத3 ஸாலு ரஞ்சிஸிது ||67**

பனதொளகெ - அத்தகைய வனத்தில்; இளிதுது - அந்த படை இறங்கியது (தங்கியது); பாளய பளஸிபிட்டுது - அவர்களின் முகாமானது; மூறு யோஜனத அளதெயலி - மூன்று யோஜன பரப்பிற்கு வளர்ந்திருந்தது; கபிஸேனெயா மத்யதலி - அந்த

அனைத்து கபிசேனைகளின் நடுவில்; ந்ருபபவன - அரசனின் மாளிகையானது; ஹளதி கெம்பின நீல வணத - மஞ்சள், சிவப்பு, நீலம் ஆகிய வண்ணங்களில்; சளெயபட்டெய - வேயப்பட்டு (வண்ண முலாம் பூசப்பட்டு); குடி குடாரதி - அங்கிருந்த குடிசைகள், கூடாரங்கள் அனைத்தும்; ஹொளெவ ரத்னகளிந்த - ஒளிரும் ரத்தினங்களால்; கலஷத ஸாலு ரஞ்சிஸிது - அமைக்கப்பட்ட கலசங்கள் காணப்பட்டு, அவை வரிசையாக நின்று ஒளிர்ந்தன.

அத்தகைய வனத்தில், அந்த படை இறங்கியது (தங்கியது). அவர்களின் முகாமானது, மூன்று யோஜன பரப்பிற்கு வளர்ந்திருந்தது. அந்த அனைத்து கபிசேனைகளின் நடுவில், அரசனின் மாளிகையானது - மஞ்சள், சிவப்பு, நீலம் ஆகிய வண்ணங்களில் வேயப்பட்டு (வண்ண முலாம் பூசப்பட்டு), அங்கிருந்த குடிசைகள், கூடாரங்கள் அனைத்திலும், ஒளிரும் ரத்தினங்களால் அமைக்கப்பட்ட கலசங்கள் காணப்பட்டு, அவை வரிசையாக நின்று ஒளிர்ந்தன.

**அரமனெய ப$^{3}$லவங்கத$^{3}$லி நிஜ**
**ஶரண நரமனெ வாமபா$^{4}$க$^{3}$தி$^{3}$**
**தரணிஸுத ஸுக்$^{3}$ரீவனங்க$^{3}$த$^{3}$ ஜாம்ப$^{3}$வாதி$^{3}$க$^{3}$ள**
**வர ப$^{4}$வனவெஸெதி$^{3}$ரலு மேலு**
**ப்பரிகெ$^{3}$க$^{3}$ள ரஞ்சிஸி கவாடதி$^{3}$**
**மெரெது$^{3}$த$^{3}$க்$^{3}$க$^{3}$த$^{3}$ வீர ராமன பாள்ய ப$^{3}$னதொ$^{3}$ளகெ$^{3}$ ||68**

அரமனெய பலவங்கதலி - ஸ்ரீராமனின் அரண்மனையின் வலது பக்கத்தில்; நிஜ ஷரணனரமனெ - ஸ்ரீஹனுமந்த தேவரின் அரண்மனை இருந்தது; வாமபாகதி - இடது பக்கத்தில்; தரணிஸுத ஸுக்ரீவனங்கத ஜாம்பவாதிகள - சூரிய புத்திரனான சுக்ரீவனின், அங்கதனின், ஜாம்பவந்தன் ஆகியோரின்; வர பவனவெஸெதிரலு - சிறந்ததான மாளிகைகள் இருக்க; மேலுப்பரிகெகள ரஞ்சிஸி - மேல் மாடிகளைக் கொண்டதாக இருந்தன; கவாடதி - சிறந்த கதவுகளை; மெரெதுத - கொண்டதாக இருந்தன; வீர ராமன பாள்ய பனதொளகெ - இவ்வாறு வீரனான ஸ்ரீராமனின் கூடாரம் அந்த வனத்தில் இருந்தது.

ஸ்ரீராமனின் அரண்மனையின் வலது பக்கத்தில், ஸ்ரீஹனுமந்த தேவரின் அரண்மனை இருந்தது. இடது பக்கத்தில், சூரிய புத்திரனான சுக்ரீவனின், அங்கதனின், ஜாம்பவந்தன்

ஆகியோரின் சிறந்ததான மாளிகைகள் இருக்க, அவை மேல் மாடிகளைக் கொண்டதாக இருந்தன. சிறந்த கதவுகளை கொண்டதாக இருந்தன. இவ்வாறு வீரனான ஸ்ரீராமனின் கூடாரம் அந்த வனத்தில் இருந்தது.

**ஹொரவளயத³லி தா³னவர ப³ல**
**ஶரதி⁴ பி³ட்டுது³ ப³ளஸி ஸுத்தலு**
**கரி துரக³ ரத² பாய்த³ளவு ஸந்த³ணிஸி நிந்தி³ரலு**
**மொரெவ ரப⁴ஸவ கண்டு³ ஸுரமுனி**
**வரரிதே³னொயெனுத நிஜமந்**
**தி³ரவ ஹொரவண்டல்லி கேள்த³ரு ராமனதி¹ஶயவ ||69**

ஹொரவளயதலி - அந்த கூடாரத்தின், வெளிச் சுற்றில்; தானவர பல ஷரதி பிட்டுது - சுக்ரீவனின் படையினரின் கூட்டம் இருந்தது; பளஸி ஸுத்தலு - அதனை ஒட்டியவாறு சுற்றிலும்; கரி துரக ரத பாய்தளவு - யானை, குதிரை, ரதம், காலாட்படைகள்; சந்தணிஸி நிந்திரலு - சுற்றிலும் நின்றிருக்க; மொரெவ ரபஸவ கண்டு - இத்தகைய கூட்டத்தினைப் பார்த்து; ஸுரமுனி வர - சுரமுனிவரான பாரத்வாஜ முனிவர்; இதேனோ எனுத - இது என்ன கூட்டம் என்றவாறு; நிஜ மந்திரவ ஹொரவண்டல்லி - தன் குடிலை விட்டு வெளியே வந்து; கேள்தரு- கேட்டார்; ராமனதிஷயவ - ஸ்ரீராமனின் வருகையினை (கேட்டார்);

அந்த கூடாரத்தின், வெளிச் சுற்றில், சுக்ரீவனின் படையினரின் கூட்டம் இருந்தது. அதனை ஒட்டியவாறு சுற்றிலும், யானை, குதிரை, ரதம், காலாட்படைகள் நின்றிருக்க, இத்தகைய கூட்டத்தினைப் பார்த்து, சுரமுனிவரான பாரத்வாஜ முனிவர், இது என்ன கூட்டம் என்றவாறு, தன் குடிலை விட்டு வெளியே வந்து பார்த்தார். ஸ்ரீராமனின் வருகையினை அறிந்தார்.

**உரக³மாலி மதங்க³ கா³ர்க்³யாம்**
**கி³ரஸ கா³லவ கண்வ ஜயமுனி**
**பரஶுராம பராஶ கௌஶிக தா³ல்ப்³ய மொத³லாத³**
**வரமுனிக³ளொட³னெய்தி³ ப³ந்த³னு**
**ப⁴ரதி³ பா⁴ரத்³வாஜ முனி ரகு⁴**
**வரன காணிஸிகொண்டு³ ஹரஸித³ரது¹ள விப⁴வத³லி ||70**

உரகமாலி, மதங்க, கார்க்ய, அங்கிரஸ, காலவ, கண்வ, ஜய, பரசுராம, பராஷ, கௌஷிக, தால்ப்ய - முனிவர்களின் பெயர்

பட்டியல்; மொதலாத - ஆகிய; வரமுனிகளொடனெய்தி - ஆகிய சிறந்த முனிவர்களுடன் சேர்ந்து; பாரத்வாஜ முனி - பாரத்வாஜ முனிவர்; பரதி பந்தனு - வேகமாக வந்தார்; ரகுவரன காணிஸிகொண்டு - ஸ்ரீராமனை பார்த்து; ஹரஸிதரு அதுள விபவதலி - வைபவத்துடன் வரவேற்று மகிழ்ந்தார்.

உரகமாலி, மதங்க, கார்க்ய, அங்கிரஸ, காலவ, கண்வ, ஜய, பரசுராம, பராஷ, கௌஷிக, தால்ப்ய - ஆகிய சிறந்த முனிவர்களுடன் சேர்ந்து, பாரத்வாஜ முனிவர், வேகமாக வந்தார். ஸ்ரீராமனை பார்த்து; வைபவத்துடன் வரவேற்று மகிழ்ந்தார்.

**ப$^{3}$ந்த$^{3}$ முனிக$^{3}$வனீஶ வந்தி$^{3}$ஸி**
**நிந்து$^{3}$ கரக$^{3}$ள முகி$^{3}$து$^{3}$ வினயதொ$^{3}$**
**ளெந்த$^{3}$ நிம்ம ஸதா$^{3}$க்$^{3}$னிஹோத்ர ஸூயாக$^{3}$ கர்மக$^{3}$ளு**
**ஸந்த$^{3}$ ஜப தபக$^{3}$ளு ஸூரக்ஷித**
**தி$^{3}$ந்த$^{3}$ மெரெவுதெ$^{3}$ தா$^{3}$னவர ப$^{4}$ய**
**தி$^{3}$ந்த$^{3}$ து$^{3}$ர்க$^{4}$டவில்லலா முனிநாத$^{2}$ ஹேளெந்த$^{3}$ ||71**

பந்த முனிகெ - அப்படி வந்த முனிவர்களை; அவனீஷ வந்திஸி - பூமியின் நாயகனான ஸ்ரீராமன் வணங்கி; நிந்து கரகள முகிது - நின்று கைகளை குவித்தவாறு; வினயதொளெந்த - மரியாதையுடன் இவ்வாறு கூறினான்; நிம்ம ஸதாக்னிஹோத்ர - உங்களின் நித்ய அக்னிஹோத்ர; ஸூயாக கர்மகளு - யாகம் முதலான கர்மங்கள்; ஸந்த ஜப தபகளு - சிறந்ததான ஜப தபங்கள்; ஸூரக்ஷிததிந்த மெரெவுதெ - சரியாக, எவ்வித பிரச்னைகளும் இன்றி நடக்கிறதா?; தானவர பயதிந்த - அல்லது அசுரர்களின் தொந்தரவினால்; துர்கடவில்லலா - தடைகள் உண்டாயினவா?; முனிநாத பேளெந்தெ - ஹே முனிவர்களின் தலைவரே, சொல்லுங்கள் - என்றான்.

அப்படி வந்த முனிவர்களை, பூமியின் நாயகனான ஸ்ரீராமன் வணங்கி நின்று கைகளை குவித்தவாறு, மரியாதையுடன் இவ்வாறு கூறினான். உங்களின் நித்ய அக்னிஹோத்ர யாகம் முதலான கர்மங்கள், சிறந்ததான ஜப தபங்கள், சரியாக, எவ்வித பிரச்னைகளும் இன்றி நடக்கிறதா? அல்லது அசுரர்களின் தொந்தரவினால், தடைகள் உண்டாயினவா?. ஹே முனிவர்களின் தலைவரே, சொல்லுங்கள் - என்றான் ஸ்ரீராமன்.

**த$^{3}$ஶரதா$^{2}$த்மஜ நீனு லங்கெயொ**
**ளஸூர வீரரு கும்ப$^{4}$கர்ணனு**
**த$^{3}$ஶஶிரனு மொத$^{3}$லாத$^{3}$ து$^{3}$ர்ஜனரெல்லரனு மடு$^{3}$ஹி**
**அஸூரரனுஜகெ$^{3}$யசல பத$^{3}$விய**
**னொஸெது$^{3}$ ஸலஹிதெ$^{3}$ நம்ம கருணா**
**ரஸதி$^{3}$ பாலிஸெ ப$^{3}$ந்தெ$^{3}$யெந்து$^{3}$பசரிஸித$^{3}$னு ந்ருபன ||72**

தஷிரதாத்மஜ - தசரதாத்மஜனே; நீனு - நீ; லங்கெயொளஸூர வீரரு - இலங்கையில் அசுர வீரர்கள்; கும்பகர்ணனு தஷிஷிரனு மொதலாத - ராவணன், கும்பகர்ணன் ஆகிய; துர்ஜனரெல்லரனு மடுஹி - ஆகிய கெட்டவர்கள் அனைவரையும் கொன்று; அசுரரனுஜகெ - அசுரனின் தம்பிக்கு; அசல பதவியனு ஒஸெது - அரசாட்சியைக் கொடுத்து; ஸலஹிதெ - மிகச் சிறந்த செயலை செய்தாய்; நம்ம கருணாரஸதி பாலிஸெ - எங்களையும் உன்னுடைய கருணையால் அருள்வதற்காக; பந்தெ எந்து உபசரிஸிதனு ந்ருபன - என்று போற்றியவாறு ஸ்ரீராமனை பாரத்வாஜ முனிவர் உபசரித்தார்.

தசரதாத்மஜனே, ஸ்ரீராமனே, நீ, இலங்கையில் அசுர வீரர்கள், ராவணன், கும்பகர்ணன் ஆகிய கெட்டவர்கள் அனைவரையும் கொன்று, அசுரனின் தம்பிக்கு, அரசாட்சியைக் கொடுத்து, மிகச் சிறந்த செயலை செய்தாய். எங்களையும் உன்னுடைய கருணையால் அருள்வதற்காக வந்திருக்கிறாய் என்று போற்றியவாறு - பாரத்வாஜ முனிவர் ஸ்ரீராமனை உபசரித்தார்.

**கமல ஸம்ப$^{4}$வனித்த வரத$^{3}$லி**
**குமதி தா$^{3}$னவரதுள ப$^{3}$லதி$^{3}$ம்**
**து$^{3}$ருள கண்டகராகி$^{3}$ மடி$^{3}$த$^{3}$ரு நின்ன பா$^{3}$ணத$^{3}$லி**
**தமத$^{3}$ க$^{3}$ண்டலனொடெ$^{3}$து$^{3}$ மூடு$^{3}$வ**
**த்யுமணியந்த$^{3}$தி$^{3}$ நீவு ஜனிஸிர**
**லெமகெ$^{3}$ த$^{3}$னுஜாத$^{4}$மர ப$^{4}$யவேனெந்த$^{3}$னா முனிப ||73**

கமல ஸம்பவனித்த வரதலி - பிரம்மதேவர் கொடுத்த வரத்தினால்; குமதி தானவரு அதுள பலதிம் - கெட்ட புத்தி கொண்ட அசுரர்கள் மிகச் சிறந்த பலத்தினால்; துருள கண்டகராகி - மிக கெட்டவர்கள் ஆனார்கள்; நின்ன பாணதலி - உன்னுடைய பாணத்தினால்; தமத கண்டலனொடெது - தமஸ்ஸிற்குள் செல்வதான அவர்களின் கழுத்தினை முறித்து;

மூடுவ த்யுமணியந்ததி - அவர்களைக் கொல்லும் சூரியனைப் போல; நீவு ஜனிஸிரலெமகெ - நீங்கள் அவதாரம் செய்திருக்கையில், எமக்கு; தனுஜாதமர - அசுரர்களின், அதமர்களின்; பயவேனெந்தனா முனிப - பயம் எதற்கு என்றார், முனிவர் பாரத்வாஜர்.

பிரம்மதேவர் கொடுத்த வரத்தினால், கெட்ட புத்தி கொண்ட அசுரர்கள் தங்களின் மிகச் சிறந்த பலத்தினால், மிக கெட்டவர்கள் ஆனார்கள். உன்னுடைய பாணத்தினால், தமஸ்ஸிற்குள் செல்வதான அவர்களின் கழுத்தினை முறித்து, அவர்களைக் கொல்லும் சூரியனைப் போல, நீங்கள் அவதாரம் செய்திருக்கையில், எமக்கு, அசுரர்களின், அதமர்களின் பயம் எதற்கு என்றார், முனிவர் பாரத்வாஜர்.

**அரஸ கேள்தா$^3$ முனிய வசனத$^3$**
**கருணாரஸ தா$^4$ரெயலி அந்த:**
**கரண நனெது$^3$பசரிஸி குள்ளிரிஸித$^3$னு முனிவரர**
**மருதஸுதனனு கரெது$^3$ தவகதி$^3$**
**ப$^4$ரதனனு ஸந்தெய்ஸு ஹோகெ$^3$ன்**
**து$^3$ருதரத$^3$ ப்ரேமத$^3$லி களுஹிஸலெரகி$^3$ ஹொரவண்ட ||74**

முனிய வசனத - முனிவரின் வாக்கினை; அரஸ கேள்தா - ஸ்ரீராமன், கேட்டான்; கருணரஸ தாரெயலி - பொழிவதான கருணையுடன்; அந்த:கரண நனெதுபசரிஸி குள்ளிரிஸிதனு - மிகவும் அன்புடன் அவரை உபசாரம் செய்து, அமர்த்தினான்; முனிவரர - முனிவரை; மருதஸுதனனு கரெது - ஹனுமந்ததேவரை அழைத்து; தவகதி பரதனனு ஸந்தெயிஸு - உடனடியாக பரதனிடம் செய்தியை சொல்; ஹோகெந்து - போய் வா என்று; உருதரத ப்ரேமதலி - அபாரமான அன்பினால்; களுஹிஸலு எரகி ஹொரவண்ட - அனுப்பினான். பின், ஹனுமந்ததேவர் அங்கிருந்து புறப்பட்டான்.

முனிவரின் வாக்கினை ஸ்ரீராமன், கேட்டான். பொழிவதான கருணையுடன், மிகவும் அன்புடன், அவரை உபசாரம் செய்து, அமர்த்தினான். முனிவரை, ஹனுமந்ததேவரை அழைத்து, உடனடியாக பரதனிடம் போய் செய்தியை சொல். போய் வா என்று, அபாரமான அன்பினால் அனுப்பினான். பின், ஹனுமந்ததேவர் அங்கிருந்து புறப்பட்டான்.

**ஹரிவ க3ங்கா3 நதி3ய தா3ண்டுத**
**ப4ரதி3 கண்ட3னு ஷ்ருங்க3பே3ரி**
**புருவ ஹொக்கனு கு3ஹன காணிஸிகொண்டெ3னுசிதத3லி**
**மருத பி3ன்னயிஸித3னு ரகு4 ந்ருப**
**வரனு பேளித3 பு3த்3தி4யனு வி**
**ஸ்தரிஸெ நிஷ2தா4தி4பதி கேள்த3திஶயத3 ஹருஷ2த3லி ||75**

(ஹனுமந்ததேவர்), ஹரிவ - சீறிப்பாயும்; கங்கா நதிய தாண்டுத - கங்கா நதியை தாண்டியவாறு; பரதி கண்டனு - உடனே அங்கு கண்டான்; ஷ்ருங்கபேரி புரவ ஹொக்கனு - ஷ்ருங்கபேரி புரவ ஹொக்கனு - ஷ்ருங்கபேரி என்னும் இடத்தை அடைந்தான்; குஹன காணிஸி கொண்டனு - அங்கு குகனை சந்தித்தான்; உசிததலி - உடனடியாக; மருத பின்னயிஸிதனு - ஹனுமந்ததேவர் கூறினார்; ரகு ந்ருப வரனு பேளித புத்தியனு - ஸ்ரீராமன் கூறிய செய்தியினை கூறினார்; விஸ்தரிஸெ - விளக்கமாக; நிஷதாதிபதி - நிஷாத நாட்டின் அதிபதியான குகன்; கேள்த அதிஷயத ஹருஷதலி - அந்த செய்திகளை மிகவும் மகிழ்ச்சியுடன் கேட்டுக் கொண்டான்.

(ஹனுமந்ததேவர்), சீறிப்பாயும் கங்கா நதியை தாண்டியவாறு, ஷ்ருங்கபேரி என்னும் இடத்தை அடைந்தார். அங்கு குகனை சந்தித்தார். ஹனுமந்ததேவர் குகனிடம் ஸ்ரீராமன் கூறிய செய்தியினை விளக்கமாக கூறினார். நிஷாத நாட்டின் அதிபதியான குகன், அந்த செய்திகளை மிகவும் மகிழ்ச்சியுடன் கேட்டுக் கொண்டான்.

**அனிலஸுத பா3 மக3னெ ரகு4னந்**
**த3னகெ3 நின்னவோலாப்தராரி**
**த3னுஜ மனுஜ பு4ஜங்க3ரொளுண்டெ நின்ன ஹோலுவரு**
**ஹனும நந்தீ3க்3ராமத3லி ப4ர**
**தனிஹனக்3ரஜனக3ல்த3 கே2த3த3**
**மனத3 பரிதாபவனு மாணிஸு பே3க3 ஹோகெ3ந்த3 ||76**

அனிலஸுத - ஹனுமந்த தேவர் கூறுகிறார்; பா மகனே - ஹே குகனே; ரகுனந்தனகெ - ஸ்ரீராமனுக்கு; நின்னவோல் ஆப்தரு ஆரு - உன்னைப் போன்றவரான நண்பர் யார் இருக்கிறார்கள்?; தனுஜ மனுஜ புஜங்கரொளு - அசுரர்கள், மனிதர்கள், பாம்புகள் (மிருகங்கள்) இவற்றில்; உண்டே நின்ன ஹோலுவரு - உனக்கு ஈடாக இவர்களில் யாராவது இருக்கிறார்களா?; ஹனும - ஹே

ஹனுமனே (என்று குகன் கூறுகிறான்); நந்திகிராமதலி - நந்திகிராமத்தில்; பரதனு இஹனு - பரதன் இருக்கிறான்; அக்ரஜனகல்த கேதத - தன் அண்ணன் இன்னும் வரவில்லை என்னும் துக்கத்தின்; மனத பரிதாபவனு -அவனின் மனதின் கஷ்டத்தினை; மாணிஸு - பரிகரிப்பாயாக; பேக ஹோகெந்த - சீக்கிரமாக அங்கே போ என்றான் குகன்.

ஹனுமந்த தேவர் கூறுகிறார். ஹே குகனே. ஸ்ரீராமனுக்கு, உன்னைப் போன்றவரான நண்பர் யார் இருக்கிறார்கள்?. அசுரர்கள், மனிதர்கள், பாம்புகள் (மிருகங்கள்) இவற்றில்; உனக்கு ஈடாக இவர்களில் யாராவது இருக்கிறார்களா? (யாரும் இல்லை). ஹே ஹனுமனே (என்று குகன் கூறுகிறான்) நந்திகிராமத்தில் பரதன் இருக்கிறான். தன் அண்ணன் இன்னும் வரவில்லை என்னும் துக்கத்தில் இருக்கிறான். அவனின் மனதின் கஷ்டத்தினை பரிகரிப்பாயாக. சீக்கிரமாக அங்கே போ என்றான் குகன்.

**ஹருஷ$^{2}$மிகெ$^{3}$ ஜனபத$^{3}$த$^{3}$ பரியந்**
**தரதி$^{3}$ ப$^{3}$ந்த$^{3}$னிலஜன களுஹிஸி**
**மரளித$^{3}$னு கு$^{3}$ஹனித்த மாருதி முந்தெ$^{3}$ பத$^{2}$விடி$^{3}$து$^{3}$**
**ப$^{3}$ருத மார்க்க$^{3}$ந்தரதி$^{3}$ கானன**
**கி$^{3}$ரி ஶிக$^{2}$ரக$^{3}$ள களெது$^{3}$ ப$^{3}$ரெ வி**
**ஸ்தரத நந்தீ$^{3}$க்$^{3}$ராமவனு கண்ட$^{3}$ல்லி மனனலிது$^{3}$ ||77**

ஹருஷமிகெ - மிகவும் மகிழ்ச்சியுடன்; ஜனபதத பரியந்தரதி - தன் ஊரில் எல்லை வரை; பந்தனு - குகன் வந்து; அனிலஜன களுஹிஸி - ஹனுமந்த தேவரை வழி அனுப்பிவைத்து; மரளிதனு குஹனு - திரும்ப தன் ஊருக்குள் குகன் வந்தான்; இத்த - அங்கு; மாருதி முந்தெ பதவிடிது - மாருதி முன்னர் தன்னுடைய பாதையில்; பருத மார்க்காந்தரதி - வரும் வழியில்; கானன கிரி ஷிகரகள களெது - காடுகள், மலைகள், சிகரங்கள் ஆகியவற்றை தாண்டி; பரெ விஸ்தரத - மிகப் பெரியதான; நந்திகிராமவனு - நந்திகிராமத்தை; கண்டல்லி மனனலிது - பார்த்தவுடன் மிகவும் மகிழ்ச்சி கொண்டான்.

மிகவும் மகிழ்ச்சியுடன், தன் ஊரில் எல்லை வரை குகன் வந்து, ஹனுமந்த தேவரை வழி அனுப்பிவைத்து, பின் திரும்ப தன் ஊருக்குள் குகன் வந்தான். அங்கு, மாருதி முன்னர் தன்னுடைய பாதையில் வரும் வழியில், காடுகள், மலைகள், சிகரங்கள்

ஆகியவற்றை தாண்டி, மிகப் பெரியதான நந்திகிராமத்தை பார்த்தவுடன் மிகவும் மகிழ்ச்சி கொண்டான்.

**ப$^{3}$ந்து$^{3}$ ப$^{4}$ரதன கண்டு$^{3}$ நமிஸித$^{3}$**
**டெ$^{3}$ந்த$^{3}$ நீலாரில்லிகெ$^{3}$ந்த$^{3}$ய்**
**தந்த$^{3}$ காரணவேனு நினபி$^{4}$தா$^{4}$னவேனெனலு**
**நிந்து$^{3}$ கைக$^{3}$ள முகி$^{3}$து$^{3}$ நஸு நகெ$^{3}$**
**யிந்த$^{3}$ நுடி$^{3}$த$^{3}$னு ஹனும தா ரகு$^{4}$**
**நந்த$^{3}$னன ஸேவகனு களுஹித$^{3}$ தே$^{3}$வ நிம்மடி$^{3}$கெ$^{3}$ ||78**

பந்து பரதன கண்டு - ஹனுமந்ததேவர், வந்து பரதனைக் கண்டு; நமிஸிதடெந்த - வணங்கியபோது, பரதன் இவ்வாறு கூறினான்; நீனாரு இல்லிகிந்தை தந்த காரணவேனு - நீ யார்? இங்கு நீ வந்த காரணம் என்ன?; நின்ன அபிதானவேனு எனலு - உன்னுடைய நோக்கம் என்ன என்று கேட்க; கைகள முகிது நிந்து - கைகளை குவித்தவாறு நின்று; நஸுநகெயிந்த நுடிதனு ஹனும - புன்னகைத்தவாறு கூறினான் ஹனுமந்தன்; தா ரகுனந்தனன ஸேவகனு - தான் ஸ்ரீராமனின் சேவகன்; தேவ களுஹித நிம்மடிகெ - என் ஸ்வாமியே என்னை உன்னிடம் அனுப்பியுள்ளார்.

ஹனுமந்ததேவர், வந்து பரதனைக் கண்டு; வணங்கியபோது, பரதன் இவ்வாறு கூறினான். நீ யார்? இங்கு நீ வந்த காரணம் என்ன?, உன்னுடைய நோக்கம் என்ன என்று பரதன் கேட்க, ஹனுமந்த தேவர் கைகளை குவித்தவாறு நின்று, புன்னகைத்தவாறு இவ்வாறு கூறினார். தான் ஸ்ரீராமனின் சேவகன். என் ஸ்வாமியே என்னை உன்னிடம் அனுப்பியுள்ளார்.

**ராவணன ஸம்ஹரிஸி லங்கெய**
**நா விபீ$^{4}$ஷணகி$^{3}$த்து ஸீதா**
**தே$^{3}$வி லக்ஷ்மண ஸஹித பா$^{4}$ரத்$^{3}$வாஜன ஆஷ்ரமக்கெ**
**தே$^{3}$வ ப$^{3}$ந்த$^{3}$னு ஸகல விப$^{4}$வதி$^{3}$**
**நீவு சித்ததொ$^{3}$ளவத$^{4}$ரிஸியெனெ**
**பாவமானிய நுதிஸி தக்கயிஸித$^{3}$னு ப$^{4}$ரதேந்த்$^{3}$ர ||79**

ராவணன ஸம்ஹரிஸி - ராவணனைக் கொன்று; லங்கெய நா விபீஷணகித்து - இலங்கையின் அரசாட்சியை விபீஷணனுக்கு கொடுத்து; ஸீதாதேவி லக்ஷ்மண ஸஹித - ஸீதாதேவி மற்றும்

லட்சுமணனுடன் சேர்ந்து; பாரத்வாஜன ஆஷ்ரமக்கெ - பாரத்வாஜனின் ஆசிரமத்திற்கு; தேவ பந்தனு ஸகல விபவதி - அனைத்து வைபவங்களுடன் ஸ்வாமி வந்திருக்கிறார்; நீவு சித்ததொளவதரிஸியெனெ - நீங்கள் இதை அறிய வேண்டும் என்று கூறிய; பாவமானிய நுதிஸி - ஹனுமந்தனை புகழ்ந்து; தக்கயிஸிதனு பரதேந்த்ர - போற்றி, உபசரித்தான், பரதன்.

ராவணனைக் கொன்று, இலங்கையின் அரசாட்சியை விபீஷணனுக்கு கொடுத்து, ஸீதாதேவி மற்றும் லட்சுமணனுடன் சேர்ந்து பாரத்வாஜனின் ஆசிரமத்திற்கு, அனைத்து வைபவங்களுடன் ஸ்வாமி வந்திருக்கிறார். நீங்கள் இதை அறிய வேண்டும் என்று கூறிய ஹனுமந்தனை புகழ்ந்து, போற்றி, உபசரித்தான், பரதன்.

**ஹருஷ ஹெச்சித$^3$ மனதி$^3$ தம்மன**
**கரெது$^3$ ஷத்ருக்$^4$னனயோத்$^4$யா**
**புரிகெ$^3$ களுஹித$^3$ ஜனனியரிகீ$^3$ வார்த்தெயல்லவனு**
**அருஹி பா$^3$யெனலக்$^3$ரஜன ஸிரி**
**சரணகபி$^4$முக$^2$னாகி$^3$ வந்தி$^3$ஸி**
**ஹருஷமிகெ$^3$ ஹொரவண்டு ஹொக்கனயோத்$^4$ய புரவரவ ||80**

ஹருஷ ஹெச்சித மனதி - (பரதன்) மிகவும் மகிழ்ச்சி கொண்டு; தம்மன கரெது - தன் தம்பியை அழைத்து; ஷத்ருக்னனயோத்யாபுரிகெ - தன் தம்பியான ஷத்ருக்னனை அயோத்யைக்கு; களுஹித - அனுப்பினான்; ஜனனியரிகெ - தம் தாய்களான மூவருக்கும்; வார்த்தெயெல்லவனு அருஹி பாயெனலு - இந்த நற்செய்திகள் அனைத்தையும் சொல்லிவிட்டு வா என்று சொல்லி; அக்ரஜன ஸிரி சரணகபிமுகனாகி - ஸ்ரீராமனின் பாதுகைக்கு எதிரில் நின்றுகொண்டு; வந்திஸி - வணங்கியவாறு; ஹருஷமிகெ - மிகவும் மகிழ்ச்சியுடன்; அயோத்யபுரவரவ - அயோத்யாபுரியை நோக்கி; ஹொரவண்டு ஹொக்கனு - தானும் புறப்பட்டுச் சென்றான்.

(பரதன்) மிகவும் மகிழ்ச்சி கொண்டு, தன் தம்பியை அழைத்து, தன் தம்பியான ஷத்ருக்னனை அயோத்யைக்கு அனுப்பினான். தம் தாய்களான மூவருக்கும், இந்த நற்செய்திகள் அனைத்தையும் சொல்லிவிட்டு வா என்று சொல்லி, ஸ்ரீராமனின் பாதுகைக்கு எதிரில் நின்றுகொண்டு வணங்கியவாறு, மிகவும் மகிழ்ச்சியுடன் அயோத்யாபுரியை நோக்கி தானும் புறப்பட்டுச் சென்றான்.

**சேரித3வு கஹளெக3ளு தம்மடெ**
**பே4ரி ஶங்க2 நினாத3 ஹப்3பி3து**
**ஸாரிதந்தி3ன தி3வஸத3லி ஶத்ருக்4ன ப3ந்த3னெனெ**
**ஆரதிய தளிகெ3க3ள ஸந்த3ணி**
**கேரி கேரியொளைதி3த3வு கை**
**வாரிக3ள க3ட3ணத3லி ஹொக்கனு ராஜ மந்தி3ரவ ||81**

சேரிதவு கஹளெகளு - தாரைகள் ஒலித்தன; தம்மடெ பேரி ஷங்க - தப்பட்டைகள், முரசுகள், சங்குகள்; நினாத ஹப்பிது - ஒலிகள் அனைத்து இடங்களிலும் பரவின; அந்தின திவஸதலி - அன்றைய நாளில்; ஷத்ருக்ன பந்தனெனெ ஸாரிது - ஷத்ருக்னன் வந்திருக்கிறான் என்னும் செய்தியை சொல்லியது; ஆரதிய தளிகெகள ஸந்தணெ - ஆரதிகள், பலகார / உணவுத் தட்டுகள் வரிசை வரிசையாக; கேரி கேரியொளைதிதவு - அனைத்து சாலைகளிலும் பரவியது; கைவாரிகள கடணதலி - இப்படிப்பட்ட ஒரு உற்சாகமான கும்பல்களின் நடுவில்; ஹொக்கனு ராஜ மந்திரவ - ஷத்ருக்னன் அரண்மனையை சென்று அடைந்தான்.

தாரைகள் ஒலித்தன. தப்பட்டைகள், முரசுகள், சங்குகளின் ஒலிகள் அனைத்து இடங்களிலும் பரவின. அன்றைய நாளில் ஷத்ருக்னன் வந்திருக்கிறான் என்னும் செய்தியை சொல்லியது. ஆரதிகள், பலகார / உணவுத் தட்டுகள் வரிசை வரிசையாக அனைத்து சாலைகளிலும் பரவியது. இப்படிப்பட்ட ஒரு உற்சாகமான கும்பல்களின் நடுவில், ஷத்ருக்னன் அரண்மனையை சென்று அடைந்தான்.

**ஜனனியரு மூவரிகெ3 நமிஸித3**
**தனுஜனனு தக்கயிஸி பேளித3**
**நினகுலான்வய ப3ந்த3 பா4ரத்3வாஜனாஶ்ரமகெ**
**எனலு ஹருஷானந்த3மயரஸ**
**ஹொானலினொளகோ3லாடி3த3ரு முக2**
**வனஜவரளிது ஜனனியரிக3வனீஶ கேளெந்த3 ||82**

ஜனனியரு மூவரிகெ நமிஸித - மூன்று தாய்மார்களையும் ஷத்ருக்னன் வணங்கினான்; தனுஜனனு தக்கயிஸி பேளிதனு - தன் மகனை கட்டியணைத்துக் கொண்டு இவ்வாறு கூறினான்; இனகுலான்வய - ஸ்ரீராமன்; பாரத்வாஜ ஆஷ்ரமகெ பந்த - பாரத்வாஜ ஆசிரமத்திற்கு வந்தான்; எனலு - என்று சொல்ல; ஹருஷானந்தமயரஸ - மிகவும் மகிழ்ச்சி கொண்டனர்;

ஹொனலினொளகோலாடிதரு - அந்த மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர்; முக வனஜவரளிது - தாமரை போல முகங்கள் மலர்ந்தன; ஜனனியரிகெ - தன் தாய்களிடம்; அவனீஷ கேளெந்த - ஸ்ரீராமனைப் பற்றி சொல்கிறேன், கேளுங்கள் என்று.

ஷத்ருக்னன் மூன்று தாய்மார்களையும் வணங்கினான். தன் மகனை கட்டியணைத்துக் கொண்டு இவ்வாறு கூறினான். ஸ்ரீராமன், பாரத்வாஜ ஆசிரமத்திற்கு வந்தான்என்று சொல்ல, அனைவரும் மிகவும் மகிழ்ச்சி கொண்டனர். அந்த மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர். தாமரை போல அவர்களின் முகங்கள் மலர்ந்தன. தன் தாய்களிடம், ஸ்ரீராமனைப் பற்றி மேலும் சொல்கிறேன், கேளுங்கள் என்று கூறினான்.

**கரெஸித$^{3}$னு ஶத்ருக்$^{4}$ன மந்த்ரீ**
**ஶ்வர ஸுமந்தன கூடெ$^{3}$ நுடி$^{3}$த$^{3}$னு**
**தருணிகுல ராஜேந்த்$^{3}$ரனண்ணன ப$^{3}$ரவ கேளிதெ$^{3}$வு**
**புரவ ஶ்ருங்க$^{3}$ரிஸல்லி கரி ரத$^{2}$**
**துரக$^{3}$ மேளயிஸிரலி மோத$^{3}$த$^{3}$**
**தருணியரு ஸந்த$^{3}$ணிஸி நடெ$^{3}$யலி ந்ருபன த$^{3}$ருஶனகெ ||83**

ஷத்ருக்ன - ஷத்ருக்னன்; கரெஸிதனு - அழைத்தான்; மந்த்ரீஷ்வர ஸுமந்தன கூடெ - மந்திரியான ஸுமந்தனும்கூட; நுடிதனு - இவ்வாறு கேட்டான்; தருணிகுல ராஜேந்த்ரனண்ணன - சூரிய குல திலகனான ஸ்ரீராமன் அண்ணனின்; பரவ கேளிதெவு - வருகையின் செய்தியை கேட்டோம்; புரவ ஷ்ருங்கரிஸல்லி - இந்த நகரத்தினை அலங்காரம் செய்ய வேண்டும்; கரி ரத துரக மேளயிஸிரலி - யானை, ரத, குதிரை ஆகியவற்றை தயார் செய்யுங்கள்; மோதத தருணியரு ஸந்தணிஸி - மகிழ்ச்சி கொண்ட பெண்கள் வரிசையாக வந்து; நடெயலி - நிற்கட்டும்; ந்ருபன தருஷனகெ - ஸ்ரீராமனின் தரிசனத்திற்கு வரட்டும்;

ஷத்ருக்னன் அழைத்தான். மந்திரியான ஸுமந்தனும்கூட இவ்வாறு கேட்டான். சூரிய குல திலகனான ஸ்ரீராமன் அண்ணனின் வருகையின் செய்தியை கேட்டோம். இந்த நகரத்தினை அலங்காரம் செய்ய வேண்டும். யானை, ரத, குதிரை ஆகியவற்றை தயார் செய்யுங்கள். மகிழ்ச்சி கொண்ட பெண்கள் வரிசையாக வந்து நிற்கட்டும். ஸ்ரீராமனின் தரிசனத்திற்கு அனைவரும் வரட்டும்.

**எந்து$^3$ மந்த்ரியொளருஹி தா நிஜ**
**மந்தி$^3$ரகெ நடெ$^3$தந்து$^3$ பயணவ**
**நந்து$^3$ மாடி$^3$த$^3$ ஜனனி கௌஸலதே$^3$வி மொத$^3$லாத$^3$**
**இந்து$^3$வத$^3$னெயரேருதிர்த$^3$ரு**
**அந்த$^3$ணவ ஸொஸெயரு வரூத$^2$தி$^3$**
**ஹிந்து$^3$மந்தி$^3$ட்டணிஸி நடெது$^3$து$^3$ ஸதியரொக்$^3$கி$^3$னலி ||84**

எந்து மந்த்ரியொளருஹி - என்று மந்திரிகளிடம் சொல்லி; தா நிஜ மந்திரகெ - தான், தன்னுடைய அரண்மனைக்கு; நடெதந்து - சென்று; பயணவனந்து மாடித - தான் பயணம் செய்தான்; ஜனனி கௌஸலதேவி - தாயான கௌஸல்யாதேவி; மொதலாத - ஆகிய; இந்துவதனெயரு - சந்திரன் போன்ற முகம் கொண்டவர்கள்; அந்தணவ ஏருதிர்தரு - பல்லக்கில் ஏறினார்கள்; ஸொஸெயரு - அவர்களின் மருமகள்கள்; வரூததி ஹிந்து முந்திட்டணிஸி நடெதரு - அந்த பல்லக்கின் முன், பின் என தொடர்ந்து நடந்து வந்தார்கள்; ஸதியரொக்கினலி - அவர்களுடன் உடனேயே நடந்தனர்.

இவ்வாறு ஷத்ருக்னன் மந்திரிகளிடம் சொல்லி, தான், தன்னுடைய அரண்மனைக்குச் சென்றான். தாயான கௌஸல்யாதேவி, ஆகிய சந்திரன் போன்ற முகம் கொண்ட பிறரும், பல்லக்கில் ஏறினார்கள். அவர்களின் மருமகள்கள், அந்த பல்லக்கின் முன், பின் என தொடர்ந்து நடந்து வந்தார்கள். அவர்களுடன் உடனேயே நடந்தனர்.

**புருஜனவ ஸந்தெயிஸி பூ$^4$ஸுர**
**வரர மந்த்ராக்ஷதெய கைகொண்**
**ட$^3$ரஸ ராம ஸ்ரீ பதா$^3$ப்$^3$ஜவ நெனெது$^3$ மனதொ$^3$ளகெ$^3$**
**த$^1$ரிஸி மால்யாம்ப$^3$ர ஸுக$^3$ந்த$^4$வ**
**கரெஸிகொட்டனு ராஜவர்க்க$^3$கெ**
**ஹருஷ$^2$த$^3$லி ஶத்ருக்$^4$னனேரித$^3$ தி$^3$வ்யமணி ரத$^2$வ ||85**

புரஜனவ ஸந்தெயிஸி - மக்களை காத்தவாறு (அவர்களுக்கு நற்செய்தியை சொல்லியவாறு); பூஸுர வரர - பிராமணர்களின் / முனிவர்களின்; மந்த்ராக்ஷதெய கைகொண்ட - மந்திராக் ஷதையை பெற்றுக் கொண்ட; அரஸ ராம ஸ்ரீ பதாப்ஜவ நெனெது - அரசனான ஸ்ரீராமனின் பாதங்களை நினைத்து; மனதொளகெ தரிஸி - அதனை மனதில் நினைத்துக் கொண்டு; மால்யாம்பர

ஸுகந்தவ கரெஸிகொட்டனு - மாலைகள், சந்தனம் ஆகியவற்றை வரவழைத்துக் கொடுத்தான்; ராஜவர்கதெ - அரச வர்க்கத்திற்கு; ஹருஷதலி - மிக்க மகிழ்ச்சியுடன்; திவ்யமணி ரதவ - திவ்யமான மணி ரதத்தில்; ஷத்ருகனேரித - பிறகு, ஷத்ருக்னன் ஏறினான்.

மக்களை காத்தவாறு (அவர்களுக்கு நற்செய்தியை சொல்லியவாறு), பிராமணர்களின் / முனிவர்களின் மந்திராக் ஷதையை பெற்றுக் கொண்டு, அரசனான ஸ்ரீராமனின் பாதங்களை நினைத்தவாறு, மாலைகள், சந்தனம் ஆகியவற்றை வரவழைத்துக் கொடுத்தான். பிறகு, மிக்க மகிழ்ச்சியுடன், திவ்யமான மணி ரதத்தில் ஷத்ருக்னன் ஏறினான்.

**விவித$^{4}$ வாத்$^{3}$ய த்$^{4}$வனிய கஹளா**
**ரவவ ஸன்னெயொளைதி$^{3}$ப$^{3}$ஹ ந்ருப**
**நிவஹத$^{3}$லி சதுரங்க$^{3}$ ஸேனெய பத$^{3}$த$^{3}$ கொந்தூ$^{4}$ளி**
**பு$^{4}$வனவாகா$^{1}$ஶவனு முஸுகித$^{3}$**
**ட$^{3}$வனி நெக்$^{3}$க$^{3}$லு ப$^{3}$லவு ப$^{3}$லு பா$^{4}$**
**ரவணெயலி ஹொரவண்டனா ஶத்ருக்$^{4}$னனொலவினலி ||86**

விவித வாத்ய த்வனிய - பற்பல வாத்தியங்களின் த்வனிகள்; கஹளாரவத ஸன்னெயொளைதி - கஹளை என்னும் வாத்தியத்தின் பலத்த ஒலியில்; பஹ ந்ருப நிவஹதலி - அரசனின் வருகைக்காக காத்திருக்கும்; சதுரங்க ஸேனெய பதத - நான்கு வித படைகளின் பதங்களின்; கெந்தூளி - கால்களிலிருந்து வரும் தூசியானது; புவனவ ஆகாஷவனு முஸுகித - பூமியையும், ஆகாயத்தையும் மூடியது; டவனி நெக்கலு பலவு பலு - ரதத்தின் குதிரைகளை பிடிக்கும் கயிறினை கெட்டியாகப் பிடித்து; பாரவணெயலி ஹொரவண்டனா - இவ்வாறான சூழ்நிலையில் புறப்பட்டான்; ஷத்ருகனொலவினலி - அவற்றை பிடித்தவாறு ஷத்ருக்னன் புறப்பட்டான்.

பற்பல வாத்தியங்களின் த்வனிகள், கஹளை என்னும் வாத்தியத்தின் பலத்த ஒலியில், அரசனின் வருகைக்காக காத்திருக்கும் நான்கு வித படைகளின் கால்களிலிருந்து வரும் தூசியானது, பூமியையும், ஆகாயத்தையும் மூடியது. ரதத்தின் குதிரைகளை பிடிக்கும் கயிறினை கெட்டியாகப் பிடித்து, இவ்வாறான சூழ்நிலையில் ஷத்ருக்னன் புறப்பட்டான்.

**ஸத்திகெ3ய ஸாலுக3ள பீ3ஸுவ**
**பி3த்தரத3 செளரிக3ள ரத2த3லி**
**தெத்திஸித3 ஸொானகி3ய ஸீகு3ரி கு3டி3 பதாகெக3ள**
**மத்தெ க3ஜக4டெ1 துரக3 காலா**
**ளொத்தரிஸி ப3ரெ கமட2 கூர்மர**
**நெத்தி நெக்3க3லு நடெது3த3க3ணித ஸேனெ வஹிலத3லி ||87**

ஸத்திகெய ஸாலுகள - வெண்குடைகளின் வரிசையில்; பீஸுவ பித்தரத செளரிகள - சுற்றிலும் படபடக்கும் அலங்காரங்கள் நிறைந்த; ரததலி - ரதத்தில்; தெத்திஸித - கட்டப்பட்ட; ஸொானகிய ஸீகுரி - அழகான பாய்கள்; குடி பதாகெகள - கொடி, பதாகைகள்; மத்தெ - மற்றும்; கஜகடெ துரக காலாளொத்தரிஸி - யானை, குதிரை, காலாட்படைகளுடன்; பரெ கமட கூர்மரனெத்தி நெக்கலு - தண்ட, கமண்டலங்களை எடுத்துக் கொண்டு நடக்க; நடெதுத அகணித ஸேனெ வஹிலதலி - அவனுடன் இந்த மிகப்பெரிய சேனையானது நடந்து வந்தது.

வெண்குடைகளின் வரிசையில், சுற்றிலும் படபடக்கும் அலங்காரங்கள் நிறைந்த ரதத்தில் கட்டப்பட்ட அழகான பாய்கள், கொடி, பதாகைகள் மற்றும் யானை, குதிரை, காலாட்படைகளுடன், தண்ட, கமண்டலங்களை எடுத்துக் கொண்டு நடக்க, அவனுடன் இந்த மிகப்பெரிய சேனையானது நடந்து வந்தது.

**புருவ களெத3ரு முந்தெ3 யமுனா**
**வர நதி3யனுத்3த4ரிஸெ பயணதி3**
**மெரெவ நந்தி3கி3ராமவனு கண்ட3ல்லிகெ3ய்தந்து3**
**ப4ரதனொட3கொண்ட3ல்லி ஹனுமன**
**கருணத3லி ஸத்கரிஸி முந்த3கெ**
**தெரெளித3ரு கௌஸல்யராமன காண்வ தவகத3லி ||88**

புரவ களெதரு - நகரத்தை விட்டு; முந்தெ யமுனா வர நதியனுத்தரிஸெ - முன்பு, யமுனா நதியைத் தாண்டி; பயணதி மெரெவ - பயணத்தில் நகர்ந்து; நந்திக்ராமவனு கண்டல்லிகெ தந்து - நந்திகிராமத்தினை பார்த்தவுடன் அங்கு இறங்கி; பரதனொடகொண்டு - பரதனை பார்க்க வேண்டும் என்று; அல்லி - அங்கு; ஹனுமன கருணதலி ஸத்கரிஸி - ஹனுமனின் கருணையால் மிகவும் மகிழ்ந்து; முந்தகெ தெரளிதரு - மேலும்

முன்னேறி சென்று; கௌஸல்யராமன - கௌஸல்ய ராமனை; காண்ப தவகதலி - பார்க்கும் ஆர்வத்தில்.

நகரத்தை விட்டு, முன்பு, யமுனா நதியைத் தாண்டி, பயணத்தில் நகர்ந்து, நந்திகிராமத்தினை பார்த்தவுடன் அங்கு இறங்கி, பரதனை பார்க்க வேண்டும் என்று அங்கு ஹனுமனின் கருணையால் மிகவும் மகிழ்ந்து, மேலும் முன்னேறிச் சென்று, கௌஸல்ய ராமனை பார்க்கும் ஆர்வம் கொண்டான்.

**இத்த கேளய் பாண்ட$^{3}$வாக்$^{3}$ரஜ**
**ஸத்வ கு$^{3}$ண நிதி$^{4}$ ராமசந்த்$^{3}$ரனு**
**எத்தரிஸிப$^{3}$ரெ கண்டு$^{3}$ நலியுத ஜானகிய கரெது$^{3}$**
**இத்த நோடெ$^{3}$லெ தே$^{3}$வி ப$^{4}$ரதன**
**ஶத்ருஹர ஶத்ருக்$^{4}$னரிவரு ஸ**
**மஸ்த ப$^{3}$லஸஹிதிதி$^{3}$ரு ப$^{3}$ருதிதெ$^{3}$ நோடு$^{3}$ நீனெந்த$^{3}$ ||89**

இத்த கேளை பாண்டவாக்ரஜ - ஹே தர்மராஜனே, இதனை கேள் (என்றார் ஶாண்டில்ய முனிவர்); ஸத்வ குணநிதி ராமசந்த்ரனு - அபாரமான குணங்களின் நிதியான ஸ்ரீராமசந்திரன்; எத்தரிஸிபரெ கண்டு - எதிரில் வருபவர்களைக் கண்டு; நலியுத - மிகவும் மகிழ்ச்சியுடன்; ஜானகிய கரெது - ஸ்ரீஸீதாதேவியை அழைத்து; இத்த நோடெலெ தேவி - தேவியே, இங்கே பார்; பரதன ஷத்ருஹர ஷத்ருக்னரிவரு - பரதன் மற்றும் எதிரிகளை வெல்பவனான ஷத்ருக்னன் இவர்கள்; ஸமஸ்த பலஸஹிதிதிரு பருதிதெ - அனைத்து பலம் பொருந்திய படைகளுடன் வருகின்றனர்; நோடு நீனெந்த - பார் என்றான்.

ஹே தர்மராஜனே, இதனை கேள் (என்றார் ஶாண்டில்ய முனிவர்). அபாரமான குணங்களின் நிதியான ஸ்ரீராமசந்திரன், எதிரில் வருபவர்களைக் கண்டு, மிகவும் மகிழ்ச்சியுடன், ஸ்ரீஸீதாதேவியை அழைத்து, தேவியே, இங்கே பார். பரதன் மற்றும் எதிரிகளை வெல்பவனான ஷத்ருக்னன் இவர்கள், அனைத்து பலம் பொருந்திய படைகளுடன் வருகின்றனர் பார் என்றான்.

**எந்து$^{3}$ தோரிஸி மனத$^{3}$ ஹருஷ$^{2}$தி$^{3}$**
**மிந்து$^{3}$ லக்ஷ்மணனொட$^{3}$னெ ஸதிஸஹி**
**தந்து$^{3}$ ரத$^{2}$வேரித$^{3}$னு ராம ந்ருபாலனாக்ஷணகெ**
**முந்தெ$^{3}$ நெரெது$^{3}$து$^{3}$ ஜனதொ$^{3}$ளகெ$^{3}$ முத$^{3}$**

**தி3ந்த3 பாட2கருக்3படி3ஸெ நல**
**விந்த3 முனிகுலதொ3ட3னெ தெரளித3னா மஹீபால ||90**

எந்து தோரிஸி - என்று அவர்களை காட்டி; மனத ஹருஷதி மிந்து - மனதில் மிகவும் மகிழ்ச்சி கொண்டு; லக்ஷ்மணனொடனெ ஸதிஸஹிதந்து - லக்ஷ்மணன் மற்றும் ஸீதாதேவி உடன்; ரதவேரிதனு - ரதத்தில் ஏறினான்; ராம ந்ருபாலனு - ஸ்ரீராமன்; ஆக்ஷணகெ - அதே நொடியில்; முந்தெ நெரெதுது - முன்னே வந்தனர்; பனதொளகெ முததிந்த - மிகவும் மகிழ்ச்சியுடன் அந்த வனத்தில்; பாடகருக்கடிஸெ - பாடகர்கள் பாடிக் கொண்டிருக்க; நலவிந்த முனிகுலதொடனெ - தாமரைக் கண்ணன், முனிவர்களுடன்; தெரளிதனு ஆ மஹிபால - ஸ்ரீராமன், முன்னே சென்றான்.

என்று அவர்களை காட்டி, மனதில் மிகவும் மகிழ்ச்சி கொண்டு, லக்ஷ்மணன் மற்றும் ஸீதாதேவி உடன், ஸ்ரீராமன் ரதத்தில் ஏறினான். அதே நொடியில் அவர்களும் முன்னே வந்தனர். அந்த வனத்தில், பாடகர்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் பாடிக் கொண்டிருக்க, தாமரைக் கண்ணனான ஸ்ரீராமன், முனிவர்களுடன் முன்னே சென்றான்.

**தல்லணிஸி த3ஶதி3க்குக3ள ப3ல**
**வெல்ல நெரெது3து3 வானராதி4ப**
**ரல்லி ஸுக்3ரீவன வரூத2த3 ப3ளியெ ஸந்தெ3ணிஸெ**
**நில்லதெ3ய்தி3த3ரா விபீ4ஷண**
**ந3ல்லி தா3னவஸேனெ கய்து3க3**
**க3ளல்லி ஹொரவண்டனு வனாலயதி3ந்த3லிதி3ராகி3 ||91**

தஷதிக்குகள பலவெல்ல - அனைத்து திசைகளில் இருந்த ஸேனைகள் அனைத்தும்; தல்லணிஸி நெரெதுது - உடனடியாக மகிழ்ச்சியுடன் வந்து சேர்ந்தது; வானராதிபரல்லி - ஹனுமந்த தேவரிடம் வந்து சேர்ந்தது; சுக்ரீவன வரூதத பளியெ - சுக்ரீவனின் ரதத்தின் அருகில்; ஸந்தெணிஸெ நில்லது - வந்து நின்றது; தானவஸேனெ - அசுர சேனையானது; விபீஷணனல்லி - விபீஷணனுடன்; கைதுககளல்லி யெய்திதரா - தங்களின் ஆயுதங்களை ஏந்தியவாறு; ஹொரவண்டனு - அனைவரும் புறப்பட்டனர்; வனாலயதிந்த - தங்கள் காட்டு இல்லத்திலிருந்து; அலிதிராகி - அப்போது அங்கு எதிரில்;

அனைத்து திசைகளில் இருந்த ஸேனைகள் அனைத்தும் உடனடியாக மகிழ்ச்சியுடன் ஹனுமந்த தேவரிடம் வந்து சேர்ந்தன. சுக்ரீவனின் ரதத்தின் அருகில் வந்து நின்றது. அசுர சேனையானது, விபீஷணனுடன் தங்களின் ஆயுதங்களை ஏந்தியவாறு அனைவரும் தங்கள் காட்டு இல்லத்திலிருந்து புறப்பட்டனர். அப்போது அங்கு எதிரில்,

**தூரத$^{3}$லி மணிரத$^{2}$தொ$^{3}$ளகெ$^{3}$ ரகு$^{4}$**
**வீரரிப்$^{3}$ப$^{3}$ரு கண்டு$^{3}$ ப$^{3}$ரெ ஹொரந்**
**தே$^{3}$ரனிளித$^{3}$ரு ப$^{4}$ரத ஶத்ருக்$^{4}$னரு ஸராக$^{3}$த$^{3}$லி**
**தா$^{4}$ருணிகெ$^{3}$ மையிக்கித$^{3}$ரு பரி**
**வாரவெல்லவு நொஸலகைக$^{3}$ள**
**பூ$^{4}$ரி ஸந்தோஷ$^{2}$த$^{3}$ ஸமுத்$^{3}$ரதொ$^{3}$ளாளிதந்தி$^{3}$னலி ||92**

தூரதலி மணிரததொளகெ - தூரத்தில் ஒரு அழகான ரதத்தில்; ரகுவீரரிப்பரு கண்டு - ஶ்ரீராம, லட்சுமணர்கள் வருவதைக் கண்டு; பரெ ஹொரந்தேரனு இளிதரு - உடனடியாக தங்களின் ரதத்திலிருந்து இறங்கினர்; பரத ஷத்ருக்னரு ஸ்ராகதலி - பரத ஷத்ருக்னர்கள் ஒரே மாதிரியாக; தாருணிகெ மெய் எக்கிதரு - தரையில் விழுந்து வணங்கினர்; பரிவாரவெல்லவு - இதனைக் கண்ட அங்கிருந்த ஸேனைகள் அனைத்தும்; நொஸலகைகள - கைகளைத் தட்டியவாறு; பூரி ஸந்தோஷத ஸமுத்ரதொளு - அபாரமான மகிழ்ச்சிக் கடலில்; ஆளிதந்தினலி - குதித்தது போல இருந்தனர்.

தூரத்தில் ஒரு அழகான ரதத்தில், ஶ்ரீராம, லட்சுமணர்கள் வருவதைக் கண்டு, உடனடியாக தங்களின் ரதத்திலிருந்து இறங்கினர். பரத ஷத்ருக்னர்கள் ஒரே மாதிரியாக, தரையில் விழுந்து வணங்கினர். இதனைக் கண்ட அங்கிருந்த ஸேனைகள் அனைத்தும், கைகளைத் தட்டியவாறு, அபாரமான மகிழ்ச்சிக் கடலில் குதித்தது போல இருந்தனர்.

**இளிது$^{3}$ ரத$^{2}$வனு ந்ருபதி ஸீதா**
**லலனெ லக்ஷ்மண ஸஹித தா கௌ**
**ஸலெ ஸுமித்ராதே$^{3}$வி கைகேய சரணகபி$^{4}$ நமிஸி**
**தொலகி$^{3}$த$^{3}$ஸு ப$^{3}$ந்த$^{3}$ந்தெ தனயர**
**செலுவனீக்ஷிஸி ஜனனியரு கங்**
**க$^{3}$ளலி ஜலதும்பி$^{3}$ நெரெ பி$^{3}$கி$^{3}$யபித$^{3}$ரு நந்த$^{3}$னர ||93**

இளிது ரதவனு ந்ருபதி - ஸ்ரீராமன், தனது ரதத்திலிருந்து இறங்கி; ஸீதா லலனெ லக்ஷ்மண ஸஹித - கருணை உள்ளம் கொண்டவளான ஸீதாதேவி மற்றும் லட்சுமணனுடன்; தா - தான்; கௌஸலெ ஸுமித்ராதேவி கைகேய - தனது தாய்களான கௌஸலை, ஸுமித்ரா மற்றும் கைகேயியர்களின்; சரணகபிநமிஸி - சரணங்களின் விழுந்து வணங்கினர்; ஜனனியரு - அந்த தாயானவர்கள்; தொலகிதஸு - தங்களை மறந்து; தனயர பந்தந்தெ - அந்த மகன்கள் வந்தபோது; செலுவனீக்ஷிஸி - அவர்களின் அழகினை கண்ணாரக் கண்டு; கங்களலி ஜலதும்பி - கண்களில் ஆனந்தக் கண்ணீரை விட்டு; நெரெ பிகியபிதரு நந்தனர - தங்களின் குமாரர்களை கட்டி அணைத்துக் கொண்டனர்.

ஸ்ரீராமன், தனது ரதத்திலிருந்து இறங்கி, கருணை உள்ளம் கொண்டவளான ஸீதாதேவி மற்றும் லட்சுமணனுடன், தான், தனது தாய்களான கௌஸலை, ஸுமித்ரா மற்றும் கைகேயியர்களின் சரணங்களின் விழுந்து வணங்கினர். அந்த தாயானவர்கள், தங்களை மறந்து, அந்த மகன்கள் வந்தபோது, அவர்களின் அழகினை கண்ணாரக் கண்டு, கண்களில் ஆனந்தக் கண்ணீரை விட்டு, தங்களின் குமாரர்களை கட்டி அணைத்துக் கொண்டனர்.

**விமலமதி ஶத்ருக்4ன ப4ரதரு**
**நமிஸித3ரு ரகு4பதிகெ3 லக்ஷ்மண**
**நமிஸித3னு ப4ரதங்கெ3 ப4ரதானுஜன ஸந்தெயிஸி**
**ஸமதெயலி ஸுக்3ரீவ ஜாம்ப3வ**
**ரமித ப3லவனு ஜனனிய சரண**
**கமலவனு காணிஸித3 ஸுகரதொ3ளூர்மிளா ரமண ||94**

விமலமதி ஷத்ருக்ன பரதரு - அற்புதமான மதியினைக் கொண்டவர்களான பரத ஷத்ருக்னர்கள்; ரகுபதிகெ நமிஸிதரு - ஸ்ரீராமனை வணங்கினர்; லக்ஷ்மண நமிஸிதனு பரதங்கெ - லக்ஷ்மணன் பரதனை வணங்கினான்; பரதானுஜன ஸந்தெயிஸி - ஷத்ருக்னனிடம் சென்று; ஸமதெயலி ஸுக்ரீவ ஜாம்பவ அமித பலவனு - சுக்ரீவ, ஜாம்பவான், ஹனுமந்ததேவர் என மூவரும் ஒன்றாக வணங்கினர்; ஜனனிய - தாய்மார்களின்; சரண கமலவனு - பாத கமலங்களை; ஊர்மிளாரமண - ஊர்மிளா ரமணனான லட்சுமணன்; ஸுகரதொளு காணிஸித - தன் கைகளால் தொட்டு வணங்கினான்;

அற்புதமான மதியினைக் கொண்டவர்களான பரத ஷத்ருக்னர்கள், ஸ்ரீராமனை வணங்கினர். லக்ஷ்மணன் பரதனை வணங்கினான். ஷத்ருக்னனிடம் சென்று, சுக்ரீவ, ஜாம்பவான், ஹனுமந்ததேவர் என மூவரும் ஒன்றாக வணங்கினர். தாய்மார்களின் பாத கமலங்களை, ஊர்மிளா ரமணனான லட்சுமணன், தன் கைகளால் தொட்டு வணங்கினான்.

**வரவிபீ$^{4}$ஷண தே$^{3}$வ ப$^{3}$ந்த$^{3}$னு**
**ப$^{4}$ரத ஶத்ருக்$^{4}$னரிகெ$^{3}$ வந்தி$^{3}$ஸி**
**கரத$^{3}$ புஷ்$^{2}$பாஞ்சலிய பி$^{3}$ன்னயிஸித$^{3}$னு வினயத$^{3}$லி**
**அரஸனனுஜரு நீவு நிம்மய**
**சரண த$^{3}$ருஶனவாய்து நமகீ$^{3}$**
**னரிது$^{3}$ லோகதொ$^{3}$ளெந்து$^{3}$ கொண்டா$^{3}$டி$^{3}$த$^{3}$னு மனத$^{3}$ணியெ ||95**

வரவிபீஷண தேவ பந்தனு - விபீஷணன் வந்து; பரத ஷத்ருக்னரிகெ வந்திஸி - பரத ஷத்ருக்னர்களை வணங்கி; கரத புஷ்பாஞ்சலிய - கைகளை குவித்து; பின்னயிஸிதனு வினயதலி - மிகவும் மரியாதையுடன் கேட்டுக் கொண்டான்; அரஸனனுஜரு நீவு - நீங்கள் ஸ்ரீராமனின் தம்பிகள்; நிம்மய சரண தருஷனவாய்து - உங்களின் பாத தரிசனம் எனக்கு ஆயிற்று; நமகே ஏனு அரிது லோகதொளு - இனி இந்த உலகில் எதுதான் கிடைக்காது?; என்று கொண்டாடிதனு மனதணியெ - என்று மிகவும் மகிழ்ச்சியுடன் கொண்டாடினான்.

விபீஷணன் வந்து, பரத ஷத்ருக்னர்களை வணங்கி, கைகளை குவித்து, மிகவும் மரியாதையுடன் கேட்டுக் கொண்டான். நீங்கள் ஸ்ரீராமனின் தம்பிகள். உங்களின் பாத தரிசனம் எனக்கு ஆயிற்று. இனி இந்த உலகில் எதுதான் கிடைக்காது? என்று மிகவும் மகிழ்ச்சியுடன் கொண்டாடினான்.

**ஜனகஸுதெ ஹருஷ்$^{2}$த$^{3}$லி ஸுக்$^{3}$ரீ**
**வன ஸதியரொட$^{3}$னிர்து$^{3}$ மாவன**
**வனிதெயரிக$^{3}$பி$^{4}$னமிஸெ ஸொஸெயள தெகெ$^{3}$து$^{3}$ தக்கெயிஸி**
**ப$^{3}$னதொ$^{3}$ளகெ$^{3}$ ப$^{3}$லுனொந்த$^{3}$லா மா**
**நினியெ பா$^{3}$ரெள தாயி பா$^{3}$ரெந்**
**தெ$^{3}$னுத கம்ப$^{3}$னிதொ$^{3}$டெ$^{3}$து$^{3}$ லாலிஸித$^{3}$ரு மஹாஸதிய ||96**

ஜனகஸுதெ ஹருஷதலி - ஸ்ரீஸீதாதேவி, மிகவும் மகிழ்ச்சியுடன்; ஸுக்ரீவன ஸதியரொடனெ இர்து - ஸுக்ரீவனின் மனைவியருடன் சேர்ந்து; மாவன வனிதெயரிகெ அபிநமிஸெ - தன் மாமியார்களை வணங்க; ஸொஸெயள தெகெது தக்கயிஸி - தங்களின் மருமகள்களை தூக்கி உபசரித்தனர்; பனதொளகெ பலுனொந்தலா மானினியே - அசோகவனத்தில் மிகவும் கஷ்டப்பட்ட ஸீதையே; பாரெள தாயெ பாரெந்தெனுத - வா, என் தாயே, வா என்று கூறியவாறு; கம்பனிதொடெது - ஆனந்தக் கண்ணீர் விட்டவாறு; லாலிஸிதரு மஹாஸதிய - ஸ்ரீஸீதாதேவியை கொண்டாடினர்.

ஸ்ரீஸீதாதேவி, மிகவும் மகிழ்ச்சியுடன், ஸுக்ரீவனின் மனைவியருடன் சேர்ந்து, தன் மாமியார்களை வணங்க, தங்களின் மருமகள்களை தூக்கி உபசரித்தனர். அசோகவனத்தில் மிகவும் கஷ்டப்பட்ட ஸீதையே, வா, என் தாயே, வா என்று கூறியவாறு, ஆனந்தக் கண்ணீர் விட்டவாறு, அவர்கள், ஸ்ரீஸீதாதேவியை கொண்டாடினர்.

**தரிஸி மணிபூ4ஷண து3கூலவ**
**த4ரணி தனுஜெகெ3 தொடி3ஸி ப4ரதனு**
**தருணிஸுத ஜாம்ப3வ விபீ4ஷ2ணருக3ள ஸத்கரிஸி**
**புரகெ பயணவ மாடி3த3னு ட3ங்**
**கு3ரவ ஸன்னெயொளந்து3 ஹொரவண்**
**டரு மஹாம்பு3தி4 தெரளுவந்தெ ஸமுத்3ர கோ4ஷ2த3லி ||97**

மணிபூஷண துகூலவ தரிஸி - சிறந்த ஆடை அணிகலன்களை வரவழைத்து; பரதனு - பரதன்; தரணி தனுஜெகெ தொடிஸி - ஸ்ரீஸீதாதேவிக்கு சமர்ப்பித்து; தரணிஸுத ஜாம்பவ விபீஷணருகள ஸத்கரிஸி - சுக்ரீவ, ஜாம்பவந்த, விபீஷணன் ஆகியவர்களுக்கு மரியாதை செலுத்தி; புரகெ பயணவ மாடிதனு - நகருக்குள் தன் பயணத்தை செய்தான்; டங்குரவ ஸன்னெயொளு அந்து - முரசு சத்தத்தில் அன்று; ஹொரவண்டரு - அனைவரும் புறப்பட்டனர்; ஸமுத்ர கோஷதலி - சமுத்திரத்தின் சத்தத்தில்; மஹாம்புதி தெரளுவந்தெ - கடல் அலைகள் புறப்படுவதைப் போல (புறப்பட்டனர்).

சிறந்த ஆடை அணிகலன்களை வரவழைத்து, பரதன், ஸ்ரீஸீதாதேவிக்கு சமர்ப்பித்து, சுக்ரீவ, ஜாம்பவந்த, விபீஷணன் ஆகியவர்களுக்கு மரியாதை செலுத்தி, நகருக்குள் தன் பயணத்தை செய்தான். முரசு சத்தத்தில் அன்று, அனைவரும்

புறப்பட்டனர். சமுத்திரத்தின் சத்தத்தில், கடல் அலைகள் புறப்படுவதைப் போல (புறப்பட்டனர்).

**மஸகி$^{3}$து$^{3}$து$^{3}$ கந்தூ$^{4}$ளி க$^{3}$க$^{3}$னவ**
**முஸுகித$^{3}$ரெ ரவி தா$^{4}$துகு$^{3}$ந்தி$^{3}$த$^{3}$**
**பஸரிஸித$^{1}$தெ$^{3}$ண் தெ$^{3}$ஸெயனீண்டிது ஸப்த ஸாக$^{3}$ரவ**
**உஸுரு தெகெப$^{3}$கெ$^{3}$யாய்து கூரும**
**நஸித$^{3}$னஹிபதி ப$^{3}$லத$^{3}$ பா$^{4}$ரதி$^{3}$**
**பெ$^{3}$ஸுகெ$^{3}$ பி$^{3}$டெ$^{3}$ கி$^{3}$ரி வாத்$^{3}$யததி க$^{4}$ர்ஜிஸிது மூஜக$^{3}$வ ||98**

கெந்தூளி - இந்த படைகளிலிருந்து புறப்பட்ட கால் தூசியானது; மஸகிதுது ககனவ முஸுகிதரெ - புறப்பட்டு வானத்தையே மூடினால்; ரவி தாதுகுந்தித பஸரிஸிததெண்தெஸெய நீண்டிது - சூரியனின் கிரணங்கள் அனைத்து திசைகளிலும் பரவத் தொடங்கியது; கூருமன அஸிதனு அஹிபதி - கூர்மன் வாசுகியின் வாலின் பலத்தினால் மலையினை இழுத்து ஒன்றாக இருக்கச் செய்தான்; ஸப்த ஸாகரவ உஸுரு தெகெபகெ ஆயிது - ஏழு சாகரங்களின் பிராணனையே எடுப்பது போல ஆனது; வாத்யததி கர்ஜிஸிது மூஜகவ - வாத்தியங்களின் ஒலியானது மூன்று உலகங்களிலும் கர்ஜித்தது.

இந்த படைகளிலிருந்து புறப்பட்ட கால் தூசியானது, புறப்பட்டு வானத்தையே மூடினால், சூரியனின் கிரணங்கள் அனைத்து திசைகளிலும் பரவத் தொடங்கியது. கூர்மன் வாசுகியின் வாலின் பலத்தினால் மலையினை இழுத்து ஒன்றாக இருக்கச் செய்து, ஏழு சாகரங்களின் பிராணனையே எடுப்பது போல ஆனது போல, இப்போதும் ஆனது. வாத்தியங்களின் ஒலியானது மூன்று உலகங்களிலும் கர்ஜித்தது.

**அரஸ கேளில்லிந்த$^{3}$யோத்$^{4}$யா**
**புரிகெ$^{3}$ ப$^{3}$ந்த$^{3}$னு ராம ந்ருபத**
**ந்னரஸி லக்ஷ்மண ப$^{4}$ரத ஶத்ருக்$^{4}$னாதி$^{3}$ பா$^{3}$ந்த$^{4}$வர**
**பருட$^{2}$வணெயலி ராஜதேஜதி$^{3}$**
**ஸூரரு து$^{3}$ந்து$^{3}$பி$^{4}$ மொளகெ$^{3}$ நிஜமந்**
**தி$^{3}$ரத$^{3}$ பா$^{3}$கி$^{3}$ல ப$^{3}$ளிய நிந்த$^{3}$னு முனிபரொக்$^{3}$கி$^{3}$னலி ||99**

அரஸ கேளு - ஹே தர்மராஜனே கேள்; ராம ந்ருப - ஸ்ரீராமனானவன்; இல்லிந்த அயோத்யா புரிகெ பந்தனு -

இங்கிருந்து அயோத்யாபுரிக்கு வந்தான்; தன்னரஸி லக்ஷ்மண பரத ஷத்ருக்னாதி - தன் மனைவி ஸ்ரீஸீதாதேவி, லக்ஷ்மண பரத ஷத்ருக்னன் ஆகிய; பாந்தவர பருடவணெயலி - ஆகியோர் சூழ்ந்திருக்க; ராஜதேஜதி - வேகமாக; ஸுரரு துந்துபி மொளகெ - வானில் சுரர்கள் தேவ துந்துபிகளை முழங்க; நிஜ மந்திரத - தன்னுடைய அரண்மனையின்; பாகில பளிய நிந்தனு - வாயிலின் அருகில் நின்றான்; முனிபரொக்கினலி - முனிவர்களும் வரிசையாக நின்றனர்.

ஹே தர்மராஜனே கேள், ஸ்ரீராமனானவன் இங்கிருந்து அயோத்யாபுரிக்கு வந்தான். தன் மனைவி ஸ்ரீஸீதாதேவி, லக்ஷ்மண பரத ஷத்ருக்னன் ஆகியோர் சூழ்ந்திருக்க, வேகமாக, வானில் சுரர்கள் தேவ துந்துபிகளை முழங்க, தன்னுடைய அரண்மனையின், வாயிலின் அருகில் நின்றான். முனிவர்களும் வரிசையாக நின்றனர்.

**அனிமிஷ$^{2}$ரு ஸந்த$^{3}$ணிஸி அப்$^{4}$ரதி$^{3}$**
**ஹனுமனாக்ஷண ப$^{3}$ந்து$^{3}$ கைலா**
**கி$^{3}$னலி பாயவதா$^{4}$ன சித்தவதா$^{4}$னவெச்சரிகெ**
**எனலு ரத$^{2}$தி$^{3}$ந்தி$^{3}$ளிது$^{3}$ ரகு$^{4}$ நந்**
**த$^{3}$னனு ஹொக்கனு ராஜப$^{4}$வனவ**
**தனதனகெ$^{3}$ புரஜனரு காணிகெகொ$^{3}$ட்டு நமிஸித$^{3}$ரு ||100**

அனிமிஷரு அப்ரதி ஸந்தணிஸெ - தேவர்கள் வானில் வந்து நின்றிருக்க; ஹனுமனாக்ஷண பந்து - ஹனுமன் அந்த நொடியில் வந்து; கைலாகினலி - தன் கைகளை அங்கும் இங்கும் ஆட்டியவாறு; பாயவதான - சரியாக நில்லுங்கள் (attention); சித்தவதான - கவனமாக கேளுங்கள்; எச்சரிகெ எனலு - என்று அனைவரையும் எச்சரிக்க; ரகு நந்தனனு - ஸ்ரீராமன்; ரததிந்திளிது - தனது ரதத்திலிருந்து இறங்கி; ராஜபவனவ தனதனகெ ஹொக்கனு - தனது அரண்மனையின் அருகில் சென்றான்; புரஜனரு காணிகெ கொட்டு நமிஸிதரு - ஊர் மக்கள் அனைவரும் தங்களின் காணிக்கைகளை கொடுத்து வணங்கினர்.

தேவர்கள் வானில் வந்து நின்றிருக்க, ஹனுமன் அந்த நொடியில் வந்து, தன் கைகளை அங்கும் இங்கும் ஆட்டியவாறு, சரியாக நில்லுங்கள் (attention), கவனமாக கேளுங்கள் என்று அனைவரையும் எச்சரிக்க, ஸ்ரீராமன், தனது ரதத்திலிருந்து இறங்கி, தனது அரண்மனையின் அருகில் சென்றான். ஊர்

மக்கள் அனைவரும் தங்களின் காணிக்கைகளை கொடுத்து வணங்கினர்.

**கு$^{3}$ரு வஸிஷ்டன மததி$^{3}$ தம்மந்**
**தி$^{3}$ரு ஸஹித மஜ்ஜனவ மாடி$^{3}$த$^{3}$**
**நரஸ தி$^{3}$வ்யஸுக$^{3}$ந்த$^{4}$ மால்யாம்ப$^{3}$ர ஸுபூ$^{4}$ஷ$^{2}$ணவ**
**த$^{4}$ரிஸித$^{3}$ரு நால்வரு குமாரரு**
**ஹருஷ$^{2}$மிகெ$^{3}$ நிஜஜனனியரு மூ**
**வரிகெ$^{3}$ வந்தி$^{3}$ஸி மெரெத$^{3}$ரக்$^{3}$க$^{3}$த$^{3}$ ராஜதேஜத$^{3}$லி ||101**

குரு வஸிஷ்டன மததி - குரு வஸிஷ்டர் கூறியதைப் போல; தம்மந்திரு ஸஹித - தன் தம்பிகள் உடன் இருக்க; மஜ்ஜனவ மாடிதனரஸ - ஸ்ரீராமன், ஸ்னானம் செய்தான்; திவ்ய ஸுகந்த மால்யாம்பர ஸுபூஷணவ - திவ்ய ஸுகந்தமான மாலைகளை, அணிகலன்களை; நால்வரு குமாரரு - நான்கு ராஜகுமாரர்களும்; தரிஸிதரு - அணிந்தனர்; ஹருஷமிகெ - மிகவும் மகிழ்ச்சியுடன்; நிஜ ஜனனியரு மூவரிகெ - மூன்று தாய்களுக்கும்; வந்திஸெ - வணங்கினர்; மெரெதரக்கத - அங்கிருந்து நகர்ந்து; ராஜதேஜதலி - வேகமாக விரைந்து வந்தனர்.

குரு வஸிஷ்டர் கூறியதைப் போல, தன் தம்பிகள் உடன் இருக்க, ஸ்ரீராமன், ஸ்னானம் செய்தான். திவ்ய ஸுகந்தமான மாலைகளை, அணிகலன்களை, நான்கு ராஜகுமாரர்களும் அணிந்தனர். மிகவும் மகிழ்ச்சியுடன், மூன்று தாய்களுக்கும் வணங்கினர். அங்கிருந்து நகர்ந்து, வேகமாக விரைந்து வந்தனர்.

**ஓலக$^{3}$கெ நடெ$^{3}$தந்து$^{3}$ ராம ந்ரு**
**பாலனனுஜரு ஸஹித மந்த்ரி**
**ஜால பா$^{3}$ந்த$^{4}$வ ஸஹித தெரெய ஸமஸ்த த$^{4}$ரணிபரு**
**ஓலக$^{3}$தி$^{3}$ முனி முக்$^{2}$யரெல்லரு**
**லீலெயிம் குள்ளிரெ ஸுமந்த்ரனு**
**குலகு$^{3}$ருவிகெ$^{3}$ நமிஸியாளோசிஸித$^{3}$னீ ஹத$^{3}$ன ||102**

ராம ந்ருபாலனு அனுஜரு ஸஹித - ஸ்ரீராமன், தன்னுடைய தம்பிகளுடன் சேர்ந்து; ஓலககெ நடெதந்து - தன்னுடைய அரசவைக்கு வந்தான்; மந்த்ரி ஜால பாந்தவ ஸஹித - மந்திரிகள், உற்றார் உறவினர்களுடன் வந்தான்; தெரெய ஸமஸ்த தரணிபரு - பூமியின் அனைத்து அரசர்களும்; ஓலகதி - அந்த அரசவையில் அமர்ந்திருந்தனர்; முனி முக்யரெல்லரு - முனிவர்கள்,

முக்யஸ்தர்கள் என அனைவரும்; லீலெயிம் குள்ளிரெ - அங்கு அமர்ந்திருக்க; ஸுமந்த்ரனு - தசரதனின் மந்திரி; ஸ்ரீராமனின் தேரோட்டி ஸுமந்த்ரன்; குலகுருவிகெ நமிஸி - தன் குலகுருவினை வணங்கி; ஆளோசிஸிதனு ஹதன - இந்த விஷயத்தை கூறினான்.

ஸ்ரீராமன், தன்னுடைய தம்பிகளுடன் சேர்ந்து, தன்னுடைய அரசவைக்கு வந்தான். மந்திரிகள், உற்றார் உறவினர்களுடன் வந்தான். பூமியின் அனைத்து அரசர்களும், அந்த அரசவையில் அமர்ந்திருந்தனர். முனிவர்கள், முக்யஸ்தர்கள் என அனைவரும் அங்கு அமர்ந்திருக்க, தசரதனின் மந்திரி, ஸ்ரீராமனின் தேரோட்டி ஸுமந்த்ரன், தன் குலகுருவினை வணங்கி, இந்த விஷயத்தை கூறினான்.

**வர ந்ருபாலகெ$^{3}$ ராஜபட்டவ**
**த$^{4}$ரிஸப$^{3}$ஹுதே ஜீயயெனெ பூ$^{4}$**
**ஸுரர ப$^{3}$ரஹேளெனுத தரிஸித$^{3}$ரகி$^{2}$ள வஸ்துக$^{3}$ள**
**தரிஸி கவளவனுப$^{4}$யரிகெ$^{3}$ கர**
**கரெஸி கொடி$^{3}$ஸித$^{3}$னா ஸுமந்தனு**
**புரவ ஸலெ ஶ்ருங்க$^{3}$ரிஸெ பரிசாரரிகெ$^{3}$ நேமிஸித$^{3}$ ||103**

வர ந்ருபாலகெ - ஸ்ரீராமனுக்கு; ராஜபட்டவ தரிஸ பஹுதே - பட்டாபிஷேகத்தை செய்யலாம் என்று; ஜீயயென பூஸுரர - போற்றத்தக்கவரான (ஸ்ரீராமனுக்கு என்று), பிராமணர்களின்; பரஹேளெனுத - ஆசிர்வாதம் (அனுமதி) இருந்ததால்; தரிஸிதரகிள வஸ்துகள - அனைத்து உலக வஸ்துகளையும் கொண்டு வந்தனர்; தரிஸி - அவற்றை கொண்டு வந்து; கவளவனு - அத்தகைய சிறந்த பொருட்களை; உபயரிகெ - ஸ்ரீராமன் மற்றும் ஸ்ரீஸீதாதேவிக்கு; கரெகரிஸி கொடிஸிதனு - கொடுக்கச் செய்தான்; ஆ ஸுமந்தனு - அந்த ஸுமந்தன்; புரவ ஸலெ ஷ்ருங்கரிஸெ - நகரத்தை நன்றாக அலங்கரிப்பதற்காக; பரிசாரரிகெ நேமிஸித - வேலையாட்களை நியமித்தான்.

ஸ்ரீராமனுக்கு பட்டாபிஷேகத்தை செய்யலாம் என்று போற்றத்தக்கவரான பிராமணர்களின் ஆசிர்வாதம் (அனுமதி) இருந்ததால், அனைத்து உலக வஸ்துகளையும் கொண்டு வந்தனர். அவற்றைக் கொண்டு வந்து, அத்தகைய சிறந்த பொருட்களை, ஸ்ரீராமன் மற்றும் ஸ்ரீஸீதாதேவிக்கு கொடுக்கச் செய்தான் அந்த ஸுமந்தன். நகரத்தை நன்றாக அலங்கரிப்பதற்காக, வேலையாட்களை நியமித்தான்.

**வாரணத$^3$ பீ$^3$தி$^3$க$^3$ள க$^4$ன ஶ்ருங்**
**கா$^3$ரதி$^3$ம் நவரத்ன ஜல்லிய**
**தோரணத$^3$ மண்டபத$^3$ ஸிரியலி மேலு கட்டுக$^3$ள**
**காரளிய குங்குமத$^3$ நவ ப**
**ன்னீர சளெயத$^3$ கத்துரிய மத**
**ஸாரளிய ரசனெயலி ஶ்ருங்க$^3$ரிஸித$^3$ரு பட்டணவ ||104**

வாரணத பீதிகள - அந்த நகரத்து வீதிகளை; கன ஷ்ருங்காரதிம் - அற்புதமான அலங்காரங்களால்; நவரத்ன ஜல்லிய தோரணத - நவரத்னங்களால் இழைக்கப்பட்ட தோரணங்களால்; மண்டபத ஸிரியலி - மண்டபங்களை மிகவும் அற்புதமாக; மேலு கட்டுகள காரளிய - அந்த மண்டபங்களின் வரிசையை; குங்குமத நவ பன்னீர சளெயத - குங்கமம் தோய்ந்த சிறந்த பன்னீர் தெளித்த; கத்துரிய மத ஸாரளிய - கஸ்தூரி போன்ற சுகந்த திரவியங்கள் கொண்ட; ரசனெயலி - கலவையினால்; ஷ்ருங்கரிஸிதரு பட்டணவ - பட்டணங்களை அலங்காரம் செய்தனர்.

அந்த நகரத்து வீதிகளை, அற்புதமான அலங்காரங்களால், நவரத்னங்களால் இழைக்கப்பட்ட தோரணங்களால், மண்டபங்களை மிகவும் அற்புதமாக, அந்த மண்டபங்களின் வரிசையை, குங்கமம் தோய்ந்த சிறந்த பன்னீர் தெளித்த கஸ்தூரி போன்ற சுகந்த திரவியங்கள் கொண்ட கலவையினால், பட்டணங்களை அலங்காரம் செய்தனர்.

**ப$^3$ரெஸித$^3$ரு வாலெக$^3$ள தி$^3$க்கின**
**அரஸுக$^3$ள ப$^3$ரஹேளி முனி மு**
**க்$^2$யரனு ப$^3$ந்த$^3$ரு அவனிபாலகரதுள ப$^3$லஸஹித**
**தருணியரு ஶ்ருங்க$^3$ரிஸித$^3$ரு பரி**
**பரிய தி$^3$வ்யது$^3$கூல வஸ்த்ரா**
**ப$^4$ரண பூ$^4$ஷி$^2$தராகி$^3$ பிடி$^3$த$^3$ரு கலஶகன்னடி$^3$ய ||105**

மாலெகள பரெஸிதரு - மாலைகளை கட்டினர்; திக்கின அரஸுகள பரஹேளி - அனைத்து திசைகளிலிருந்தும் அரசர்களை வரச்சொல்லி; முனி முக்யரனு பந்தரு - முனிவர்கள், முக்யஸ்தர்கள் வந்தனர்; அவனிபாலகரு அதுள பல ஸஹித - அரசர்கள் தங்களின் வலிமையான படைகளுடன் வந்தனர்; தருணியரு ஷ்ருங்கரிஸிதரு - பெண்கள் தங்களை இவ்வாறாக அலங்கரித்துக் கொண்டனர்; பரிபரிய திவ்யதுகூல

வஸ்த்ராபரண - பற்பல திவ்யமான ஆடை அணிகலன்களால்; பூஷிதராகி - அலங்காரம் செய்து கொண்டு; பிடிதரு கலஷகன்னடிய - கலசங்களை, கண்ணாடிகளை பிடித்து நின்றனர்.

மாலைகளை கட்டினர். அனைத்து திசைகளிலிருந்தும் அரசர்களை வரச்சொல்லி, முனிவர்கள், முக்யஸ்தர்கள் வந்தனர். அரசர்கள் தங்களின் வலிமையான படைகளுடன் வந்தனர். பெண்கள் தங்களை இவ்வாறாக அலங்கரித்துக் கொண்டனர். பற்பல திவ்யமான ஆடை அணிகலன்களால், அலங்காரம் செய்து கொண்டு, கலசங்களை, கண்ணாடிகளை பிடித்து நின்றனர்.

**ஹருஷ்$^{2}$த$^{3}$லி தந்தம்ம கையலி**
**பரம புண்யஸுவஸ்துக$^{3}$ள தந்**
**தி$^{3}$ரிஸித$^{3}$ரு ஹருஷ்$^{2}$த$^{3}$லி நெரெது$^{3}$து$^{3}$ ப$^{3}$ஹுள ஸங்க்$^{2}$யெயலி**
**ஶரதி$^{3}$ மேரு தி$^{3}$க$^{3}$ந்த$^{3}$தவனீ**
**ஶ்வரரு யாசக பண்டி$^{3}$தரு கவி**
**வரரு கா$^{3}$யக மல்ல தெ$^{3}$ய்வக்ஞரு ஸுநர்த்தகரு ||106**

ஹருஷதலி - மகிழ்ச்சியுடன்; தந்தம்ம கையலி - தங்களின் கைகளில்; பரம புண்யஸுவஸ்துகள - மிகவும் புண்யகரமான பொருட்களை; தந்திரிஸிதரு - கொண்டு வந்து வைத்துக் கொண்டனர்; ஹருஷதலி நெரெதுது - மிகவும் மகிழ்ச்சியுடன் வந்தனர்; பஹுள ஸங்க்யெயலி - அதிகமான எண்ணிக்கையில்; ஷரதி மேரு திகந்ததவனு - பல கடல், மலைகளை, வெகு தூரங்களைக் கடந்து வந்தனர்; ஈஷ்வரரு - அரசர்கள்; யாசக - யாசகம் பெறுபவர்கள்; பண்டிதரு கவிவரரு - பண்டிதர்கள், கவிஞர்கள்; காயக மல்ல - பாடகர்கள், மல்யுத்தம் செய்பவர்கள்; தெய்வக்ஞரு ஸுநர்த்தகரு - அறிஞர்கள் மற்றும் நாட்டியம் ஆடுபவர்கள்.

மகிழ்ச்சியுடன், தங்களின் கைகளில், மிகவும் புண்யகரமான பொருட்களை கொண்டு வந்து வைத்துக் கொண்டனர். மிகவும் மகிழ்ச்சியுடன் வந்தனர். அதிகமான எண்ணிக்கையில், பல கடல், மலைகளை, வெகு தூரங்களைக் கடந்து வந்தனர். அரசர்கள், யாசகம் பெறுபவர்கள், பண்டிதர்கள், கவிஞர்கள், பாடகர்கள், மல்யுத்தம் செய்பவர்கள், அறிஞர்கள் மற்றும் நாட்டியம் ஆடுபவர்கள் என அனைவரும் வந்தனர்.

**ப3ந்த3ரதி பே3க3த3லி வரத்ருண**
**பி3ந்து3 முனி தமனாக்2ய ஸனக ஸ**
**நந்த3 ஸௌனக ஸூத ஷதமுக2 ஸுமதி ஜாபா3லி**
**ஸந்த3 தா3ல்ப்4ய மரீசி லோகா3**
**நந்த3 ஸுருகு3ரு ரோமஜனு முசு**
**குந்த3 நாரத3ரகி2ள தபஸிக3ளைதி3தொக்3கி3னலி ||107**

பந்தரதி பேகதலி - மிகவும் வேகமாக வந்தனர்; வரத்ருண பிந்து முனி - மிகச் சிறந்தவர்களான, சிறிய உருவம் கொண்டிருந்தவர்களான முனிவர்கள்; தமனாக்ய - வைராக்கியம் கொண்டிருந்த; ஸனக ஸனந்த - ஸனக ஸனந்தனர்கள்; ஸௌனக ஸூத ஷதமுக ஸுமதி ஜாபாலி ஸந்த தால்ப்ய மரீசி லோகானந்த - ஆகிய முனிவர்கள்; ஸுரகுரு ரோமஜனு முசுகுந்த நாரதரு - ஆகிய முனிவர்கள்; அகிள தபஸிகளைதிது ஒக்கினலி - என அனைத்து உலக முனிவர்களும் அங்கு வந்து சேர்ந்தனர் விரைவாக.

இவர்கள் அனைவரும் மிகவும் வேகமாக வந்தனர். மிகச் சிறந்தவர்களான, சிறிய உருவம் கொண்டிருந்தவர்களான முனிவர்கள், வைராக்கியம் கொண்டிருந்த, ஸனக ஸனந்தனர்கள். ஸௌனக ஸூத ஷதமுக ஸுமதி ஜாபாலி ஸந்த தால்ப்ய மரீசி லோகானந்த - ஆகிய முனிவர்கள். ஸுரகுரு ரோமஜனு முசுகுந்த நாரதரு ஆகிய முனிவர்கள், என அனைத்து உலக முனிவர்களும் அங்கு வந்து சேர்ந்தனர் விரைவாக.

**அத்ரி பா4ரத்3வாஜ விஶ்வா**
**மித்ர கௌ3தம வாமதே3வன**
**க3ஸ்த்ய கண்வாங்கி3ரஸ மார்கண்டே3ய மைத்ரேய**
**ஸத்யதப கௌண்டி3ன்ய கௌஷிக**
**புத்ர ஷுக வால்மீகியா முனி**
**போத்தமரு ஸந்த3ணிஸித3ரு ரகு4 ந்ருபன ஸபெ4யொளகெ3 ||108**

அத்ரி பாரத்வாஜ விஷ்வாமித்ர கௌதம வாமதேவனு அகஸ்த்ய கண்வ அங்கிரஸ மார்க்கண்டேய மைத்ரீய ஸத்யதப கௌண்டின்ய கௌஷிகரின் மகன் ஷுக வால்மிகி - ஆகிய முனிவர்கள்; ஆ முனி போத்தமரு - இத்தகைய சிறந்த முனிவர்கள்; ரகு ந்ருபன ஸபெயொளகெ - ஸ்ரீராமனின் சபையில்; ஸந்தணிஸிதரு - வந்து சேர்ந்தனர்.

அத்ரி பாரத்வாஜ விஷ்வாமித்ர கௌதம வாமதேவனு அகஸ்த்ய கண்வ அங்கிரஸ மார்க்கண்டேய மைத்ரீய ஸத்யதப கௌண்டின்ய கௌஷிகரின் மகன் ஷுக வால்மிகி - ஆகிய சிறந்த முனிவர்கள், ஸ்ரீராமனின் சபையில் வந்து சேர்ந்தனர்.

**ச்யவன ஜன்ஹு ம்ருகண்டு$^{3}$ முனிகா$^{3}$**
**லவ ஷதானந்தை$^{3}$க நாரத$^{3}$**
**ஷ்ருமதி கஷ்யப கபில ஶௌனக ஶனக ஜமத$^{3}$க்$^{3}$னி**
**பவன ப$^{4}$க்ஷண கா$^{3}$ர்க்$^{3}$ய ரிஷி$^{2}$ பா$^{4}$**
**ர்க்$^{3}$க$^{3}$வ ஸனத்ஸூத நந்த$^{3}$ ஜயமுனி**
**நிவஹதொ$^{3}$ட$^{3}$னைதந்த$^{3}$னா தூ$^{3}$ர்வாஸனொலவினலி ||109**

ச்யவன ஜன்ஹு ம்ருகண்டு முனி காலவ - ஆகிய முனிவர்கள்; ஷதானந்த நாரத ஷ்ரவதி கஷ்யப கபில ஷௌனக ஷனக ஜமதக்னி - ஆகிய முனிவர்கள்; பவன பக்ஷண கார்க்யரிஷி - காற்றை மட்டும் உட்கொண்டவரான கார்க்ய ரிஷி; பார்க்கவ ஸனத் ஸூத நந்த ஜயமுனி - ஆகிய முனிவர்கள்; நிவஹதொடனெ ஐதந்தனா - ஒரு குழுவாக கொண்டு வந்தார்; தூர்வாஸனு ஒலவினலி - (இந்த முனிவர்களை) துர்வாஸர் அழைத்து வந்தார்.

ச்யவன ஜன்ஹு ம்ருகண்டு முனி காலவ - ஆகிய முனிவர்கள், ஷதானந்த நாரத ஷ்ரவதி கஷ்யப கபில ஷௌனக ஷனக ஜமதக்னி - ஆகிய முனிவர்கள், காற்றை மட்டும் உட்கொண்டவரான கார்க்ய ரிஷி, பார்க்கவ ஸனத் ஸூத நந்த ஜயமுனி - ஆகிய முனிவர்கள், ஒரு குழுவாக கொண்டு வந்தனர். (இந்த முனிவர்களை) துர்வாஸர் அழைத்து வந்தார்.

**சோள கு$^{3}$ஜ்ஜர த்$^{3}$ரவிட$^{3}$ வங்க$^{3}$ வ**
**ராள சோடக ஸிந்து$^{4}$ ஶிப$^{3}$ நே**
**பாள பாண்ட்$^{3}$ய மராட ஸிம்ஹள ஹொண ஸவ்வீர**
**லாள மக$^{3}$த$^{4}$ வித$^{3}$ர்ப்ப$^{4}$ ருது மலெ**
**யாள நிஷ$^{2}$த$^{4}$ களிங்க$^{3}$ வர பாஞ்**
**சாள ப$^{3}$ஹுதே$^{3}$ஶாதி$^{4}$பதிக$^{3}$ளு ப$^{3}$ந்த$^{3}$ரொக்$^{3}$கி$^{3}$னலி ||110**

சோள குஜ்ஜர த்ரவிட வங்க வராள - ஆகிய தேசத்து அரசர்கள்; சோடக ஸிந்து ஷிப நேபாள பாண்ட்ய மராட சிங்கள - ஆகிய தேசத்து அரசர்கள்; ஹொண ஸவ்வீரலாள மகத விதர்ப்ப ருது மலையாள நிஷத களிங்க வர பாஞ்சால - ஆகிய அரசர்கள்;

பஹு தேஷாதிபதிகளு - ஆகிய பற்பல நாட்டு அரசர்கள்; பந்தரு ஒக்கினிலி - ஒன்றாக வந்து சேர்ந்தனர்.

சோள குஜ்ஜர த்ரவிட வங்க வராள - ஆகிய தேசத்து அரசர்கள், சோடக ஸிந்து ஷிப நேபாள பாண்ட்ய மராட சிங்கள - ஆகிய தேசத்து அரசர்கள், ஹொாண ஸவ்வீரலாள மகத விதர்ப்ப ருது மலையாள நிஷத களிங்க வர பாஞ்சால - ஆகிய அரசர்கள், ஆகிய பற்பல நாட்டு அரசர்கள் ஒன்றாக வந்து சேர்ந்தனர்.

**மாளவாந்த்ராகருஷ[2]வர நீ**
**பாள ப[3]ர்ப[3]ர மத்ஸ்ய ந்ருப ப[3]ங்**
**கா[3]ள மாந்த்[4]ர மராட கோஸல கொட[3]க[3] கர்னாட**
**கௌ[3]ள குந்தள க்ருகரபதி ப[3]**
**ல்லாள கொங்கண சீன கைகய**
**ராள மேளதி[3] ப[3]ந்து[3] ஹொாக்கரு ந்ருபன வரஸபெ[4]ய ||111**

மாளவ ஆந்த்ர கருஷவர நேபாள பர்பர மத்ஸ்ய - ஆகிய அரசர்கள்; பங்காள மாந்த்ர மராட கோஸல கொடகு கர்னாட கௌள - ஆகிய அரசர்கள்; குந்தள க்ருக பல்லாள கொங்கண சீன கைகய ராள - ஆகிய அரசர்கள்; மேளதி பந்து ஹொாக்கரு - மேள தாளங்களுடன் வந்து சேர்ந்தனர்; ந்ருபன வரஸபெய - ஸ்ரீராமனின் சிறந்த சபையினை சேர்ந்தனர்.

மாளவ ஆந்த்ர கருஷவர நேபாள பர்பர மத்ஸ்ய - ஆகிய அரசர்கள், பங்காள மாந்த்ர மராட கோஸல கொடகு கர்னாட கௌள - ஆகிய அரசர்கள், குந்தள க்ருக பல்லாள கொங்கண சீன கைகய ராள - ஆகிய அரசர்கள் என அனைவரும் மேள தாளங்களுடன் வந்து சேர்ந்தனர் ஸ்ரீராமனின் சிறந்த சபையினை வந்து அடைந்தனர்.

**கேரளாதி[4]ப பா[3]ல்ஹிகனு ஹ**
**ம்மீர சைத்[3]ய குருஷ்வபதி கா[3]ந்**
**தா[4]ர ஸம்ப[3]ள து[1]ளுவ ந்ருப காஶ்மீர ஸௌராஷ்[2]ட்ர**
**ஸௌரஸேன நவ ப்ரசேன ஸு**
**பாரியாத்ர கரூஷ[2]சித[2] வர**
**பூ[4]ரமண ரைதந்த[3]ரதுள மனோனுராக[3]த[3]லி ||112**

கேரளாதிப பால்ஹிகனு - கேரள அரசனான பால்ஹிகன் ; ஹம்மீர சைத்ய குருஷ்வபதி; காந்தார ஸம்பள; துளுவ ந்ருப; காஷ்மீர ஸௌராஷ்டிர ஸூரஸேன; நவ ப்ரசேன; ஸுபாரியாத்ர கரூஷிசித - யாத்திரையில் வந்து, மிகவும் மன மகிழ்ச்சியுடன்; வரபூரமணர ஐதந்தரு - சிறந்தவனான ஸ்ரீராமனை வரவேற்றனர்; அதுள மனோனுராகதலி - அபாரமான அன்புடன்;

கேரள அரசனான பால்ஹிகன், ஹம்மீர சைத்ய குருஷ்வபதி; காந்தார ஸம்பள; துளுவ ந்ருப, காஷ்மீர ஸௌராஷ்டிர ஸூரஸேன, நவ ப்ரசேன ஆகியோர் யாத்திரையாக வந்து, மிகவும் மன மகிழ்ச்சியுடன், சிறந்தவனான ஸ்ரீராமனை அபாரமான அன்புடன் வரவேற்றனர்.

**அகுடிலனெ கேள் பாண்ட$^{3}$வாக்$^{3}$ரஜ**
**முகுரவத$^{3}$னெயருத்ஸவதி$^{3}$ ஜா**
**னகியலங்கரிஸித$^{3}$ரு மால்யாம்ப$^{3}$ரதி$^{3}$ ஸிரிமுடி$^{3}$ய**
**ஸகல வைப$^{4}$வதி$^{3}$ந்தெ$^{3}$ வைமா**
**நிகரு கைவாரிஸலு க$^{3}$க$^{3}$ன**
**ஸகி$^{2}$யர நடு$^{3}$வே ம்ருகா$^{3}$க்ஷி ப$^{3}$ந்த$^{3}$ளு ந்ருபன க$^{3}$த்$^{3}$து$^{3}$கெ$^{3}$கெ$^{3}$ ||113**

அகுடிலனெ கேள் - நற்புத்தி கொண்டவனே, கேள்; பாண்டவாக்ரஜ - ஹே தர்மராஜனே; முகுர வதனெயரு - மலர்ந்த முகம் கொண்டவர்கள்; உத்ஸவதி - ஊர்வலமாக; ஜானகிய மால்யம்பரதி அலங்கரிஸிதரு - ஸ்ரீஸீதாதேவியை மாலை, அணிகலன்களால் அலங்கரித்தனர்; ஸிடிமுடிய - கிரீடத்தினை; ஸகல வைபவதிந்தெ - சிறந்த அலங்காரங்களால் அணிவித்தனர்; வைமானிகரு கைவாரிஸலு - தேவதைகள் புடைசூழ; ககன ஸகியர நடுவெ - அத்தகைய தேவ பெண்களின் நடுவே; ம்ருகாக்ஷி - புன்னகை கூடிய கண்களைக் கொண்டவள்; பந்தளு ந்ருபன கத்துகெகெ - ஸ்ரீராமனின் சிம்மாசனத்தின் அருகே வந்தாள்.

நற்புத்தி கொண்டவனே, கேள். ஹே தர்மராஜனே, மலர்ந்த முகம் கொண்டவர்கள், ஊர்வலமாக, ஸ்ரீஸீதாதேவியை மாலை, அணிகலன்களால் அலங்கரித்தனர். கிரீடத்தினை, சிறந்த அலங்காரங்களால் அணிவித்தனர். தேவதைகள் புடைசூழ, அத்தகைய தேவ பெண்களின் நடுவே, புன்னகை கூடிய கண்களைக் கொண்டவள், ஸ்ரீராமனின் சிம்மாசனத்தின் அருகே வந்தாள்.

**ப4ரத பா4ரிய ஸத்திகெ3ய சா**
**மரவ லக்ஷ்மண தே3வ சிம்மலு**
**த4ரிஸித3னு ஶத்ருக்4ன கி3ண்டி3ய ஹெக3ல ஹட3பத3லி**
**மருதஸூத ஸேவிஸலு சரணதி3**
**கு3ரு வஸிஷ்ட2ன ஸம்முக2தி3 ரகு4**
**வரனு நிஜஸதி ஸஹித ஸிம்ஹாஸனதி3 ரஞ்சிஸித3 ||114**

பாரிய ஸத்திகெய - மிகப்பெரிய வெண்குடையை; பரத - பரதன் பிடித்திருக்க; சாமரவ - சாமரத்தினை; லக்ஷ்மண தேவ சிம்மலு - லட்சுமணன் வீசிக் கொண்டிருக்க; ஷத்ருக்ன - ஷத்ருக்னன்; கிண்டிய ஹெகல ஹடபதலி தரிஸிதனு - ஒரு சிறிய பாத்திரத்தினை (உபசாரத்திற்காக) பிடித்தவாறு அருகில் நின்றிருந்தான்; மருதஸூத சரணதி ஸேவிஸலு - ஹனுமந்ததேவர் ஶ்ரீராமனின் பாதங்களில் அமர்ந்து வணங்கிக் கொண்டிருக்க; குரு வஸிஷ்டன ஸம்முகதி - எதிரில் வஸிஷ்டர் அமர்ந்திருக்க; ரகுவரனு நிஜஸதி ஸஹித - ஶ்ரீராமன், தன்னுடைய நியதபத்னி சமேதனாக; ஸிம்ஹாஸனதி ரஞ்சிஸித - சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தான்.

மிகப்பெரிய வெண்குடையை பரதன் பிடித்திருக்க, சாமரத்தினை லட்சுமணன் வீசிக் கொண்டிருக்க; ஷத்ருக்னன் ஒரு சிறிய பாத்திரத்தினை (உபசாரத்திற்காக) பிடித்தவாறு அருகில் நின்றிருந்தான். ஹனுமந்ததேவர் ஶ்ரீராமனின் பாதங்களில் அமர்ந்து வணங்கிக் கொண்டிருக்க, எதிரில் வஸிஷ்டர் அமர்ந்திருக்க, ஶ்ரீராமன், தன்னுடைய நியதபத்னி சமேதனாக, சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தான்.

**வர விபீ4ஷ2ண ஜாம்பவந்தரு**
**தரணிஸுத நள நீலனங்க3த3**
**ஶரப4 ஶதப3லி க3வய வீரவாக்ஷ மொத3லாத3**
**து4ரவிஜய ரெட3வங்க3த3லி நிந்**
**தி3ரலு ப3லத3லி ஸித்3த4 வித்4யா**
**த4ரரு நெரெத3ரனேக வித்3வாம்ஸரு கவீஸ்வரரு ||115**

வர விபீஷண ஜாம்பவந்தரு தரணிஸுத நள நீலனு அங்கத ஷரப ஷதபலி கவய வீரகவாக்ஷ மொதலாத - இந்த அனைத்து; துரவிஜயரு - வீரர்களும்; எடவங்கதலி நிந்திரலு - ஶ்ரீராமனின் இடது பக்கத்தில் நின்றிருக்க; பலதலி - வலது புறத்தில்; ஸித்த வித்யாதரரு நெரெதரு - ஸித்த வித்யாதரர்கள் இருந்தனர்;

அனேக வித்வாம்ஸரு கவீஷ்வரரு - பல அறிஞர்கள், கவிஞர்களும் இருந்தனர்.

விபீஷண ஜாம்பவந்தரு சுக்ரீவன் நள நீலனு அங்கத ஷரப ஷதபலி கவய வீரகவாக்ஷ இந்த அனைத்து வீரர்களும், ஸ்ரீராமனின் இடது பக்கத்தில் நின்றிருக்க, வலது புறத்தில், ஸித்த வித்யாதரர்கள் இருந்தனர். பல அறிஞர்கள், கவிஞர்களும் அங்கு இருந்தனர்.

**மேலு மணிக$^{3}$ள ரத்னகாந்திய**
**மௌளிக$^{3}$ள மன்னியரு மந்த்ரி**
**ஜால ஸஹிதிதி$^{3}$ரினலி நிந்து$^{3}$து$^{3}$ மகுட$^{1}$வர்த்த$^{4}$னரு**
**ஓலக$^{3}$தி$^{3}$ மிகெ$^{3}$ வாரஸதியரு**
**ஓலகி$^{3}$ஸெ ரகு$^{4}$ ந்ருபனனாக$^{3}$ளெ**
**தாளெ மத்$^{3}$த$^{3}$ளெ பே$^{4}$ரி டெ$^{3}$ங்க நினாத$^{3}$ ரஞ்சிஸிது$^{1}$ ||116**

மேலு மணிகள - அற்புதமான மணிகளின்; ரத்னகாந்திய மௌளிகள மன்னெயரு - ஓளிர்வதான கிரீடங்களைக் கொண்ட அரசர்கள்; மந்த்ரி ஜால ஸஹித - தங்களின் மந்திரிகளுடன்; எதிரினலி நிந்துது - எதிரில் நின்றனர்; மகுடவர்த்தனரு ஓலகதி மிகெ - இத்தகைய அரசர்கள் அரசவையில் நிறைந்திருக்க; வாரஸதியரு ஓலகிஸெ - பல விதமான பெண்களும் அங்கு நிறைந்திருக்க; ரகு ந்ருபனனாகளெ - ஸ்ரீராமனை சுற்றிலும்; தாளெ மத்தளெ பேரி டெங்க - தாளம், மத்தளம், பேரி, முரசு; நினாத ரஞ்சிஸிது - ஆகிய வாத்தியங்களின் ஒலி அனைத்து இடங்களிலும் பரவியது.

அற்புதமான மணிகளின், ஓளிர்வதான கிரீடங்களைக் கொண்ட அரசர்கள், தங்களின் மந்திரிகளுடன், எதிரில் நின்றனர். இத்தகைய அரசர்கள் அரசவையில் நிறைந்திருக்க, பல விதமான பெண்களும் அங்கு நிறைந்திருக்க, ஸ்ரீராமனை சுற்றிலும், தாளம், மத்தளம், பேரி, முரசு, ஆகிய வாத்தியங்களின் ஒலி அனைத்து இடங்களிலும் பரவியது.

**அல்லி நெரெத$^{3}$ முனீஶரெல்லரு**
**ப$^{3}$ல்ல பூ$^{4}$ஸுரனிவஹ மந்த்ரிக$^{3}$**
**ளல்லி ஸுமுஹூர்த்தத$^{3}$லி பட்டவ கட்டித$^{3}$ரு ந்ருபகெ$^{3}$**
**ஸல்லலித$^{1}$ ஸத்கீர்த்திவது$^{4}$ பர**
**னல்லி நில்லதெ$^{3}$ ப$^{3}$ந்து$^{3}$ ஸீதா**

**வல்லப4ன பொந்தி3த3ளு குந்தீஸூனு கேளெந்த3 ||117**

அல்லி நெரெத முனீஷ்வரரெல்லரு - அங்கு நிறைந்திருந்த முனிவர்கள் அனைவரும்; பல்ல பூஸுர நிவஹ மந்த்ரிகளல்லி - அனைத்தையும் அறிந்த, நகரத்தை காப்பவர்களான மந்திரிகள்; ஸுமுஹூர்த்ததலி - அந்த நல்ல முஹூர்த்தத்தில்; பட்டவ கட்டிதரு ந்ருபகெ - ஶ்ரீராமனுக்கு பட்டாபிஷேகம் செய்தனர்; ஸல்லிலத - அழகானவளான; ஸத்கீர்த்திவது - நற்புகழைப் பெற்றவளான வது (ஶ்ரீஸீதாதேவி); ; பரனல்லி நில்லதெ பந்து - தூரமாக நிற்காமல் வந்து; ஸீதாவல்லபன பொந்திதளு - ஶ்ரீராமனை அடைந்தாள்; குந்துஸூனு கேளெந்த - ஹே தர்மராஜனே, இதனைக் கேள், என்றார் முனிவர்.

அங்கு நிறைந்திருந்த முனிவர்கள், அனைத்தையும் அறிந்த, நகரத்தை காப்பவர்களான மந்திரிகள், ஆகியோர், அந்த நல்ல முஹூர்த்தத்தில், ஶ்ரீராமனுக்கு பட்டாபிஷேகம் செய்தனர். அழகானவளான, நற்புகழைப் பெற்றவளான வது (ஶ்ரீஸீதாதேவி), தூரமாக நிற்காமல் வந்து ஶ்ரீராமனை அடைந்தாள். ஹே தர்மராஜனே, இதனைக் கேள், என்றார் முனிவர்.

**கு3ரு வஸிஷ்2ட முனீந்த்3ர பூ4மி**
**ஸுரரொட3னெ தா ப3ந்து3 ராமன**
**ஹரஸி மந்த்ராக்ஷதெய தளெத3ரு தே3வனங்க3த3லி**
**ஸுரரு து3ந்து3பி4 மொளகெ3 ஹூவின**
**ஸரிய ஸுரித3ரு நிர்ஜரரு த4ரெ**
**யரஸுக3ளு கைமுகி3து3 முயிக3ளனித்தரவனிபகெ3 ||118**

குரு வஸிஷ்ட முனீந்த்ர - குருவான வஸிஷ்ட முனிவர்; பூமிஸுரரொடனே தா பந்து - பல மற்ற அரசர்கள் / முனிவர்களுடன் தான் வந்து; ராமன ஹரஸி - ராமனை போற்றியவாறு; மந்த்ராக்ஷதெய - மந்திரட்சதையை; தேவன அங்கதலி தளெதரு - ஶ்ரீராமனின் தலையில் / அங்கங்களில் தூவினர்; ஸுரரு - தேவர்கள்; துந்துபி மொளகெ - துந்துபிகளை முழங்கினர்; ஹூவின ஸரிய ஸுரிதரு - பூமழை பொழிந்தனர்; நிர்ஜரரு - தேவர்கள்; தரெயரஸுகளு - பூமியின் அரசர்கள்; கைமுகிது - கைகளை குவித்தவாறு; முயிகளன இத்தரு அவனிபகெ - ஶ்ரீராமனுக்கு தங்களின் பரிசுகளை கொடுத்தனர்.

குருவான வஸிஷ்ட முனிவர், பல மற்ற அரசர்கள் / முனிவர்களுடன் தான் வந்து, ராமனை போற்றியவாறு,

மந்திரட்சதையை ஸ்ரீராமனின் தலையில் / அங்கங்களில் தூவினர். தேவர்கள் துந்துபிகளை முழங்கினர். பூமழை பொழிந்தனர். தேவர்கள், பூமியின் அரசர்கள், கைகளை குவித்தவாறு, ஸ்ரீராமனுக்கு தங்களின் பரிசுகளை கொடுத்தனர்.

**முனிஸதியரொட$^{3}$னைதி$^{3}$ பூ$^{4}$ஸுர**
**வனிதெயரு ஶோப$^{4}$னத$^{3}$ த$^{4}$வளவ**
**வினயத$^{3}$லி பாடி$^{3}$த$^{3}$ரு ஜயஜய ரவ நினாத$^{3}$த$^{3}$லி**
**கனக ரத்னத$^{3}$ நூபுரத$^{3}$ கா**
**மினியரொய்யாரத$^{3}$லி ரகு$^{4}$னந்**
**த$^{3}$னன ஹரஸுதலெத்தித$^{3}$ரு நவரத்னதா$^{3}$ரதிய ||119**

முனிஸதியர ஒடனெய்தி - முனிவர்களின் மனைவியருடன் சேர்ந்து; பூஸுர வனிதெயரு - அரசர்களின் மனைவியர்கள்; ஷோபனவ தவளவ வினயதலி பாடிதரு - மங்கள பாடல்களை பக்தியுடன் பாடினர்; ஜயஜய ரவ நிவாததலி - ஜயஜய என்னும் கோஷத்துடன் (பாடினர்); கனக ரத்னத நூபுரத - கனக ரத்னங்கள் நிறைந்த கொலுசினை அணிந்த; காமினியரு ஒய்யாரதலி - பெண்கள் மிகவும் அழகாக; ரகு நந்தனன ஹரஸுத - ஸ்ரீராமனை நெருங்கி; எத்திதரு நவரத்னத ஆரதிய - நவரத்ன ஆரதியை எடுத்தனர்.

முனிவர்களின் மனைவியருடன் சேர்ந்து, அரசர்களின் மனைவியர்கள், மங்கள பாடல்களை பக்தியுடன் பாடினர். ஜயஜய என்னும் கோஷத்துடன் (பாடினர்). கனக ரத்னங்கள் நிறைந்த கொலுசினை அணிந்த பெண்கள், மிகவும் அழகாக, ஸ்ரீராமனை நெருங்கி, நவரத்ன ஆரதியை எடுத்தனர்.

**ஆரு ஹொக$^{3}$ளுவட$^{3}$ரிது$^{3}$ ஸபெ$^{4}$யலி**
**ஸார ஸங்கீ$^{3}$தத$^{3}$ வினோத$^{3}$தி$^{3}$**
**வாரகாந்தாஜனத லொப்புவ கேளமேளவத$^{3}$**
**சாரு கீ$^{3}$த ந்ருத்யக$^{3}$ள ஸேவா**
**கா$^{3}$ரிகெயனேனெம்பெ$^{3}$னை ஜம்**
**பா$^{4}$ரியோலக$^{3}$த$^{3}$ந்தெ மெரெது$^{3}$து$^{3}$ ந்ருபதியாஸ்தா$^{2}$ன ||120**

ஆரு ஹொகளுவடரிது - யாரை நான் புகழ்வது? (அனைத்துமே அருமை); ஸபெயலி - அந்த சபையில்; ஸார ஸங்கீதத வினோததி - அழகான சங்கீதத்தின் மூலமாக; வாரகாந்தா ஜனதலொப்புவ - அப்ஸரஸ் போன்ற அழகான பெண்களின்; கேளமேளவத -

ஆட்டம் பாட்டங்கள் நிறைந்த; சாரு கீத ந்ருத்யகள ஸேவா - இனிமையான கீதம், நாட்டியங்களின் சேவை; காரிகெயனு ஏனெம்பெனை - நிகழ்ச்சிகளின் சிறப்பினை நான் என்னவென்று சொல்வது?; ந்ருபதிய ஆஸ்தான - ஸ்ரீராமனின் அரசவையானது; ஜம்பாரி யொலகதந்தெ மெரெதுது - இந்திர சபை போல திகழ்ந்தது;

யாரை நான் புகழ்வது?. (அனைத்துமே அருமை). அந்த சபையில், அழகான சங்கீதத்தின் மூலமாக, அப்ஸரஸ் போன்ற அழகான பெண்களின் ஆட்டம் பாட்டங்கள் நிறைந்த, இனிமையான கீதம், நாட்டியங்களின் சேவை போன்ற நிகழ்ச்சிகளின் சிறப்பினை நான் என்னவென்று சொல்வது?. ஸ்ரீராமனின் அரசவையானது இந்திர சபை போல திகழ்ந்தது.

**கரெது[3] யாசக பண்டி[3]த பூ[4]**
**ஸுரர கா[3]யக மல்லரனு கவி**
**வரரிகி[3]த்தனு தே[4]னு கனகாம்ப[3]ர ஸுவஸ்துக[3]ள**
**அரஸுக[3]ளிகா[3]த[3]ரிஸி கொட்டனு**
**கரிதுரக[3] ரத[2] தி[3]வ்ய ஹேமாம்**
**ப[3]ர ஸுவஸ்துக[3]ளிந்த[3] களுஹித[3]னா வஸிஷ்[2]டமுனி ||121**

யாசக பண்டித பூஸுரர காயக மல்லரனு கவவரரிகெ - யாசகம் வேண்டியவர்களை, பண்டிதர்களை, பிராமணர்களை, பாடகர்களை, மல்யுத்த வீரர்களை, கவிஞர்களை; கரெது - அழைத்து; தேனு - பசு; கனகாம்பர - தங்கப் பட்டாடைகள்; ஸுவஸ்துகள - போன்ற சிறந்த பொருட்களை; இத்தனு - கொடுத்தான்; அரஸுகளிகெ ஆதரிஸி கொட்டனு - அரசர்களுக்கு மரியாதை செலுத்தி கொடுத்தான்; கரி துரக ரத திவ்ய ஹேம்பாம்பர - யானை, குதிரை, ரதம், திவ்யமான பட்டாடைகள்; ஸுவஸ்துகளிந்த - இவ்வளவையும் கொடுத்து; களுஹிதனு - வழியனுப்பினான்; வஸிஷ்டமுனி - அந்த வஸிஷ்டர் (அடுத்த பத்யத்தில் தொடர்கிறது).

யாசகம் வேண்டியவர்களை, பண்டிதர்களை, பிராமணர்களை, பாடகர்களை, மல்யுத்த வீரர்களை, கவிஞர்களை என அனைவரையும் அழைத்து, பசு, தங்கப் பட்டாடைகள் போன்ற சிறந்த பொருட்களை கொடுத்தான். அரசர்களுக்கு மரியாதை செலுத்தி, யானை, குதிரை, ரதம், திவ்யமான பட்டாடைகள் என இவ்வளவையும் கொடுத்து, வழியனுப்பினான். அந்த வஸிஷ்டர் (அடுத்த பத்யத்தில் தொடர்கிறது)

**கொட்ட ஸுமுஹூர்த்ததொ3ளகா3க3 வ**
**ஸிஷ்2ட கு3ருவிங்கெ3ரகி3 ரகு4வர**
**நெட்டனைதந்த3ல்லி ஹொக்கனு ராஜமந்தி3ரவ**
**ஸ்ருஷ்2டிக3தி4பன கீர்த்திவது4 க4ன**
**நிஷ்டெ2யலி தா4வள்ய வஸனவ**
**நுட்டு நலிதாடி3த3ளு த்ரிஜக3த3 ஜனத3 ஜிஹ்வெயலி ||122**

கொட்ட ஸுமுஹூர்த்ததொளகெ - வஸிஷ்டர் குறித்துக் கொடுத்த நல் முஹூர்த்தத்தில்; வஸிஷ்ட குருவிங்கெ எரகி - வஸிஷ்டருக்கு வணங்கிவிட்டு; ரகுவரனு - ஸ்ரீராமன்; நெட்டனைதந்தல்லி ஹொக்கனு - பிறகு அவரிடமிருந்து அனுமதி பெற்றுக் கொண்டு புறப்பட்டு, போய் சேர்ந்தான்; ராஜமந்திரவ - ராஜமந்திரத்தை சென்று சேர்ந்தான். ஸ்ருஷ்டிகதிபன கீர்த்திவது - ஸ்ருஷ்டிகாரனின் மனைவியான (ஸ்ரீஸீதாதேவி); கன நிஷ்டெயலி - மிகவும் கவனத்துடன்; தாவள்ய வஸனவ உட்டு - தாவளி ஆடையை உடுத்திக் கொண்டு; த்ரிஜகத ஜனத ஜிஹ்வெயலி - அனைத்து உலகங்களின் அனைவரின் நாக்குகளிலும்; நலிதாடிதளு - நடனம் ஆடினாள் (அனைவராலும் வணங்கப்பட்டாள்).

வஸிஷ்டர் குறித்துக் கொடுத்த நல் முஹூர்த்தத்தில், வஸிஷ்டருக்கு வணங்கிவிட்டு, ஸ்ரீராமன், பிறகு அவரிடமிருந்து அனுமதி பெற்றுக் கொண்டு புறப்பட்டு ராஜமந்திரத்தை சென்று சேர்ந்தான். ஸ்ருஷ்டிகாரனின் மனைவியான (ஸ்ரீஸீதாதேவி), மிகவும் கவனத்துடன், தாவளி ஆடையை உடுத்திக் கொண்டு, அனைத்து உலகங்களின் அனைவரின் நாக்குகளிலும், நடனம் ஆடினாள். (அனைவராலும் வணங்கப்பட்டாள்).

**அரஸ கேள்மருதி3வஸத3லி ரகு4**
**வரனு தன்மோலக3கெ ந்ருபரனு**
**கரெஸித3னு நிஜமந்த்ரி பா3ந்த4வஜால வர்க்க3வனு**
**தரணிஸுத ஜாம்ப3வ விபீ4ஷண**
**ரிரதெ3 ப3ந்த3ரு கைமுகி3து3 கு**
**ள்ளிரலு பரிதோஷ2த3லி நுடி3த3னு ராம நஸு நகு3த ||123**

அரஸ கேளு - ஹே தர்மராஜனே, கேள். மருதிவஸதலி - அடுத்த நாள்; ரகுவரனு - ஸ்ரீராமன்; ந்ருபரனு தன்னோலககெ கரெஸிதனு - தன்னுடைய அரவசைக்கு அனைத்து அரசர்களையும்

அழைத்தான்; நிஜமந்த்ரி பாந்தவஜால வர்க்கவனு - மந்திரிகளை, உற்றார் உறவினர்களை; தரணிஸுத ஜாம்பவ விபீஷணரு - சுக்ரீவ, ஜாம்பவ, விபீஷணர்கள்; இரதெ பந்தரு - உடனடியாக அங்கு வந்தனர்; கைமுகிது குள்ளிரலு - கை குவித்தவாறு அமர்ந்திருக்க; பரிதோஷதலி - மகிழ்ச்சியுடன்; ராம நஸுநகுத நுடிதனு - ஸ்ரீராமன் புன்னகைத்தவாறு இவ்வாறு கேட்டான்.

ஹே தர்மராஜனே, கேள். அடுத்த நாள், ஸ்ரீராமன், தன்னுடைய அரவசைக்கு அனைத்து அரசர்களையும் அழைத்தான். மந்திரிகளை, உற்றார் உறவினர்களை, சுக்ரீவ, ஜாம்பவ, விபீஷணர்கள் ஆகியோர் உடனடியாக அங்கு வந்து. கை குவித்தவாறு அமர்ந்திருக்க, மகிழ்ச்சியுடன், ஸ்ரீராமன் புன்னகைத்தவாறு இவ்வாறு கேட்டான்.

**கேளு லக்ஷ்மண கேளு ஜாம்ப$^3$வ**
**கேளு நள நீலாதி$^3$ ஸுப$^4$டரெ**
**கேளிரை நரெத$^3$லெக$^3$ வ்ரிஹியரு ஸெரெயொளிர்த$^3$வர**
**கால ஸவெது$^3$து$^3$ தி$^3$வஸவிந்தி$^3$கெ$^3$**
**ஏளு திங்க$^3$ளு களெத$^3$வவதி$^3$ர**
**பாலிஸலு பே$^3$க$^1$னிலஸுத நீ கரெது$^3$ தாரெந்த$^3$ ||124**

கேளு லக்ஷ்மண - ஹே லட்சுமணனே கேள்; கேளு ஜாம்பவ - ஹே ஜாம்பவந்தனே கேள்; கேளு நள நீலாதி ஸுபடரே - நள, நீல முதலான அனைவரும் இதனை கேளுங்கள்; நரெதலெக வ்ரிஹியரு - ராகி மற்றும் அரிசி இருவரும்; ஸெரெயொளிர்து - சிறையில் அடைப்பட்டு; அவர கால ஸதெதுது - அவருடைய காலம் முடிந்தது; திவஸவிந்திகெ - இன்றோடு; ஏளு திங்களு களெதவு - ஏழு மாதங்கள் ஆகிவிட்டது; அவதிர பாலிஸலு பேகு - அவர்களை நாம் காக்கவேண்டும்; அனிலஸுத நீ கரெது தாரெந்த - ஹே வாயுபுத்திரனே, நீ சென்று அவர்களை அழைத்து வா - என்றான்.

ஹே லட்சுமணனே கேள், ஹே ஜாம்பவந்தனே கேள், நள, நீல முதலான அனைவரும் இதனை கேளுங்கள், ராகி மற்றும் அரிசி இருவரும் சிறையில் அடைப்பட்டு, அவருடைய காலம் இன்றோடு, ஏழு மாதங்கள் ஆகிவிட்டது. அவர்களை நாம் காக்கவேண்டும். ஹே வாயுபுத்திரனே, நீ சென்று அவர்களை அழைத்து வா என்றான்.

**ஹை ஹஸாத[3]வெனுத்த வந்தி[3]ஸெ**
**பா[3]ஹுப[3]லத[3]க்[3]க[3]ளிகெ[3] மிகெ[3] நி**
**ர்வாஹத[3]லி ஹொரவண்டனதி வேக[3]த[3]லி பத[2]விடி[3]து[3]**
**ஸாஹஸ வனேனெம்பெ[3] வஜ்ரத[3]**
**தே[3]ஹனல்லா ஹனும தன்ன ம**
**நோஹரத[3] ரிஷிக[3]ளனு கண்ட[3]னு பஞ்சனந்தி[3]யலி ||125**

ஹை ஹஸாதவெனுத்த - ஸ்வாமி, உங்களின் அருள் என்றவாறு; வந்திஸெ - ஶ்ரீராமனை வணங்கி; பாஹுபலதக்களிகெ மிகெ - தன்னுடைய அபாரமான தோள் வலிமையால்; நிர்வாஹதலி ஹொரவண்டனு - ஸ்வாமியின் ஆணையை முடிக்க புறப்பட்டான்; அதி வேகதலி பதவிடிது - தன்னுடைய வழியை நோக்கி அதி வேகமாக புறப்பட்டான்; ஸாஹஸவனேனெம்பெ - இவனுடைய திறமையைப் பற்றி நான் என்னவென்று சொல்லட்டும்? (ஷாண்டில்ய முனிவர் - தர்மராஜனிடம்); ஹனும தன்ன மனோஹரத - இந்த ஹனுமனுடைய தேகம், அழகானதும்; வஜ்ரத தேஹனல்லா - வஜ்ரம் போன்ற தேகம் கொண்டவன் ஆயிற்றே; ரிஷிகளனு கண்டனு பஞ்சநந்தியலி - பஞ்சநந்தி க்ஷேத்திரத்தில் ரிஷிகளைக் கண்டான்.

ஸ்வாமி, உங்களின் அருள் என்றவாறு, ஹனுமந்த தேவர், ஶ்ரீராமனை வணங்கி, தன்னுடைய அபாரமான தோள் வலிமையால், ஸ்வாமியின் ஆணையை முடிக்க புறப்பட்டான். தன்னுடைய வழியை நோக்கி அதி வேகமாக புறப்பட்டான். இவனுடைய திறமையைப் பற்றி நான் என்னவென்று சொல்லட்டும்? (ஷாண்டில்ய முனிவர் - தர்மராஜனிடம்). இந்த ஹனுமனுடைய தேகம், அழகானதும், வஜ்ரம் போன்றதும் ஆயிற்றே?. பின், ஹனுமந்ததேவர், பஞ்சநந்தி க்ஷேத்திரத்தில் ரிஷிகளைக் கண்டான்.

**அவர பாதா[3]ம்பு[3]ஜகெ வந்தி[3]ஸி**
**பவனஸுத பி[3]ன்னயிஸித[3]னு ரா**
**க[4]வ ந்ருபாலனு களுஹெ ப[3]ந்தெ[3]னு நிம்ம த[3]ருஷனகெ**
**அவதி[4] ஸவெது[3]து[3] ஸெரெமனெயொளி**
**ர் த[3]வரனொட[3]கொ[3]ண்டீ[3]க்ஷணவெ நீ**
**வவனிபன ஸம்முக[2]கெ சித்தயிஸெந்து[3] கைமுகி[3]த[3] ||126**

அவர பாதாம்புஜக்கெ வந்திஸி - அந்த ரிஷிகளின் கால்களில் விழுந்து வணங்கி; பவனஸுத பின்னயிஸிதனு - ஹனுமந்தன் இவ்வாறு வேண்டிக் கொண்டான்; ராகவ ந்ருபாலனு களுஹெ பந்தெனு - ஸ்ரீராமன் அனுப்பியவாறே நான் இங்கு வந்திருக்கிறேன்; நிம்ம தருஷனகெ அவதி ஸவெதுது - உங்களின் தரிசனத்திற்கு இப்போது காலம் கனிந்திருக்கிறது; ஸெரெமனெயொளிர்தவர - இங்கு சிறையில் இருப்பவர்களை; ஒடகொண்டு ஈக்ஷணவெ - அழைத்துக்கொண்டு உடனடியாக; நீவு அவனிப ஸம்யுகக்கெ - நீங்கள் உடனடியாக ஸ்ரீராமனின் தரிசனத்திற்கு; சித்தயிஸெந்து கைமுகித - வரவேண்டும் என்று வேண்டிக் கொண்டார்.

அந்த ரிஷிகளின் கால்களில் விழுந்து வணங்கி, ஹனுமந்தன் இவ்வாறு வேண்டிக் கொண்டான். ஸ்ரீராமன் அனுப்பியவாறே நான் இங்கு வந்திருக்கிறேன். உங்களின் தரிசனத்திற்கு இப்போது காலம் கனிந்திருக்கிறது. இங்கு சிறையில் இருப்பவர்களை, அழைத்துக்கொண்டு உடனடியாக, நீங்கள் ஸ்ரீராமனின் தரிசனத்திற்கு வரவேண்டும் என்று வேண்டிக் கொண்டார்.

**ஹனுமனாடி3த3 நுடி3கெ3 கௌ3தம**
**முனிப நஸு நகு3தெத்3து3 ப3னத3லி**
**க4ன தபோப3ல மஹிமரனு கரஸித3னதுள வேக3த3லி**
**மனதி3 ஹருஷி2தனாகி3 முனி ஸெரெ**
**மனெய ப்ரதிவாதி3க3ளனொட கொண்**
**ட3னுபமித கு3ண நிலய முனி ஹொரவண்ட நாஶ்ரமவ ||127**

ஹனுமனாடித நுடிகெ - இவ்வாறு ஹனுமந்ததேவர் கூறுகையில்; கௌதம முனிப - கௌதம முனிவரானவர்; நஸுநகுத எத்து - புன்னகைத்தவாறே எழுந்து; பனதலி - அந்த வனத்தில்; கனதபோபல மஹிமரனு - அபாரமான தவசக்தியைக் கொண்டுக்கும் மகாமகிமர்களை; கரஸிதனு அதுள வேகதலி - வேகமாக அழைத்தார்; மனதி ஹருஷிதனாகி - மனதில் மிகவும் மகிழ்ச்சி கொண்டவாறு; முனி ஸெரெமனெய - அந்த முனிவரானவர், சிறைச்சாலையில் இருந்த; ப்ரதிவாதிகளனொடகொண்டு - அரிசி, ராகி இருவரையும் அழைத்துக்கொண்டு; அனுபமித குணிநிலய முனி; அபாரமான நற்குணங்களைக் கொண்டவரான அந்த முனிவர்; ஹொரவண்டனு ஆஷ்ரமவ - ஆசிரமத்தை விட்டு புறப்பட்டார்.

இவ்வாறு ஹனுமந்ததேவர் கூறுகையில், கௌதம முனிவரானவர் புன்னகைத்தவாறே எழுந்து, அந்த வனத்தில் அபாரமான தவசக்தியைக் கொண்டுக்கும் மகாமகிமர்களை வேகமாக அழைத்தார். மனதில் மிகவும் மகிழ்ச்சி கொண்டவாறு, அந்த முனிவரானவர், சிறைச்சாலையில் இருந்த அரிசி, ராகி இருவரையும் அழைத்துக்கொண்டு, அபாரமான நற்குணங்களைக் கொண்டவரான அந்த முனிவர், ஆசிரமத்தை விட்டு புறப்பட்டார்.

**ப$^3$ந்த$^3$னதி$^3$ ஹருஷ$^2$த$^3$லி முனிகுல**
**வ்ருந்த$^3$ தொ$^3$ட$^3$னைத$^1$ரலு ரகு$^4$குல**
**நந்து$^3$ பி$^3$ஜயங்கெ$^3$யிஸெ தந்த$^3$னு ராஜமந்தி$^3$ரகெ**
**ப$^3$ந்த$^3$ரே ப்ரதிவாதி$^3$க$^3$ளு கர**
**தந்தி$^3$ரெ நீவெனுத முனிகுல**
**வ்ருந்த$^3$வனு ஸத்கரிஸி குள்ளிரிஸித$^3$னு கௌ$^3$தமன ||128**

அதி ஹருஷதலி பந்தனு - மிகவும் மகிழ்ச்சியுடன் வந்தார்; முனிகுல வ்ருந்ததொடனெ - தம்முடைய முனிவர் குழுவுடன்; ஐதரலு - அந்த அரிசி, ராகியை கொண்டு வருவதற்கு; ரகுகுலனு அந்து பிஜயங்கயிஸெ - ஸ்ரீராமன், அன்று விட்டுவிட்டுச் சென்றதை; தந்தனு - கொண்டு வந்தார்; ராஜமந்திரகெ - ஸ்ரீராமனின் அரசவைக்கு; பந்தரே ப்ரதிவாதிகள் - ப்ரதிவாதிகள் வந்தார்களா?; கரதந்திரீ நீவெனுத - உங்கள் கையோடு கொண்டு வந்துவிட்டீர்கள் என்றவாறு; முனிகுல வ்ருந்தவனு ஸத்கரிஸி - முனிவர் குழுவினரை மரியாதை செய்து; குள்ளிரிஸிதனு கௌதமன - கௌதம ரிஷிகளை அமர வைத்தான் ஸ்ரீராமன்.

தம்முடைய முனிவர் குழுவுடன், அந்த அரிசி, ராகியை கொண்டு வருவதற்கு மிகவும் மகிழ்ச்சியுடன் வந்தார். ஸ்ரீராமன், அன்று விட்டுவிட்டுச் சென்றதை, கொண்டு வந்தார் ஸ்ரீராமனின் அரசவைக்கு. 'ப்ரதிவாதிகள் வந்தார்களா?. உங்கள் கையோடு கொண்டு வந்துவிட்டீர்கள்' என்றவாறு, முனிவர் குழுவினரை மரியாதை செய்து, கௌதம ரிஷிகளை அமர வைத்தான் ஸ்ரீராமன்.

**இவர வ்யவஹாரவனு பரிஹரி**
**ஸுவ விசாரவ மாடி$^3$ மனத$^3$லி**
**ரவிகுலான்வய ராம நெனெத$^3$னு ஹ்ருத$^3$ய ஷுத்$^3$தி$^4$யலி**
**ஶிவன த்$^4$யானி ஸலாக்ஷணவெ த்ரை**

**பு4வனகர்தரு இந்த்3ர மொத3லா**
**த3வரு ப3ந்த3ரயோத்4ய புரதா4மனொலக3கெ ||129**

இவர வ்யவஹாரவனு - இந்த அரிசி, ராகியின் பிரச்னையை; பரிஹரிஸுவ விசாரவ மனதலி மாடி - எப்படி தீர்ப்பது என்று மனதில் சிந்தித்து; ரவிகுலான்வய ராம - சூரிய குலத்தில் உதித்த ஸ்ரீராமன்; நெனெதனு - நினைத்தான்; ஹ்ருதய ஷுத்தியலி - தூய்மையான மனதுடன்; ஷிவய த்யானிஸலு - ருத்ரரை நினைக்க; ஆ க்ஷணவெ த்ரைபுவனகர்தரு - அந்த நொடியே, தேவர்கள்; இந்த்ர மொதலாதவரு - இந்திரன் முதலானவர்கள்; அயோத்யபுர தாமன ஓலககெ - அயோத்யா அரசனான ஸ்ரீராமனின் அரசவைக்கு; பந்தரு - வந்தார்கள்.

இந்த அரிசி, ராகியின் பிரச்னையை எப்படி தீர்ப்பது என்று மனதில் சிந்தித்து, சூரிய குலத்தில் உதித்த ஸ்ரீராமன் நினைத்தான். தூய்மையான மனதுடன், ருத்ரரை நினைக்க, அந்த நொடியே, தேவர்கள், இந்திரன் முதலானவர்கள், அயோத்யா அரசனான ஸ்ரீராமனின் அரசவைக்கு; வந்தார்கள்.

**வஸுக3ளமரரு பு4ஜங்கா3மர**
**ரஸுர கின்னர யக்ஷ ராக்ஷஸ**
**ஶஶி ரவிக3ளாதி3த்ய வித்4யாத4ரரு கு3ஹ்யகரு**
**வஸுதெ4யமரரு க்ஷத்ரியரு ஜோ**
**யிஸரு வைஶ்ய சதுர்த்த2ருன்னத**
**குஶல வித்3யாதி4கரு நெரெது3து3 ந்ருபன ஸபெ4யொளகெ3 ||130**

வஸுகளமரரு - அமரர்களான அஷ்ட வஸுக்கள்; புஜங்காமர - ஸேஷதேவர்; அஸுர - அஸுரர்கள்; கின்னர யக்ஷ - கின்னரர்கள், யக்ஷர்கள்; ராக்ஷஸ - ராக்ஷஸர்கள்; ஷஷி ரவிகளாதித்ய - த்வாதஷ ஆதித்யர்கள், சந்திரன்; வித்யாதரரு குஹ்யகரு; வஸுதெயமரரு - தேவர்கள்; க்ஷத்ரியரு ஜோயிஸரு - ஜோதிடர்கள்; வைஷ்ய - வைசியர்கள்; சதுர்த்தருன்னத - நான்காம் வர்ணத்தவர்கள்; குஷல வித்யாதிகரு - நன்கு கற்றறிந்தவர்கள்; நெரெதுது ந்ருபன ஸபெயொளகெ - ஸ்ரீராமனின் சபையில் இவர்கள் அனைவரும் நிறைந்திருந்தார்கள்.

அமரர்களான அஷ்ட வஸுக்கள், ஸேஷதேவர், அஸுரர்கள், கின்னரர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், த்வாதஷ ஆதித்யர்கள்,

சந்திரன், வித்யாதரரு குஹ்யகரு, தேவர்கள், க்ஷத்ரியர்கள், ஜோதிடர்கள், வைசியர்கள், நான்காம் வர்ணத்தவர்கள், நன்கு கற்றறிந்தவர்கள், என ஶ்ரீராமனின் சபையில் இவர்கள் அனைவரும் நிறைந்திருந்தார்கள்.

**இந்தெஸெவனா ஸபெ4யொளகெ3 மதி**
**வந்த நுடி3த3னு தா4ன்யவர்க்க3த3**
**ஸந்ததிய ப3ரஹேளியெனெ ஸெரெமனெயொளிர்த்த3வரு**
**நிந்து கரக3ள முகி3து3 த4ரணி**
**காந்த ரகு4வரனீ ஸுபுத்3தி4ய**
**நெந்து1 நமக3ருஹுவிரியத3 பேளெந்த3 நரெத3லெக3 ||131**

இந்தெஸெவனா ஸபெயொளகெ - இப்படிப்பட்டோர் நிறைந்திருந்த ஸபையில்; மதிவந்த நுடிதனு - ஸர்வக்ஞனான ஶ்ரீராமன் இவ்வாறு கேட்டான்; தான்யவர்க்கத ஸந்ததிய - தான்ய வர்க்கத்தினை; பரஹேளியெனெ - வரச்சொல்லுங்கள் என்றான்; ஸெரெமனெயொளிர்தவரு - சிறைச்சாலையில் இருந்தவர்கள்; நிந்து கரகள முகிது - அவன் எதிரில் வந்து நின்று, கைகளை குவித்து; தரணி காந்த ரகுவரனே - உலக நாயகனான ஶ்ரீராமனே; நீ ஸுபுத்தியனு இந்து - இன்று நீ நல்புத்தியை; நமகெ அருஹுவிரி அத - நமக்கு அருளுங்கள்; பேளெந்த நரெதலெக - அதனை இப்போது அருளுங்கள் என்றான் ராகி.

இப்படிப்பட்டோர் நிறைந்திருந்த ஸபையில், ஸர்வக்ஞனான ஶ்ரீராமன் இவ்வாறு கேட்டான். தான்ய வர்க்கத்தினை இங்கே வரச்சொல்லுங்கள் என்றான். சிறைச்சாலையில் இருந்தவர்கள், அவன் எதிரில் வந்து நின்று, கைகளைக் குவித்து, உலக நாயகனான ஶ்ரீராமனே, இன்று நீ நல்புத்தியை நமக்கு அருளுங்கள் என்றான் ராகி.

**எனலு ராம ந்ருபால நோடி3த3**
**க4ன தபோமஹிமரிகெ3 நுடி3த3னு**
**மனவ வஞ்சிஸலாக3தீ3 த4ர்மவனு நெரெ திளிது3**
**அனுனயதி3 பேளெனெ முனீந்த்3ரரு**
**அனிமிஷ2ர நீக்ஷிஸித3ரல்லிய**
**க4ன மஹாஸபெ4யொளகெ3 பா4ர்க்க3வ ராமனிந்தெந்த3 ||132**

எனலு - இவ்வாறாக ராகி சொல்லி முடிக்க; ராம ந்ருபால நோடித - ஸ்ரீராமன் பார்த்தார்; கன தபோமஹிமரிகெ நுடிதனு - சிறந்த தவவலிமை பெற்றிருந்தவர்களைப் பார்த்து இவ்வாறு கேட்டான்; மனவ வஞ்சிஸலாகதெ - மனதில் எவ்வித பாரபட்சமும் இல்லாமல்; ஈ தர்மவனு நெரெ திளிது - இதில் எது சரி எது தவறு என்பதை நன்றாக அறிந்து; அனுநயதி பேளெனெ - சரியாக, உடனடியாக சொல்லவும் என்று கேட்க; முனீந்த்ரரு - முனிவரானவர்; அனிமிஷரனு ஈக்ஷிஸிதரு - சுற்றி இருந்த கற்றறிந்தவர்களை பார்த்தார்; அல்லிய கன மஹாஸபெயொளகெ - அங்கிருந்த அபாரமான சபையில்; பார்க்கவ ராமனு இந்தெந்த - ஸ்ரீராமன் மேலும் இவ்வாறு கூறினான்.

இவ்வாறாக ராகி சொல்லி முடிக்க, ஸ்ரீராமன் பார்த்தார். சிறந்த தவவலிமை பெற்றிருந்தவர்களைப் பார்த்து இவ்வாறு கேட்டார். மனதில் எவ்வித பாரபட்சமும் இல்லாமல், இதில் எது சரி எது தவறு என்பதை நன்றாக அறிந்து, சரியாக, உடனடியாக சொல்லவும் என்று கேட்க, முனிவரானவர், சுற்றி இருந்த கற்றறிந்தவர்களை பார்த்தார். அங்கிருந்த அபாரமான சபையில், ஸ்ரீராமன் மேலும் இவ்வாறு கூறினான்.

**ஆரு நுடி$^{3}$யரெ நீவு ஹிரியரு**
**மீரிஸுவராரிவரொளகெ$^{3}$ கு$^{3}$ண**
**ஸாரனாவனு பேளெனலு ஜம்பா$^{4}$ரி நஸுநகு$^{3}$த**
**ஸாரஹ்ருத$^{3}$யனு நரெத$^{3}$லெக$^{3}$ நி**
**ஸ்ஸாரனீ வ்ரிஹியெனலு கு$^{3}$ணநிதி$^{4}$**
**மாருதாத்மஜ நோடித$^{3}$னு ஸன்னெயலி நாரத$^{3}$ன ||133**

நீவு ஹிரியரு - நீங்களே பெரியவர்கள்; ஆரு நுடியரெ - வேறு யாரையும் கவனிக்காமல்; மீரிஸுவராரு இவரொளகெ - இந்த இருவரில் (அரிசி, ராகி) யார் சிறந்தவர்கள்?; குண ஸாரனு யாவனு - நற்குணங்களைக் கொண்டவன் யார்?; பேளெனலு - சொல்லுங்கள் என்று கேட்க; ஜம்பாரி நஸுநகுத - இந்திரன் புன்னகைத்தவாறு; ஸாரஹ்ருதயனு நரெதலெக - நல் மனது கொண்டவன் ராகி; நிஸ்ஸாரனு ஈ வ்ரீஹி எனலு - அதமன் இந்த அரிசி என்று சொல்ல; குணநிதி மாருதாத்மஜ - குணநிதியான ஸ்ரீஹனுமந்த தேவர்; நாரதன ஸன்னெயலி நோடிதனு - ஒரு குறிப்பாக பார்த்தார்.

நீங்களே பெரியவர்கள், வேறு யாரையும் கவனிக்காமல், இந்த இருவரில் (அரிசி, ராகி) யார் சிறந்தவர்கள்?. நற்குணங்களைக் கொண்டவன் யார்? சொல்லுங்கள் என்று கேட்க, இந்திரன் புன்னகைத்தவாறு, நல் மனது கொண்டவன் ராகி, அதமன் இந்த அரிசி என்று சொல்ல, குணநிதியான ஸ்ரீஹனுமந்த தேவர், ஒரு குறிப்பாக பார்த்தார்.

**அஹுது$^3$ ஸூரபன மாது நிஶ்சய**
**வஹுது$^3$ நரெத$^3$லெக$^3$னெ ஸமர்த்த$^2$னு**
**ப$^3$ஹள ப$^3$லயுத ஸெரெகெ$^3$ தள்ளலு காந்திகெ$^3$ட$^3$லில்ல**
**ஸஹஜவிது$^3$ பரபக்ஷவாத$^3$டெ$^3$**
**வ்ரிஹி கரகி$^3$ கந்தி$^3$த$^3$னு ஸெரெயலி**
**விஹிதவது$^3$ கேளெந்து$^3$ நாரத$^3$ நுடி$^3$த$^3$ நஸு நகு$^3$த ||134**

அஹுது - ஆம்; ஸூரபன மாது நிஸ்சயவஹுது - தேவேந்திரனின் பேச்சு சரியானதே; நரெதலெகனெ ஸமர்த்தனு - ராகியே சிறந்தவன்; பஹள பலயுத - மிகுந்த வலிமை கொண்டவன்; ஸெரெகெ தள்ளலு - அவனை சிறையில் தள்ளினாலும்; காந்திகெடலில்ல - அவனது ஒளி குறையவில்லை; ஸஹஜவிது பரபக்ஷவாதடெ - பாரபட்சம் இல்லாத வார்த்தை இது; வ்ரிஹி கரகி கந்திதனு - அரிசியானவன், கருகி, குன்றிப் போய்விட்டான்; ஸெரெயலி - சிறையில்; விஹிதவது கேளெந்து - இதுவே சரி, கேட்பாயாக என்று; நாரத நுடித நஸுநகுத - நாரதர் புன்னகைத்தவாறு கூறினார்.

ஆம். தேவேந்திரனின் பேச்சு சரியானதே. ராகியே சிறந்தவன். மிகுந்த வலிமை கொண்டவன். அவனை சிறையில் தள்ளினாலும், அவனது ஒளி குறையவில்லை. பாரபட்சம் இல்லாத வார்த்தை இது. அரிசியானவன், சிறையில், கருகி, குன்றிப் போய்விட்டான். இதுவே சரி, கேட்பாயாக என்று நாரதர் புன்னகைத்தவாறு கூறினார்.

**எல்ல நவதா$^4$ன்யத$^3$லி ஈதனெ**
**ப$^3$ல்லித$^3$னு ஹுஸியல்ல ப$^3$ட$^3$வர**
**ப$^3$ல்லித$^3$னாரைது$^3$ ஸலஹுவனிவகெ$^3$ ஸரியுண்டெ**
**நெல்லினலி கு$^3$ணவேனு பா$^4$க்$^3$யதி$^3$**
**ப$^3$ல்லித$^3$ர பதிகரிஸுவனு அவ**
**னல்லி ஸாரவ காணெயெந்த$^3$னு கபிலமுனி நகு$^3$த ||135**

எல்ல நவதான்யதலி - அனைத்து நவதான்யங்களிலும்; ஈதனெ பல்லிதனு - இவனே (ராகியே) அனைத்தும் அறிந்தவன்; ஹுஸியல்ல - இது பொய் அல்ல; படவர பல்லிதனு - ஏழைகளைப் பற்றி நன்கு அறிந்தவன்; ஆரெய்து ஸலஹுவனிவகெ - அவர்களை அறிந்து உதவுபவன் இவனே; ஸரியுண்டெ - இவனுக்கு நிகர் வேறு யாரும் இருக்கிறார்களா?; நெல்லினலு குணவேனு - நெல் (அரிசியில்) என்ன குணம் இருக்கிறது? (எதுவும் இல்லை); பாக்யதி பல்லிதர - செல்வந்தர்களை மட்டுமே; பதிகரிஸுவனு - அவன் ஆதரிக்கிறான்; அவனல்லி ஸாரவ காணெ - அவனிடம் எந்த சிறப்பினையும் நான் காண்பதில்லை; எந்தனு கபிலமுனி நகுத - என்றார் கபில முனிவர், புன்னகைத்தவாறு.

அனைத்து நவதான்யங்களிலும், இவனே (ராகியே) அனைத்தும் அறிந்தவன். இது பொய் அல்ல. ஏழைகளைப் பற்றி நன்கு அறிந்தவன். அவர்களை அறிந்து உதவுபவன் இவனே. இவனுக்கு நிகர் வேறு யாரும் இருக்கிறார்களா?. நெல் (அரிசியில்) என்ன குணம் இருக்கிறது? (எதுவும் இல்லை). செல்வந்தர்களை மட்டுமே அவன் ஆதரிக்கிறான். அவனிடம் எந்த சிறப்பினையும் நான் காண்பதில்லை என்றார் கபில முனிவர், புன்னகைத்தவாறு.

**ஸூரமுனிக$^3$ளிந்தெ$^3$னலு பூ$^4$ஸூர**
**வரரு ஸந்தோஷி$^2$ஸலு ஸபி$^4$கரு**
**நரெத$^3$லெக$^3$ நீ பா$^3$ரெனுத காம ந்ருபால நெரெமெச்சி**
**கரெது$^3$கொட்டனு தன்ன நாமவ**
**த$^4$ரெகெ$^3$ ராக$^4$வனெம்ப பெஸரா**
**ய்திரதெ$^3$ வ்ரிஹி நாசித$^3$னு ஸபெ$^4$யலி ஶிரவ பா$^3$கி$^3$ஸித$^3$ ||136**

ஸூரமுனிகளிந்தெனலு - ஸூரமுனிவர்கள் இவ்வாறு கூற; பூஸூர வரரு ஸந்தோஷிஸலு - பிராமணர்கள், தேவர்கள் அனைவரும் அதைக் கேட்டு மகிழ்ந்திருக்க; ஸபிகரு - சபையோர்; நரெதலெக நீ பாரெனுத - ராகியே, நீ இங்கே வா என்றவாறு; ராம ந்ருபால - ஶ்ரீராமன்; நெரெமெச்சி கரெது - அதனை புகழ்ந்து, அழைத்து; கொட்டனு தன்ன நாமவ - தன் பெயரையே அதற்குக் கொடுத்தான்; தரெகெ ராகவனெம்ப பெஸராய்து - அந்த தானியத்திற்கு ராகவ என்னும் பெயர் வந்தது; இரதெ வ்ரீஹி நாசிதனு - இங்கு அரிசி வெட்கப்பட்டான்; ஸபெயலி ஷிரவ பாகிஸித - சபையில் தலை குனிந்து நின்றான்.

ஸூரமுனிவர்கள் இவ்வாறு கூற, பிராமணர்கள், தேவர்கள் அனைவரும் அதைக் கேட்டு மகிழ்ந்திருக்க, சபையோர் - ராகியே, நீ இங்கே வா என்றவாறு, ஸ்ரீராமன் அதனை புகழ்ந்து, அழைத்து, தன் பெயரையே அதற்குக் கொடுத்தான். அந்த தானியத்திற்கு ராகவ என்னும் பெயர் வந்தது. இங்கு அரிசி வெட்கப்பட்டான். சபையில் தலை குனிந்து நின்றான்.

**ஹருஷ$^{2}$தோரித$^{3}$ மனதி$^{3}$ நலிவுத**
**நரெத$^{3}$லெக$^{3}$னைதந்து$^{3}$ ராமன**
**ஸிரி சரண க$^{3}$பி$^{4}$ நமிஸெ தே$^{3}$வாஸுரரு கொண்டா$^{3}$டெ$^{3}$**
**ஹரஸி முத்தின ஸேஸெயனு பூ$^{4}$**
**ஸூரரு மந்த்ராக்ஷதெயனித்துப**
**சரிஸித$^{3}$ரு ராகி$^{3}$யனு பொக$^{3}$ளித$^{3}$ரல்லி முனிவரரு ||137**

ஹருஷதோரித மனதி நலிவுத - மிகவும் மகிழ்ச்சி கொண்ட மனதுடன்; நரெதலெகன - ராகி; ஐதந்து - முன் வந்து; ராமன ஸிரி சரணகெ அபிநமிஸெ - ஸ்ரீராமனின் சரணங்களில் விழுந்து வணங்க; தேவாஸுரரு கொண்டாடெ - தேவ அஸுரர்கள் மகிழ்ச்சியுடன் அதனை கொண்டாடினார்கள்; முத்தின ஸேஸெயனு ஹரஸி - முத்து போன்றதான மஞ்சள் தடவிய அக்ஷதையை தூவி; பூஸுரரு - பிராமணர்கள் / முனிவர்கள்; மந்த்ராக்ஷதெயனித்து - மந்திராட்சதையை தூவி; உபசரிஸிதரு ராகியனு - ராகியை உபசரித்தனர்; பொகளிதரல்லி முனிவரரு - முனிவரர்கள் அதனை நன்கு புகழ்ந்தனர்.

மிகவும் மகிழ்ச்சி கொண்ட மனதுடன், ராகி, முன் வந்து, ஸ்ரீராமனின் சரணங்களில் விழுந்து வணங்க, தேவ அஸுரர்கள் மகிழ்ச்சியுடன் அதனை கொண்டாடினார்கள். முத்து போன்றதான மஞ்சள் தடவிய அக்ஷதையை தூவி, பிராமணர்கள் / முனிவர்கள், மந்திராட்சதையை தூவி ராகியை உபசரித்தனர். முனிவரர்கள் அதனை நன்கு புகழ்ந்தனர்.

**ஸரஸிஜோத்$^{3}$ப$^{4}$வ மெச்சிகொட்டனு**
**கரகமண்ட$^{3}$ல பாத்ரெயனு ஶங்**
**கர த்ரிஶூலவனித்த கொட்டனு கால த$^{3}$ண்ட$^{3}$வனு**
**நாரத$^{3}$னு சக்ரவனு கொட்டனு**
**உருதரத$^{3}$ தோரிகெ$^{3}$ய வாஸவ**
**நுரக$^{3}$பதி வாஸுகி$^{3}$க$^{3}$ளித்தரு நேணு பா$^{1}$ஶக$^{3}$ள ||138**

ஸரஸிஜோத்பவ மெச்சிகொட்டனு - பிரம்மதேவர் (ராகியை) புகழ்ந்து கொடுத்தார்; கர கமண்டல பாத்ரெயனு - கமண்டல பாத்திரத்தை; ஷங்கர த்ரிஷூலவனித்த - திரிசூலத்தை தாங்கிய ருத்ரர் கொடுத்தார்; கால தண்டவனு - யமதேவர் தனது தண்டத்தினை கொடுத்தார்; நாரதனு சக்ரவனு கொட்டனு - நாரதர் சக்கரத்தை கொடுத்தார்; வாஸவ - இந்திரன்; உருதரத கூரிகெய - பல்வேறு விதமான (அறுவடை செய்யும்) இயந்திரங்களை; உரகபதி - ஸேஷதேவர் மற்றும்; வாஸுகிகளித்தரு - வாஸுகிகள் கொடுத்தனர்; நேணு பாஷகள - கயிறுகளை கொடுத்தனர்.

பிரம்மதேவர் (ராகியை) புகழ்ந்து, கமண்டல பாத்திரத்தை கொடுத்தார். ருத்ரர், தனது திரிசூலத்தை கொடுத்தார். யமதேவர் தனது தண்டத்தினை கொடுத்தார். நாரதர் சக்கரத்தை கொடுத்தார். இந்திரன், பல்வேறு விதமான (அறுவடை செய்யும்) இயந்திரங்களையும், ஸேஷதேவர் மற்றும் வாஸுகிகள், கயிறுகளை கொடுத்தனர்.

**த$^4$னத$^3$னித்தனு யந்த்ரரக்ஷெய**
**ஜனதொ$^3$ளிஹ மூலிகெய மந்த்ரவ**
**வினயதி$^3$ந்த$^3$ விபூ$^4$தியனு வரகாலபை$^4$ரவனு**
**இனஶஶிக$^3$ளாத$^3$ரிஸி கொட்டரு**
**க$^4$னதரத ஜல்லரிய வருணனு**
**கனகமணி நிர்மிதத$^3$ கரக$^3$வனித்து மனவொலிது$^3$ ||139**

தனதனித்தனு - குபேரன் கொடுத்தான்; யந்த்ரரக்ஷெய - யந்த்ர ரக்ஷையை கொடுத்தான்; வர கால பைரவனு - கால பைரவர் கொடுத்தார்; பனதொளிஹ மூலிகெய மந்த்ரவ - வனத்தில் இருந்த மூலிகைகளைப் பற்றிய மந்திரங்களை; வினயதிந்த விபூதியனு - மற்றும் விபூதியையும், மிகவும் மரியாதையுடன்; இனஷஷிகளு ஆதரிஸி கொட்டரு - சூரிய சந்திரர்கள் ராகியை ஆதரித்து கொடுத்தனர்; ஜல்லரிய - சிறிய மேளம் போன்ற வாத்தியத்தினை; வருணனு மனவொலிது - வருணன் மிகவும் மகிழ்ந்து; கனகமணி நிர்மிதத - கனகமணியால் வேயப்பட்ட; கரகவனித்து - (தலையில் வைத்துச் செல்வதான) கரகத்தினை (கொடுத்தான்).

குபேரன் யந்த்ர ரக்ஷையை கொடுத்தான். கால பைரவர், வனத்தில் இருந்த மூலிகைகளைப் பற்றிய மந்திரங்களை, மற்றும் விபூதியையும், மிகவும் மரியாதையுடன் கொடுத்தார்.

சூரிய சந்திரர்கள் ராகியை ஆதரித்து, சிறிய மேளம் போன்ற வாத்தியத்தினை கொடுத்தனர். வருணன் மிகவும் மகிழ்ந்து, கனகமணியால் வேயப்பட்ட (தலையில் வைத்துச் செல்வதான) கரகத்தினை (கொடுத்தான்).

**கரெஸித³ளு ஶர்வாணி தன்னய**
**மருளு ப³ளக³வனெல்ல நீவே**
**த⁴ரணியலி ஸதிரூபதாள்த³க³ணிதத மனெக³ளலி**
**ஹூருளுகெ³டி³ஸதெ³ ஸர்வபூ⁴தா**
**த்மரிகெ³ பக்வான்னவனு நீடெந்**
**து³ருதரத³ ப்ரேமத³லி களுஹித³ளக³ஜெ கருணத³லி ||140**

தன்னய மருளு பளகவனெல்ல - தன்னை பின்பற்றுபவர்களை; ஷர்வாணி கரெஸிதளு - பார்வதிதேவி அழைத்தார்; நீவு ஈ தரணியலி - நீங்கள் அனைவரும் இந்த பூமியில்; ஸதி ரூப தாள்து - பெண்களில் இருந்து; அகணித மனெகளலி - பற்பல வீடுகளில்; ஹூருளு கெடிஸதெ - அவர்களின் குடும்பங்களை கெடுக்காமல் (அவர்களுக்கு அருளியவாறு); ஸர்வபூதாத்மரிகெ - அனைத்து மக்களுக்கும்; பக்வான்னவனு - சுவையான உணவினை; நீடெந்து - படைத்து கொடுங்கள் என்று; உருதரத ப்ரேமதலி - அபாரமான அன்பினால்; (என்று சொல்லி); அகஜெ - பார்வதிதேவி; கருணதலி களுஹிதளு - அன்புடன் அவர்களை அனுப்பி வைத்தாள்.

தன்னை பின்பற்றுபவர்களை, பார்வதிதேவி அழைத்தார். நீங்கள் அனைவரும் இந்த பூமியில், பெண்களில் இருந்து கொண்டு, பற்பல வீடுகளில், அவர்களின் குடும்பங்களை கெடுக்காமல் (அவர்களுக்கு அருளியவாறு), அனைத்து மக்களுக்கும், சுவையான உணவினை படைத்துக் கொடுங்கள் என்று, அபாரமான அன்பினால் (என்று சொல்லி) பார்வதிதேவி சொல்லி, அவர்களை அனுப்பி வைத்தாள்.

**ஈ தெரதி³ தே³வாஸுரரு நவ**
**நீதிமார்க்க³தி கரெது³ வரக³ள**
**ப்ரீதியிந்தா³த³ரிஸி கொட்டரனேக விப⁴வத³லி**
**பூ⁴தளத³ ஜனரொட³னெ நீ ப்ர**
**க்²யாதனாகெ³னெ நரெத³லெக³ நெரெ**
**வாதனாத³னு மர்த்யத³லி நரனாத² கேளெந்த³ ||141**

ஈ தெரதி - இப்படியாக; தேவாஸுரரு - தேவ, அசுரர்கள் என அனைவரும்; நவ நீதிமார்க்கதி கரெது - சிறந்த நீதியான வழியில் அழைத்து; ப்ரீதியிந்த ஆதரிஸி - மிகவும் அன்புடன் ஆதரித்து; வரகள கொட்டரு - வரங்களை கொடுத்தனர்; அனேக விபவதலி - மிகவும் சிறப்பாக; பூதளத ஜனரொடனெ - பூமியின் மக்களுடன்; நீ - நீ; ப்ரக்யாதனகு எனெ - புகழ் பெற்றவனாக ஆகு என; நரெதலெக - ராகி; மர்த்யதலி - இந்த உலகில்; நெரெ வாதனாதனு - முழுமையானவன் ஆனான்; நரநாத கேளெந்த - ஹே தர்மராஜனே, கேள்.

இப்படியாக, தேவ, அசுரர்கள் என அனைவரும், சிறந்த நீதியான வழியில், ராகியினை அழைத்து, மிகவும் அன்புடன் ஆதரித்து, வரங்களை கொடுத்தனர். மிகவும் சிறப்பாக, பூமியின் மக்களிடையே, நீ புகழ் பெற்றவனாக ஆகு என்று சொல்ல, ராகி, இந்த உலகில் முழுமையானவன் ஆனான். ஹே தர்மராஜனே, கேள்.

**இனகுலேந்த்$^{3}$ரன பத$^{3}$கெ வந்தி$^{3}$ஸி**
**ஹனும பி$^{3}$ன்னயிஸித$^{3}$னு நீவா**
**தனிகெ$^{3}$ நாமாங்கிதவனித்திரி நிம்மனக$^{3}$லுவெனெ**
**எனகெ$^{3}$ ஹத$^{3}$னெந்தெனலு நஸு நகெ$^{3}$**
**மினுகெ$^{3}$ நுடித$^{3}$னு ராமனித்தெ$^{3}$டெ$^{3}$**
**நினகெ$^{3}$ நின்னபி$^{4}$தா$^{4}$னவாக$^{3}$லி ஹனும கேளெந்த$^{3}$ ||142**

இனகுலேந்த்ரன பதகெ வந்திஸி - ஸ்ரீராமசந்திரனின் பாதங்களில் விழுந்து வணங்கி; ஹனும பின்னயிஸிதனு - ஹனுமந்த தேவர் இவ்வாறு வேண்டினார்; நீவு ஆதனிகெ - நீங்கள் அவனுக்கு (ராகிக்கு); நாமாங்கிதவனித்திரி - ராம தான்ய என்னும் பெயரை கொடுத்தீர்கள்; நிம்மனு அகலுவெனெ எனகெ - உங்களை எப்போதும் விட்டு விலகாதவனான எனக்கு; ஹதனெந்தெனலு - என்ன கிடைக்கிறது (என் கதி) என்று ; நஸுநகெ மினுகெ நுடிதனு - புன்னகைத்தவாறு கேட்க; ராமனு இத்தெடெ - ஸ்ரீராமன் இருக்கும் இடங்கள் அனைத்திலும்; நினகெ - உனக்கு; நின்ன அபிதானவாகலி - உன்னுடைய பெயரும் இருக்கட்டும்; ஹனும கேளெந்த - ஹனுமந்தனே கேள் என்றான் ஸ்ரீராமன்.

ஸ்ரீராமசந்திரனின் பாதங்களில் விழுந்து வணங்கி, ஹனுமந்த தேவர் இவ்வாறு வேண்டினார். நீங்கள் அவனுக்கு (ராகிக்கு), ராம தான்ய என்னும் பெயரை கொடுத்தீர்கள். உங்களை எப்போதும்

விட்டு விலகாதவனான எனக்கு, என்ன கிடைக்கிறது (என் கதி என்ன) என்று புன்னகைத்தவாறு கேட்க, 'ஸ்ரீராமன் இருக்கும் இடங்கள் அனைத்திலும், உன்னுடைய பெயரும் இருக்கட்டும், ஹனுமந்தனே கேள்' என்றான் ஸ்ரீராமன்.

**ஸேவகன ஹிந்து$^{3}$ளிது$^{3}$ தே$^{3}$வரு**
**நீவு முந்த$^{3}$டி$^{3}$யிட$^{3}$லு நிம்மத$^{3}$**
**தாவ$^{3}$ கு$^{3}$ணவெனெ ஹனுமனாடி$^{3}$த$^{3}$ நுடி$^{3}$கெ$^{3}$ நஸுநகு$^{3}$த**
**நாவு ஜனனதி$^{3}$ முந்து$^{3}$ கலஹத$^{3}$**
**டா$^{2}$வினலி நா முந்தெ$^{3}$ நடெ$^{3}$யெந்**
**தி$^{3}$ விசாரவ திளுஹித$^{3}$னு நரநாத$^{2}$னனிலஜகெ$^{3}$ ||143**

ஸேவகன ஹிந்துளிது - சேவகனை பின் தள்ளிவிட்டு; தேவரு நீவு முந்தடியிடலு - ஸ்வாமி நீயே முன்னாடி செல்ல; நிம்மது ஆவ குணவு என - இப்படி செய்வது உங்களுடைய எந்த குணம்? (இது எப்படி சரியாகும்?) என்று; ஹனுமனாடித நுடிகெ - ஹனுமந்த தேவர் கேட்ட கேள்விக்கு; நஸுநகுத - சிரித்தவாறு; நரநாதனு - ஸ்ரீராமன்; அனிலஜகெ - வாயுபுத்திரனான ஹனுமந்த தேவருக்கு; நாவு ஜனனதி முந்து - நாம் அவதாரத்தில் முன் வருகிறோம்; கலஹத டாவினலி - போர் புரியும் சமயங்களில் (போர்க்களங்களில்); நா முந்தெ நடெ எந்து - நீ எனக்கு முன்னால் செல்வாயாக என்று; விசாரவ திளுஹிதனு - இந்த விஷயத்தை கூறினான்.

சேவகனை பின் தள்ளிவிட்டு, ஸ்வாமி நீயே முன்னாடி செல்ல, இப்படி செய்வது உங்களுடைய எந்த குணம்?. (இது எப்படி சரியாகும்?) என்று, ஹனுமந்த தேவர் கேட்ட கேள்விக்கு, சிரித்தவாறு, ஸ்ரீராமன், வாயுபுத்திரனான ஹனுமந்த தேவருக்கு இவ்வாறு கூறுகிறான். நாம் அவதாரத்தில் முன் வருகிறோம். போர் புரியும் சமயங்களில் (போர்க்களங்களில்), நீ எனக்கு முன்னால் செல்வாயாக என்று கூறினான்.

**பா$^{4}$னுவம்ஶஜனா விபீ$^{4}$ஷ$^{2}$ண**
**நானனவனீக்ஷிஸலு நஸுநகு$^{3}$**
**தா நரேந்த்$^{3}$ரன ஸன்னெயலி நிஷ்$^{2}$ட$^{2}$வகவன கரெது$^{3}$**
**தா$^{3}$னவேஶ்வரனா ஸதிகெ$^{3}$ ஸு**
**ம்மானதி$^{3}$ம் கொட$^{3}$லீர்வரு நவ**
**தா$^{4}$ன்யத$^{3}$லி விக்$^{2}$யாதராத$^{3}$ரு ந்ருபதி கேளெந்த$^{3}$ ||144**

பானுவம்ஷஜனு - சூரிய வம்சத்தில் வந்த ஸ்ரீராமன்; நஸுநகுத - புன்னகைத்தவாறு; ஆ விபீஷணன ஆனவ ஈக்ஷிஸலு - அந்த விபீஷணனின் வருகையினை பார்த்து காத்திருக்க; ஆ நரேந்த்ரன ஸன்னெயலி - தன் சன்னிதியில்; நிஷ்டவகவன கரெது - மிகச் சிறந்த பக்தர்களான தானியங்களை (அரிசி & ராகி) அழைத்து; தானவேஷ்வரன ஆ ஸதிகெ - அசுர அரசனனான விபீஷணனின் மனைவிக்கு; ஸும்மானதிம் கொடலு - அவற்றை அவருக்குக் கொடுக்க; ஈர்வரு நவதான்யதலி விக்யாதராதரு - இந்த இருவரும் நவதானியங்களில் சிறந்தவர்கள் ஆயினர்; ந்ருபதி கேளெந்த - ஹே தர்மராஜனே, கேள் (என்றார் முனிவர்).

சூரிய வம்சத்தில் வந்த ஸ்ரீராமன், புன்னகைத்தவாறு, அந்த விபீஷணனின் வருகையினை பார்த்து காத்திருக்க, தன் சன்னிதியில், மிகச் சிறந்த பக்தர்களான தானியங்களை (அரிசி & ராகி) அழைத்து, அசுர அரசனான விபீஷணனின் மனைவிக்கு, அவற்றை கொடுக்க, இந்த இருவரும் நவதானியங்களில் சிறந்தவர்கள் ஆயினர். ஹே தர்மராஜனே, கேள் (என்றார் முனிவர்).

**ஹரிஹர பி3ரம்மாதி3 தே3வா**
**ஸுரரு மஹாமுனீஸ்வரரு வா**
**நரரு கொண்டா3டி3த3ரு ரகு4குல ஸார்வபௌ4மகன**
**ஸுரரு து3ந்து3பி4 மொளகெ3 மல்லிகெ3**
**மரள மளெகரெத3வு விமானதி3**
**புரகெ தெரளித3ரல்லி ஹரது3து3 ந்ருபதியாஸ்தா2ன ||145**

ஹரிஹர பிரம்மாதி தேவாஸுரரு - பிரம்ம ருத்ர முதலான அனைத்து தேவர்களும்; மஹாமுனீஷ்வரரு - மிகச் சிறந்த முனிவர்கள்; வானரரு - வானரர்கள் ஆகியோர்: கொண்டாடிதரு ரகுகுல ஸார்வபௌமகன - ஸ்ரீராமனை கொண்டாடினர்; ஸுரரு துந்துபி மொளகெ - வானில் தேவர்கள் துந்துபிகளை முழங்க; மல்லிகெ யரள மளெகரெதவு - மல்லிகை மலர்களின் மழை பொழிந்தது; விமானதி புரகெ தெரளிதரு - அனைவரும் விமானத்தில் ஏறி தங்களின் இடங்களுக்கு திரும்பினர்; அல்லி ந்ருபதிய ஆஸ்தான ஹரதுது - அப்போது அங்கு ஸ்ரீராமனின் சபை நிறைந்தது. (சபை மறுபடி தொடங்கியது).

பிரம்ம ருத்ர முதலான அனைத்து தேவர்களும், மிகச் சிறந்த முனிவர்கள், வானரர்கள் ஆகியோர்: ஸ்ரீராமனை

கொண்டாடினர். வானில் தேவர்கள் துந்துபிகளை முழங்க, மல்லிகை மலர்களின் மழை பொழிந்தது. அனைவரும் விமானத்தில் ஏறி, தங்களின் இடங்களுக்கு திரும்பினர். அப்போது அங்கு ஸ்ரீராமனின் சபை நிறைந்தது. (சபை மறுபடி தொடங்கியது).

**இந்து ஸபெ$^{4}$யலி மானப$^{4}$ங்க$^{3}$வ**
**தெ$^{3}$ந்து ப$^{3}$ந்து$^{3}$து$^{3}$ தனகெ$^{3}$னுதலதி**
**சிந்தெயலி கடு$^{3}$னொந்து$^{3}$ தலெகு$^{3}$த்தித$^{3}$னு நீரொளகெ$^{3}$**
**இந்து பரிதாபத$^{3}$லி லக்ஷ்மி**
**காந்த ஶிவஶிவயெனுதலிரெ பூ$^{4}$**
**காந்த த$^{3}$ஶரத $^{2}$ராமநாத$^{2}$னு கரெது$^{3}$ லாலிஸித$^{3}$ ||146**

இந்து ஸபெயலி - இங்கு அரசவையில்; மானபங்கவதெந்து தனகெ பந்துது எனுத - தனக்கு அவமானம் ஆகிவிட்டது என்றவாறு: அதி சிந்தெயலி கடுநொந்து - கடும் கவலையில் நொந்தவாறு; தலெகுத்திதனு நீரொளகெ - தண்ணீரில் தலை குனிந்து நின்றான் (அரிசி); இந்து பரிதாபதல்லி - மேலும் கவலையுடன்; லட்சுமிகாந்த ஷிவஷிவ எனுதலிரெ - (அரிசியானது) ராம, சிவ என்றவாறு இருக்க; பூகாந்த தஷரத ராமனாதனு - ஸ்ரீராமனானவன்; கரெது லாலிஸித - அந்த அரிசியை அழைத்து மரியாதை செய்தான்.

இங்க, அரசவையில், தனக்கு அவமானம் ஆகிவிட்டது என்றவாறு, கடும் கவலையில் நொந்தவாறு, தண்ணீரில் தலை குனிந்து நின்றான் (அரிசி). மேலும் கவலையுடன், (அரிசியானது) ராம, சிவ என்றவாறு இருக்க, ஸ்ரீராமனானவன், அந்த அரிசியை அழைத்து மரியாதை செய்தான்.

**மருளெ பா$^{3}$ரை வ்ரிஹியெ மனத$^{3}$லி**
**கொரகி$^{3}$ சிந்திஸலேகெ நாவீ**
**நரெத$^{3}$லெக$^{3}$னதிஶயவ மாடி$^{3}$தெ$^{3}$வெந்து$^{3}$ கனலிதெ$^{3}$ய**
**த$^{4}$ரெகெ$^{3}$ ஹொாத்$^{3}$தி$^{3}$த$^{3}$ க்ஷாமகாலதி$^{3}$**
**கருணதி$^{3}$ம் நடெ$^{3}$தந்து$^{3}$ லோகவ**
**ஹொரெவனது$^{3}$ காரணவெ பதிகரிஸிதெ$^{3}$வு கேளெந்த$^{3}$ ||147**

மருளெ பாரை - அட பைத்தியமே, இங்கே வா; வ்ரீஹியெ மனதலி கொரகி சிந்திஸலேகே - இவ்வாறு மனதில் கவலை கொண்டு ஏன் சிந்திக்க வேண்டும்?; நாவு ஈ நரெதலெகன - நாம் இந்த

ராகிக்கு; அதிஷயவ மாடிதெவெந்து கனலிதெய - அருளியிருக்கிறோம் என்று பார்த்து கவலைப் படுகிறாயா?; தரெகெ ஹொத்தித - இந்த பூமியில் வந்திருந்த; க்ஷாம காலதி - வறட்சி / பஞ்சம் வந்திருந்தபோது; கருணதிம் நடெதந்து - மிகவும் கருணையுடன்; லோகவ ஹொரெவனு - இந்த உலகத்தை (உணவு அளித்து) காத்தான்; அது காரணவெ பதிகரிஸிதெவு - அதற்காகவே அவனுக்கு நாம் அருளினோம்; கேளெந்த - கேட்பாயாக, என்றான் ஸ்ரீராமன்.

அட பைத்தியமே, இங்கே வா. இவ்வாறு மனதில் கவலை கொண்டு ஏன் சிந்திக்க வேண்டும்?. நாம் இந்த ராகிக்கு அருளியிருக்கிறோம் என்று பார்த்து கவலைப் படுகிறாயா?. இந்த பூமியில் வறட்சி / பஞ்சம் வந்திருந்தபோது, மிகவும் கருணையுடன், இந்த உலகத்தை (உணவு அளித்து) காத்தான். அதற்காகவே அவனுக்கு நாம் அருளினோம். கேட்பாயாக, என்றான் ஸ்ரீராமன்.

**தீ$^{3}$னரலி தா$^{3}$ரித்$^{3}$ர ஜனத$^{3}$லி**
**நீனு நிர்த$^{3}$யனெந்தெ$^{3}$வல்லதெ$^{3}$**
**ஹீனக$^{3}$ளெத$^{3}$வரல்ல நின்னனு நாவு ஸபெ$^{4}$யொளகெ$^{3}$**
**மானுஷ$^{2}$னு நம்மெடெ$^{3}$கெ$^{3}$ நீ ஸூர**
**தே$^{4}$னுவின ஸம நின்ன சித்ததி$^{3}$**
**ஹானிதோ$^{3}$ரலதே$^{3}$கெ பி$^{3}$டு$^{3}$ பி$^{3}$டு$^{3}$ சிந்தெ யாகெந்த$^{3}$ ||148**

தீனரலி - முடியாதவர்களில்; தாரித்ர்ய ஜனரலி - ஏழ்மையில் இருப்பவர்களுக்கு; நீனு நிர்தயனு எந்தெவல்லதெ - நீ கருணை இல்லாதவன் என்று சொன்னேனே தவிர; ஹீனகளெதவரல்ல - உன் மேல் வெறுப்பு கொண்டவன் அல்ல; நின்னனு நாவு - உன்னை நான்; ஸபெயொளகெ மானுஷனு - சபையில் மதித்தேன்; நம்மெடெகெ நீ ஸூரதேனுவின ஸம - நமக்கு நீ எப்போதும் காமதேனுவிற்கு சமமாகவே இருக்கிறாய்; நின்ன சித்ததி ஹானிதோரலதேகெ - உன் மனதில் ஏன் கவலை கொள்கிறாய்?; பிடு பிடு சிந்தெ யாகெந்த - இந்த கவலை உனக்கு எதற்கு? விட்டுவிடு - என்றான் ஸ்ரீராமன்.

முடியாதவர்களில், ஏழ்மையில் இருப்பவர்களுக்கு, நீ கருணை இல்லாதவன் என்று சொன்னேனே தவிர, உன் மேல் வெறுப்பு கொண்டவன் அல்ல. உன்னை நான் சபையில் மதித்தேன். நமக்கு நீ எப்போதும் காமதேனுவிற்கு சமமாகவே இருக்கிறாய். உன்

மனதில் ஏன் கவலை கொள்கிறாய்?. இந்த கவலை உனக்கு எதற்கு? விட்டுவிடு - என்றான் ஸ்ரீராமன்.

**தே3வரிகெ3 பரமான்ன நீ மனு**
**ஜாவளிகெ3 பக்வான்னவீதனு**
**நீவு த4ரெயொளகி3ப்3ப3ரதி3 ஹிதத3லி நீவிஹுது3**
**நாவு கொட்டெவு வரவ ஸல்லுவு**
**தா3வ காலத3லின்னு நீவே**
**பாவனரு பரம ஸுகி2யெந்து3பசரிஸித3னு ந்ருபதி ||149**

தேவரிகெ பரமான்ன நீ - தேவர்களுக்கு நீயே பரமான்னமாக இருக்கிறாய்; மனுஜாவளிகெ பக்வான்னவு ஈதனு - ராகி மனிதர்களுக்கு சுவையான உணவாக ராகி இருக்கிறான்; நீவு தரெயொளகெ இப்பரு - நீங்கள் இருவரும் இந்த பூமியில்; அதி ஹிததலி நீவு இஹுது - நீங்கள் இருவரும் பூமியில் ஒற்றுமையுடன் இருக்க வேண்டும்; நாவு கொட்டெவு வரவ - அதற்கு நான் வரம் அளிக்கிறேன்; ஆவ காலதலின்னு ஸல்வுது - இது அனைத்து காலங்களுக்கும் பொருந்தும்; நீவே பாவனரு - நீங்கள் இருவருமே பவித்ரம் ஆனவர்கள்; பரம ஸுகி - மிகவும் சுகமாக இருப்பீர்கள்; எந்து உபசரிஸிதனு ந்ருபதி - என்று ஸ்ரீராமன் உபசாரம் செய்தான்.

தேவர்களுக்கு நீயே பரமான்னமாக இருக்கிறாய். ராகி மனிதர்களுக்கு சுவையான உணவாக இருக்கிறான். நீங்கள் இருவரும் இந்த பூமியில், ஒற்றுமையுடன் இருக்க வேண்டும். அதற்கு நான் வரம் அளிக்கிறேன். இது அனைத்து காலங்களுக்கும் பொருந்தும். நீங்கள் இருவருமே பவித்ரம் ஆனவர்கள். மிகவும் சுகமாக இருப்பீர்கள், என்று ஸ்ரீராமன் உபசாரம் செய்தான்.

**நலவு ஹிங்கி3த3 வ்ரிஹிய ராகி3யு**
**ஜலவ ஹஸ்ததொ3ளொரஸி இந்த்3ரன**
**ஒளிகெ3 களுஹுவெ நின்ன ஸம்ஶயவேகே சித்தத3லி**
**கலிதனவ கைகொண்டு3 ஸத்யத3**
**ஹொலபு3த3ப்பதெ3 சோளதே3ஶவ**
**நொலிது3 நீ ஸலஹெந்து3 நேமவனித்து களுஹிஸித3 ||150**

நலவு ஹிங்கித வ்ரிஹிய - மகிழ்ச்சியில் மூழ்கிய அரிசியைப் பார்த்து (ஸ்ரீராமன் மேலும் கூறுவது); ராகியு ஜலவ ஹஸ்ததொளொரஸி - ராகியின் தண்ணீரை கையில் துடைத்துக் கொண்டு; இந்த்ரன பளிகெ களுஹுவெ - இந்திரனிடம் அனுப்புவேன்; நின்ன ஸம்ஷயவேகெ - உனக்கு எதற்கு சந்தேகம்?; சித்ததலி கலிதனவ கைகொண்டு - உன் மனதில் கலியினை புகுத்திக் கொண்டு; ஸத்யத ஹொலபுதப்பதெ - உண்மை நிலையை மறந்துவிடாதே; சோளதேஷவனு ஒலிது - சோழ நாட்டினை சென்று அடைந்து; நீ ஸலஹெந்து - நீ அவர்களுக்கு உதவுவாயாக; நேமவனித்து களுஹிஸித - என்று ஆணையிட்டு ஸ்ரீராமன், அரிசியை அனுப்பி வைத்தான்;

மகிழ்ச்சியில் மூழ்கிய அரிசியைப் பார்த்து (ஸ்ரீராமன் மேலும் கூறுவது). ராகியின் தண்ணீரை கையில் துடைத்துக் கொண்டு, அவனை இந்திரனிடம் அனுப்புவேன். உனக்கு எதற்கு சந்தேகம்?. உன் மனதில் கலியினை புகுத்திக் கொண்டு, உண்மை நிலையை மறந்துவிடாதே. சோழ நாட்டினை சென்று அடைந்து, நீ அவர்களுக்கு உதவுவாயாக என்று ஆணையிட்டு ஸ்ரீராமன், அரிசியை அனுப்பி வைத்தான்.

**பாண்ட3வாக்3ரஜ கேளிதை3 மா**
**ர்த்தாண்ட3 வம்ஶஜ தாஶரதி2யா**
**க2ண்ட3லன மதவிடி3து3 கரஸித3னுதுள தா4ன்யவனு**
**க3ண்டு3க3லிக3ளு நீவு த4ரணி**
**மண்ட3லதொளாத3ரிஸி தே3வர**
**நண்டலெது3 ஸலஹெந்து3 நேமவனித்து களுஹிஸித3 ||151**

பாண்டவாக்ரஜ கேளிதை - ஹே தர்மராஜனே, இதனை கேள். மார்த்தாண்ட வம்ஷஜ - சூர்ய வம்சத்தில் வந்தவனான; தாஷரதி - ஸ்ரீராமன்; கரஸிதனு அதுள தான்யவனு - சிறந்ததான இந்த இரு தானியங்களையும் அழைத்து; கண்டுகலிகளு நீவு - நீங்கள் இருவரும் மாவீரர்கள்; தரணி மண்டலதொளு ஆதரிஸி - பூமியில் உள்ளவர்களை ஆதரியுங்கள் (அவர்களை காத்து வாருங்கள்); தேவர நண்டலெது - இது ஸ்வாமியின் கட்டளை; ஸலஹெந்து - பின்பற்றுங்கள்; நேமவனித்து களுஹிஸித - என்று ஆணையிட்டு அனுப்பி வைத்தான்.

ஹே தர்மராஜனே, இதனை கேள். சூர்ய வம்சத்தில் வந்தவனான, ஸ்ரீராமன், சிறந்ததான இந்த இரு தானியங்களையும் அழைத்து, நீங்கள் இருவரும் மாவீரர்கள். பூமியில் உள்ளவர்களை

ஆதரியுங்கள் (அவர்களை காத்து வாருங்கள்). இது ஸ்வாமியின் கட்டளை. பின்பற்றுங்கள், என்று ஆணையிட்டு அனுப்பி வைத்தான்.

**தபஸிக$^3$ளனாத$^3$ரிஸி தே$^3$ஶா**
**தி$^4$பர மன்னிஸி த$^4$ரணியமரர**
**நுபசரிஸி வித்$^3$வாம்ஸ கவிஜன மல்லகா$^3$யகர**
**அபரிமித யாசகர களுஹிஸி**
**தபனதனயன ஸதியரிகெ$^3$ ரகு$^4$**
**ந்ருபதிகொடி$^3$ஸித$^3$னகி$^2$ள தி$^3$வ்யாம்ப$^3$ர ஸுபூ$^4$ஷணவ ||152**

தபஸிகளனு ஆதரிஸி - ரிஷி முனிவர்களை உபசரித்து; தேஷாதிபர மன்னிஸி - பிற நாட்டு அரசர்களை மன்னித்து அருளி; தரணியமரரனு உபசரிஸி - பிராமணர்களை உபசாரம் செய்து; வித்வாம்ஸ கவிஜன மல்ல காயகர - அறிஞர்களை, கவிஞர்களை, மல்லர்களை, பாடகர்களை; அபரிமித யாசகர களுஹிஸி - அபாரமான செல்வங்களைக் கொடுத்து அனுப்பி; தபன தனயன ஸதியரிகெ - சூரியனின் மகனான சுக்ரீவனின் மனைவியருக்கு; ரகு ந்ருபதி கொடிஸிதனு - ஸ்ரீராமன் கொடுத்தான்; அகிள திவ்யாம்பர ஸுபூஷணவ - ஏராளமான ஆடை அணிகலன்களை கொடுத்து அருளினான்.

ரிஷி முனிவர்களை உபசரித்து, பிற நாட்டு அரசர்களை மன்னித்து அருளி, பிராமணர்களை உபசாரம் செய்து, அறிஞர்களை, கவிஞர்களை, மல்லர்களை, பாடகர்களை, அபாரமான செல்வங்களைக் கொடுத்து அனுப்பி, சூரியனின் மகனான சுக்ரீவனின் மனைவியருக்கு, ஸ்ரீராமன் ஏராளமான ஆடை அணிகலன்களை கொடுத்து அருளினான்.

**பாண்ட$^3$வாக்$^3$ரஜ கேளு க$^4$ன கோ**
**த$^3$ண்ட$^3$ தீ$^3$க்ஷாசார்ய நீ பூ$^4$**
**மண்ட$^3$லதொ$^3$ளதி கீர்த்திவடெ$^3$த$^3$னு ஸத்யத$^4$ர்மத$^3$லி**
**சண்ட விக்ரம ராம ந்ருப மா**
**ர்த்தாண்ட$^3$ ஸுத மொத$^3$லாத$^3$ வானர**
**தண்ட$^3$வனு களுஹிஸி ஸுவஸ்துவனித்து ஸத்கரிஸி ||153**

பாண்டவாக்ரஜ கேளு நீ - ஹே தர்மராஜனே, கேள்; கன கோதண்ட - சிறந்ததான கோதண்டத்தை பிடித்தவன்; தீக் ஷாசார்ய - சொல்வதைப் போல செய்பவன்; ஸத்யதர்மதலி -

ஸத்ய தர்மத்தை காப்பதில்; பூமண்டலதொளு அதி கீர்த்தி படெதனு - பூமியில் அபாரமான புகழ் பெற்றான்; சண்ட விக்ரம ராம ந்ருப - மிகச் சிறந்த வீரனான ஶ்ரீராமன்; மார்த்தாண்டஸுத - சூரிய புத்திரனான சுக்ரீவன்; மொதலாத வானர தண்டவனு - முதலான அனைத்து வானரர்களுக்கும்; ஸுவஸ்துவனித்து ஸத்கரிஸி களுஹிஸி - சுப பொருட்களைக் கொடுத்து, மரியாதை செலுத்தி, வழியனுப்பி வைத்தான்.

ஹே தர்மராஜனே, கேள். சிறந்ததான கோதண்டத்தை பிடித்தவன், சொல்வதைப் போல செய்பவன். ஸத்ய தர்மத்தை காப்பதில் பூமியில் அபாரமான புகழ் பெற்றான். மிகச் சிறந்த வீரனான ஶ்ரீராமன், சூரிய புத்திரனான சுக்ரீவன், முதலான அனைத்து வானரர்களுக்கும், சுப பொருட்களைக் கொடுத்து, மரியாதை செலுத்தி, வழியனுப்பி வைத்தான்.

**கருணதி$^{3}$ந்த$^{3}$ விபீ$^{4}$ஷணன பதி**
**கரிஸி கரிரத$^{2}$ துரக$^{3}$ வஸ்த்ர**
**ப$^{4}$ரணவித்துபசரிஸி களுஹித$^{3}$னாக$^{3}$ள ஸுரரனு**
**கு$^{3}$ரு வஸிஷ்ட$^{2}$ன மததி$^{3}$ தம்மந்**
**தி$^{3}$ரு ஸஹித ஸாம்ராஜ்யவாளித$^{3}$**
**வரத$^{3}$னக$^{3}$பதி யாதி$^{3}$கேஶவ ராய விப$^{4}$வத$^{3}$லி ||154**

கருணதிந்த - மிகக் கருணையுடன்; விபீஷணன பதிகரிஸி - விபீஷணனுக்கு மரியாதை செலுத்தி; கரி ரத துரக வஸ்த்ராபரணவித்து - யானை, ரதம், குதிரை, வஸ்திரங்கள், ஆபரணங்கள் ஆகியவற்றைக் கொடுத்து; உபசரிஸி - உபசரித்து; களுஹிதனு - அனுப்பி வைத்தான்; ஆகளஸுரரனு - அந்த நாட்டின் பிராமணர்களை (அனுப்பி வைத்தான்); குரு வஸிஷ்டன மததி - குரு வஸிஷ்டரின் சம்மதத்துடன்; தம்மந்திரு ஸஹித - தன்னுடைய தம்பிகளுடன்; விபவதலி - மிகவும் சிறப்புடன்; வரதனகபதி ஆதிகேஷவ ராய - உலக நாயகனான ஆதிகேஷவ ராயன்; ஸாம்ராஜ்யவ ஆளித - தன் ராஜ்ஜியத்தை ஆண்டான்.

மிகக் கருணையுடன், விபீஷணனுக்கு மரியாதை செலுத்தி, யானை, ரதம், குதிரை, வஸ்திரங்கள், ஆபரணங்கள் ஆகியவற்றைக் கொடுத்து உபசரித்து அனுப்பி வைத்தான். அந்த நாட்டின் பிராமணர்களை (அனுப்பி வைத்தான்). குரு வஸிஷ்டரின் சம்மதத்துடன், தன்னுடைய தம்பிகளுடன், மிகவும்

சிறப்புடன், உலக நாயகனான ஆதிகேஷவ ராயன், தன் ராஜ்ஜியத்தை ஆண்டான்.

**வ்யோமகேஶ விரிஞ்சி வாஸவ**
**தாமரஸத3ள நயனரிவரு ம**
**ஹா மஹீமரீ வ்ரிஹிய நரெத3லெக3ர விவாத3வனு**
**ராம ஸபெயலி தீரிது3து3 ஸு**
**த்ராமனொலக3த3ல்லி கேள்தெ3வு**
**ராமதா4ன்யத3 கதெ2யனபி4வர்ணிஸிதெ3 நினகெ3ந்த3 ||155**

வ்யோமகேஷ - ருத்ரர்; விரிஞ்சி - பிரம்மன்; வாஸவ - இந்திரன்; தாமரஸ தள நயன - ஸ்ரீராமன்; இவரு - இவர்கள் அனைவரும்; மஹா மஹிமரு - அனைவரும் மகிமர்கள்; ஈ வ்ரீஹிய நரெதலெகர விவாதவனு - இந்த ராகி / அரிசியின் விவாதத்தினை; ராம ஸபெயலி தீரிதுது - ஸ்ரீராமனின் சபையில் தீர்ந்தது; ஸுத்ராமனோலகதல்லி கேள்தெவு - ஸ்ரீராமனின் அரசவையில் தீர்ந்தது என்பதை கேட்டோம்; ராமதான்யத கதெயனு - ராம தான்யத்தின் கதையினை; அபிவர்ணிஸிதெ நினகெந்த - உனக்காக நான் வர்ணித்தேன், கேள் என்றார் (ஷாண்டில்ய முனிவர், தர்மராஜனிடம்).

ருத்ரர், பிரம்மன், இந்திரன், ஸ்ரீராமன் - இவர்கள் அனைவரும், மகிமர்கள். இந்த ராகி / அரிசியின் விவாதத்தினை, ஸ்ரீராமனின் சபையில் தீர்ந்தது. ஸ்ரீராமனின் அரசவையில் தீர்ந்தது என்பதை கேட்டோம். ராம தான்யத்தின் கதையினை, உனக்காக நான் வர்ணித்தேன், கேள் என்றார் (ஷாண்டில்ய முனிவர், தர்மராஜனிடம்).

**ஆலிஸிதெ3னெலெ முனிப நீவித3**
**பேளெ கேள்தெ3னு மேலெ ஸஜ்ஜன**
**ஜால தணியிது ஸகல கர்ணாம்ருததி3 ரஞ்சிஸிது**
**ஹேளலெனத3 மனத3 பே3ஸர**
**பீ3ளுகொண்டு3து3 ஹருஷ2 சித்ததெ3**
**தாளி ஹரியித்தெனுத முனிபத3கெரகி3 கைமுகி3த3 ||156**

ஆலிஸிதெ நெலெ முனிப - உண்மையான நிலையை அறிந்தேன், முனிவரே; நீவித பேளெ கேள்தெனு - நீங்கள் இதை சொன்னதை, கேட்டேன்; மேலெ ஸஜ்ஜன ஜால தணியிது - ஸஜ்ஜனர்களின் சந்தேகங்கள் தீர்ந்தன; ஸகல கர்ணாம்ருததி ரஞ்சிஸிது -

அனைவரின் காதுகள் அமிர்தத்தால் நனைந்தது; ஹேளலேனத - இன்னும் என்னவென்று சொல்வேன்?; மனத பேஸர பீளுகொண்டுது - மனதின் கவலைகள் பறந்தன; ஹருஷ சித்ததெ தாளி - மனதில் மகிழ்ச்சியானது; ஹரியித்து எனுத - பாய்ந்தது, என்றவாறு; முனிபதகெ எரகி கைமுகித - முனிவரின் கால்களில் விழுந்து எழுந்து கை குவித்து நின்றான், தர்மராஜன்.

உண்மையான நிலையை அறிந்தேன், முனிவரே. நீங்கள் இதை சொன்னதை, கேட்டேன். ஸஜ்ஜனர்களின் சந்தேகங்கள் தீர்ந்தன. அனைவரின் காதுகள், அமிர்தத்தால் நனைந்தது. இன்னும் என்னவென்று சொல்வேன்?. மனதின் கவலைகள் பறந்தன. மனதில் மகிழ்ச்சியானது, பாய்ந்தது என்றவாறு, முனிவரின் கால்களில் விழுந்து எழுந்து கை குவித்து நின்றான், தர்மராஜன்.

**அரஸ நீ மனவொலிது[3] கேளத[3]**
**சரிதெ தானொந்தி[3]ல்ல லோகதி[3]**
**பரம புண்யத[3] ராமகதெ[2]யித[3] கேள்தெ[3] நீனிந்து[3]**
**கொரதெயுண்டே இஷ்டபோ[4]க[3]வ**
**ஹரிகொடு[3]வ நிமகி[3]ன்னுயெனுதுப**
**சரிஸி களுஹிஸிகொண்டு[3] முனி ஹொரவண்ட நாஶ்ரமகெ[1]**
**||157**

அரஸ நீ மனவொலிது கேளத - அரஸனே, தர்மராஜனே, நீ நன்றாக கவனித்து கேட்காத; சரிதெ தானொந்தில்ல லோகதி - கதை என்று இந்த உலகில் எதுவும் இல்லை; பரம புண்யத ராமகதெயித - மிகவும் புண்ணியத்தை தரக்கூடியதான ராம கதையினை; கேள்தெ நீனிந்து - நீ இன்று கேட்டாய்; கொரதெயுண்டெ - உனக்கு எவ்வித குறைகளும் வராது; இஷ்டபோகவ நிமகின்னு ஹரிகொடுவ - நீ இஷ்டப்பட்ட விஷயங்களை இனி ஸ்ரீஹரி உனக்கு அருள்வான்; எனுத - என்று சொல்லியவாறு; உபசரிஸி களுஹிஸிகொண்டு - உபசாரங்களை பெற்றுக் கொண்டு; முனி ஹொரவண்டனு ஆஷ்ரமகெ - ஷாண்டில்ய முனிவர் தன்னுடைய ஆசிரமத்திற்கு புறப்பட்டார்.

அரஸனே, தர்மராஜனே, நீ நன்றாக கவனித்து கேட்காத; கதை என்று இந்த உலகில் எதுவும் இல்லை. மிகவும் புண்ணியத்தை தரக்கூடியதான ராம கதையினை, நீ இன்று கேட்டாய். உனக்கு எவ்வித குறைகளும் வராது. நீ இஷ்டப்பட்ட விஷயங்களை இனி ஸ்ரீஹரி உனக்கு அருள்வான் என்று சொல்லியவாறு,

உபசாரங்களை பெற்றுக் கொண்டு, ஷாண்டில்ய முனிவர் தன்னுடைய ஆசிரமத்திற்கு புறப்பட்டார்.

**ஶரதி$^{4}$ஶயன முகுந்த$^{3}$ ஸசரா**
**சரப$^{4}$ரித நிர்கு$^{3}$ண நிராமய**
**ஸுர நரோரக$^{3}$வந்த்$^{3}$ய வரபுரதா$^{3}$தி$^{3}$ கேஶவன**
**சரணத$^{3}$ங்கி$^{1}$தவாகி$^{3}$ பேளித$^{3}$**
**பரமதா$^{4}$ன்யத$^{3}$ சரிதெ ஸந்தத**
**த$^{4}$ரெயொளிந்தொ$^{3}$ப்பிஹுது ஆசந்த்$^{3}$ரார்க்க பரியந்த ||158**

ஶரதிஷயன - பாற்கடலில் படுத்திருப்பவனே; முகுந்த - முகுந்தனே; ஸசராசரபரித - சராசரங்கள் அனைத்திலும் வியாபித்திருப்பவனே; நிர்குண - சத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு கட்டுப்படாதவன் / அவற்றிற்கு அப்பாற்பட்டவன்; நிராமய - குறைகள் அற்றவன்; ஸுர நரோரக வந்த்ய - ஸுரர்களின், நரர்களின் கஷ்டங்களை பரிகரிப்பவன்; வரபுரதாதி கேஶவன- சிறந்த க்ஷேத்திரத்தில் இருப்பவனான ஆதி கேசவனின்; சரணதங்கிதமாகி பேளித - பாதங்களில் சமர்ப்பிக்கப்பட்டு சொல்லிய; பரம தான்யத சரிதெ - இந்த சிறந்த தானியத்தின் சரித்திரமானது; ஸந்தத - எப்போதும்; தரெயொளிந்தொப்பிஹுது - இந்த பூமியில் நிலைத்திருந்து பரவட்டும்; ஆசந்த்ரார்க்க பரியந்த - சந்திரன், சூரியன் ஆகியவை இருக்கும்வரைக்கும்.

பாற்கடலில் படுத்திருப்பவனே, முகுந்தனே. சராசரங்கள் அனைத்திலும் வ்யாபித்திருப்பவனே. சத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு கட்டுப்படாதவன் / அவற்றிற்கு அப்பாற்பட்டவன்; குறைகள் அற்றவன்; ஸுரர்களின், நரர்களின் கஷ்டங்களை பரிகரிப்பவன்; சிறந்த க்ஷேத்திரத்தில் இருப்பவனான ஆதி கேசவனின் பாதங்களில் சமர்ப்பிக்கப்பட்டு சொல்லிய இந்த சிறந்த தானியத்தின் சரித்திரமானது எப்போதும் - சந்திரன், சூரியன் ஆகியவை இருக்கும்வரைக்கும்.- இந்த பூமியில் நிலைத்திருந்து பரவட்டும்.

**ஶ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

***